ஆரோக்கியமுள்ள ஜனங்கள்
தினமும் லைப்பாய் சோப் உபயோ
கித்துக் குளிக்கிறார்கள்!

அது தினந்தோறும்* சேரும் அழுக்
கிலுள்ள கிருமிகளை
கழுவிக் களைகிறது!




*தினமும் நம் தேகத்தில் ஒட்டிக்கொள்ளும் சாதாரண அழுக்கிலுள்ள கிருமிகளினால் பல வியாதிகள் வரும் அபாயம் எல்லோருக்கும் உண்டு. அதனால்தான் நீங்கள் லைப்பாய் சோப்பை உபயோகிக்க வேண்டும்—அது சரீரத்தைச் சுத்தமாக்குவதுடன் புத்துணர்ச்சியையும் தருகிறது!

L. 234-10 TM

இந்தியாவில் தயாரித்தது

மலர் 15 இதழ் 21

# கல்கி

## பொருளடக்கம்

மன்மத ௵ மாசி 21

மார்ச் 4, 1956



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

## ஒரு படத்தின் சிறப்புக்கு நக்ஷத்திர நடிகர்கள் மட்டும் காரணமாவதில்லை!

கதாபாத்திரங்களுக்குப் பொருத்தமான நடிகர்கள்
நன்றாக அமைக்கப்பட்ட கதை
கதையின் உயிர்நாடிகளைப் புலப்படுத்தும் டைரக்ஷன்

அனைத்துக்கும் மேலாக

**படம் உருவாகும் கலைக்கூடத்தின் உயர்வு**

இவைகளே படத்திற்குச் சிறப்பு தருபவை.

இவையாவும் நிறைந்த

ஏவி எம் புரொடக்ஷன்ஸ்

# நாகதேவதை

....நாகபஞ்சமியின் கதை....

# தமிழ்ச் சித்திரம்

டைரக்ஷன் : CH. நாராயணமூர்த்தி • வசனம் : வலம்புரி சோமநாதன்



இப்போது சென்னையிலும் மற்றும் தென்னடெங்கும்

## 125 நகரங்களில்

நடைபெறுகிறது!




சென்னையில் கெயிட்டி - ராஜகுமாரி - பாரத் - சயானி



மலர் 15
இதழ் 31

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — *பாரதியார்*

மன்மத ௵
மாசி மீ 21

# பாராட்டுகிறோம்!

தஞ்சாவூரில் நம்முடைய நிதி மந்திரி தமது கருத்தைச் சந்தேகத்துக்கு இடமில்லாமல் வெளியிட்டிருக்கிறார். இதை ஊர்ஜிதப் படுத்திச் சென்னைப் பத்திரிகை நிருபரிடம் விளக்கி யிருக்கிறார். லாப நஷ்டங்களை விவரமாக எடுத்துக் காட்டி, பயப் படுகிறவர்களுக்குப் பாதுகாப்புகளும் எடுத்துச் சொல்லி, தெளிவுபடுத்தி யிருக்கிறார். தீவிர விவாதத்துக்கும், பெருங் கடையடைப்புகளுக்கும் விஷயமாகி வந்திருக்கிற ஒரு பிரச்னையைப் பற்றி மிகத் தெளிவாக மூடி மறைக்காமல் பேசியிருப்பது மிகவும் போற்ற வேண்டிய நிகழ்ச்சி. மந்திரிகளுக்கு இடையில் அபிப்பிராய பேதம் காட்ட லாகாது என்று எண்ணி, மக்களுக்குத் திட்டமாக எந்தவிதமான வழியும் காட்டாமல் இப்படியும் அப்படியும் பட்டுக் கொள்ளாமல் பேசிக் கொண்டே யிருப்பது ஒரு முறை. அதை விட்டு விட்டுத் தைரியமாக நாட்டுக்கு எது நன்மை என்பதை ஆராய்ந்து, தான் கண்ட முடிவை விளக்கிப் பகிரங்கமாகக் கூறுவது நாட்டு மக்களின் நலத்தில் அக்கறை கொண்ட தலைவர்கள் கடைப் பிடிக்கும் முறை. இந்த முறையில் திரு சுப்ரமணியம் பேசி யிருக்கிறார்.

நீடித்த நன்மையோ தீமையோ விளைவிக்கும்படியான ஒரு விஷயத்தில், தலைவர்கள் நன்றாக ஆராய்ந்து தங்களுடைய அபிப்பிராயத்தை ஜனங்களுக்கு எடுத்துக் காட்டுவது கடமை. அப்படிச் செய்யாமல் பெரும்பாலோர் எப்படிச் சொல்கிறார் களோ அப்படி நடக்கட்டும், அவர்களுடைய ஆதரவைப் பெறுவதே என்னுடைய கடமை என்று சொல்லிக்கொண்டு போவது சரியல்ல. மக்களுடைய சம்மதம் வேறு, மக்களை நடத்துவது வேறு. இரண்டும் கூடினாலேதான் குடியரசுக்கு உயிர் இருக்கும். மக்களுக்கு நல்ல வழியைக் காட்டி, அதற்கு மக்களின் ஆதரவைப் பெறுவதே தலைவர்களின் பொறுப்பு. இந்த உண்மையைத் திரு சுப்ரமண்யத்தின் தைரியமான பேச்சில் காண்கிறோம்.

பெரும்பாலோருடைய வாக்கு எடுத்து, பொறுப்பை அவர்கள் பேரில் போட்டு விட்டு அவர்கள் எப்படிச் சொல்கிறார்களோ அப்படிச் செய்வதே குடியாட்சி என்று சிலர் ஒரு சுலபமான வழியைக் கடைப்பிடிக்கிறார்கள். இந்தக் கொள்கையைக் கொஞ்சம் ஆராய்வோம். பெரும்பாலோருடைய அபிப்பிராயம் என்பது ஒரு கிராமத் தைப் பொறுத்ததா, ஒரு தாலூகாவைப் பொறுத்ததா, அல்லது ஒரு ஜில்லாவைப் பொறுத்ததா? இந்தியக் குடியரசை நூறு பிரிவுகளாகப் பிரித்து விட்டுச் சின்னாபின்னம் செய்தால், பாரத நாட்டில் மக்கள் ஆட்சி நிலை நிற்குமா? ஒரு பிரதேசத்திலுள்ள பெரும்பாலோரின் எண்ணத்துக்கும், அண்டைப் பிரதேசத்திலுள்ள பெரும்பாலோரின் எண்ணத்துக்கும், வேறுபாடு ஏற்பட்டால் என்ன செய்வது? அவரவர்களுடைய பாடு அவர்களுடையது என்று ஒவ்வொரு ஊருக்கும் ஒவ்வொரு பிரதேசத்துக்கும் விட்டு விட்டால், அது மக்களாட்சி ஆய்விடாது. தற்கால நிலைமையில் ஒரு ஊரின் நன்மை தீமை அடுத்த ஊரையும் தீண்டுகிறது. ஒரு பிரதேசத்தின் உரிமைகள் அண்டைப் பிரதேசத்து உரிமைகளையும் பாதிக்கும். இதையெல்லாம் சாவதானமாக ஆராய்ந்தால் பாரத தேசம் ஒன்று என்பதும், எத்தகைய விஷயங்களைக் கிராமத் தாருக்கு விட்டு விடலாம், எத்தகைய விஷயங்களைப் பாரத மக்கள் அனைவரும் சேர்ந்து ஆராய வேண்டும் என்பதெல்லாம் விளக்கமாகும். எந்த விவாதத்திலும் ப்ளெபிஸிட் என்று ஒரு ஏக மூலிகையைப் பிரயோகித்தோமானால், குழப்பத்தைத் தவிர வேறு பயனுண்டாகாது. ப்ளெபிஸிட்டுக்கும்—, அதாவது மக்களிடம் வாக்கெடுத்து முடிவு செய்து விடுவோம் என்பதற்கும், கடையடைப்புக்கும் அதிக வித்தியாசமில்லை. என்ன என்ன காரணங்களினால் கடைக் கதவுகளை ஒரு நாள் மூடுகிறார்களோ, அதே காரணங்களின் பயனாக, ப்ளெபிஸிட் பெட்டியில் சீட்டும் போடுவார்கள். ஆணும் பெண்ணும் போடுவார்கள். குழந்தைகளும் ஊர்வலம் நடத்துவார்கள்.

ராஜ சாஸ்திரமும் நீதி நூலும் பிரயோகிக்க வேண்டிய இடத்தில் வாக்குப் பெட்டியை நுழைப்பது நாட்டுக்கு நன்மை தராது.

ஒரு பிரதேசம் வறுமையில் உழன்று மக்கள் தவித்தால், அண்டைப் பிரதேசம் செல்வத்தை வைத்துக் கொண்டு சுகமாக இருக்க முடியாது. திருட்டும் வறுமையிலிருந்தும் ஏற்படும் மற்ற அவதிகளும் பிரதேச எல்லைக்குள் அடங்கி நிற்காது. நிறுத்தவும் முடியாது. பிச்சையும் திருட்டும் மோசமும் வறுமையிலிருந்து விளையும் குற்றங்கள். குற்றங்களை வரம்பு கட்டித் தடுத்தாலும் நிம்மதி இராது.

பாரத நாட்டின் சுக நிலை, பாகம் போடக் கூடிய பொருள் அல்ல. அது ஒரு அவிபக்த மானியம். அதாவது பாகஸ்தர் அனைவரும் ஏகோபித்து அனுபவிக்க வேண்டிய ஒரு சொத்து. நீர் நிலைகளும், மேடும் பள்ளமும், பூமியிலிருந்து தோண்டி எடுக்கும் தாதுப் பொருள்களும் இவையெல்லாம் ஒரு பிரதேசம் மற்றொரு பிரதேசத்திற்கு உதவி செய்து பயன் பட்டு வந்தால் ஒழிய, பாரத நாட்டின் செல்வ நிலை வியாபார நிலை எதுவுமே மேம்பாடு அடையாது. 'எனது, உனது' என்கிற குடும்ப உணர்ச்சியை விட்டுவிட முடியாமல் போனாலும், இந்த உணர்ச்சிகளைக் குலத்துக்கும், ஜாதிக்கும், பிரதேசத்துக்கும் ஏற்றி நடந்து கொண்டோமானால், தேசபக்தி என்பது மாயமாகப் போகும். சுதந்திரம் சம்பாதிப்பதற்கு இந்த உணர்ச்சிகள் தடையாக இருந்தன. அன்னிய ஆட்சி முதன் முதலில் ஏற்படுவதற்கு இவைகளே காரணமாக இருந்தன. இவற்றை மறந்து பாரத மக்கள் அனைவரும் ஒன்றுபட்டு நடந்ததே சுதந்திரம் அடைவதற்குச் சாதனம் ஆயிற்று. அவற்றை மறுபடியும் உண்டாக்கிப் பெருக்கிக் கொண்டோமானால், சுதந்திரத்தின் பயனை இழப்போம். சந்தேகம் இல்லை. பாரத நாட்டின் வரித்திட்டமும் வரவு செலவுத் திட்டமும் செல்வப் பெருக்குத் திட்டம் எல்லாவற்றையும் ஒருமித்து யோசித்து ஒரே பட்டியலில் தான் எழுதியாக வேண்டும்.

மலையாளம் பேசும் பிரதேசமும் தமிழ் பேசும் பிரதேசமும் ஒன்றானால் அந்த ஒற்றுமையின் நன்மைகள் ஒரு பிரதேசத்துக்கு மட்டுமல்ல. இரு பாலாருக்கும் மிக நல்ல பயன் உண்டாகும். அவற்றையெல்லாம் ஒவ்வொன்றாகப் பிரித்து எடுத்துச் சொன்னால் ஒரு வியாபாரம் போல் ஆகும். ஒற்றுமையைப் பேரம் பேசி வாங்க முடியாது. சில லாபங்களை எடுத்துக் காட்டலாம். சில லாபங்கள் எடுத்துக் காட்ட முடியாத லாபங்கள் ஆகும். தென்னாடு ஒரு நாடாக நிர்வாகம் நடத்தப்பட்டால் அதனால் பெரிய நன்மைகள் உண்டாகும் என்பதை உணர்ந்துதான் அறிஞர்கள் அதை வற்புறுத்தினார்கள். திரு சுப்பிரமண்யம் அவர்கள் இதைக் கண்டே தான் தைரியமாகவும் தீவிரமாகவும் தஞ்சையில் பேசினார். அகில இந்திய காங்கிரஸ் தீர்மானமானது காங்கிரஸ் கட்சியில் சேர்ந்த அனைவருக்கும் காங்கிரஸ் நிர்வாகங்களுக்கும் வகுத்துக் காட்டப்பட்ட வழியாகும். பிரதேச வாரியாக அதை எதிர்ப்பதும் தடுப்பதும் காங்கிரஸ் ஒற்றுமைக்கு மாறுபட்டதாகும். காங்கிரஸ் ஒற்றுமை குலைந்தால், என்ன விளையும் என்பதை அனைவரும் யோசிக்க வேண்டும். பத்து அல்லது இருபது அல்லது நூறு உத்தியோகங்களை யாரோ எடுத்துக்கொண்டு போவார்கள் என்று அனாவசியமாகப் பயந்து மக்களின் நிரந்தர லாபத்தை இழந்துவிடலாகாது என்று திரு சுப்ரமண்யம் வெகு அழுத்தமாகப் பேசியிருக்கிறார்.

தென்னாட்டைப் பிரித்துச் சின்னாபின்னம் ஆக்கப் பார்க்கிறார்கள் என்று வடநாட்டுத் தலைவர்களைக் குறை சொல்லி வந்தது போக, இப்போது அவர்களே ஒன்றுபடச் சொல்லும் போது அதைத் தென்னாட்டார் மறுத்து நாம் சின்னாபின்னமாகத்தான் போவோம் என்று சொல்வது வியப்பிலும் வியப்பு.

தக்ஷிண பிரதேசம் உண்டாகுமா, இதற்கு இவ்வளவு எதிர்ப்பு இருக்கிறதே, சரியோ தவறோ எல்லாரும் வேண்டாம் என்கிறார்களே, என்று பயந்து நம்முடைய கடமையை நாம் செய்யாமல் இருப்பது தவறாகும். ராஜ நீதி அறிந்தவர்கள் தாங்கள் கண்ட உண்மையை எடுத்துச் சொல்ல வேண்டியது கடமை. அதைச் சொல்லாமல் இருப்பது கடமையைச் செய்யத் தவறியதாகும். 'பயனைக் கருதாதே. கடமையைச் செய்' என்பது நம்முடைய நாட்டு அறநெறி. எதிலுமே ஓரளவு நஷ்டமோ தீமையோ இருந்தே தீரும். தென்னாட்டின் நன்மைக்காகச் சில சிறு நஷ்டங்களையும் ஏற்றுக் கொள்ள வேண்டியதாகும். அதற்காகப் பயந்து போகக் கூடாது.

புகையில்லாத நெருப்பு இல்லை. சேறில்லாத குளமும் கிடையாது. சேற்றைக் கலக்காமல் குளிக்க வேண்டும். தண்ணீர் எடுத்து அருந்த வேண்டும். சேற்றுக்குப் பயந்து குளத்தண்டை போகாமல் இருப்பது கூடாது. குளத்தில் இறங்கிச் சேற்றைக் கலக்கிவிடுவதும் கூடாது. துவேஷத்தைக் கிளப்பாமல், பொறாமையைக் கிளப்பாமல் தென்னாட்டின் ஒற்றுமையைத் தோற்றுவிக்க வேண்டும். அந்த ஒற்றுமையிலிருந்து புதிய சக்தியைக் காண்போம்.

# நம்பிக்கையைச் சோதிக்க வேண்டாம்!

இந்தியப் பொது மக்கள் தங்கள் சர்க்கார் மீது வைத்துள்ள நம்பிக்கையைச் சிறிதும் குறை கூற முடியாது. சர்க்கார் செய்யும், செய்து வரும் காரியங்களில் எல்லாம் மக்கள் தங்கள் முழு மனத்துடன் தங்களால் முடிந்த வரையில் ஒத்துழைத்து வருகிறார்கள். சர்க்கார் கடன் கேட்டால் குறிப்பிட்ட தேதிக்கு முன்னதாகவே அவர்கள் கேட்ட தொகைக்கு மேலேயே கொடுக்கிறார்கள். எத்தனை வரி போட்டாலும், எந்த மாதிரி வரி போட்டாலும் முணுமுணுக்காமல் கொடுத்து வருகிறார்கள். இந்திய சர்க்கார் மீது தங்களுக்கு உள்ள நம்பிக்கையை, இந்திய நாட்டின் வளர்ச்சியில் தங்களுக்கு உள்ள ஆர்வத்தை இதைவிடத் தெளிவாக எப்படிக் காட்ட முடியும்!

அப்படி இருந்தும் பொது மக்களின் நம்பிக்கை சோதனைக்கு உள்ளாக்கப்படுகிறது. பொது மக்களின் வரிப் பணம், ஏழை மக்கள் இரத்த வியர்வை சிந்த உழைத்துப் பாடுபட்ட பணம், இந்த தேசத்தின் வளர்ச்சிக்காக இந்திய சர்க்கார் மீது நம்பிக்கை வைத்துக் கொடுக்கப்படும் பணம் சரிவர உபயோகப் படுத்தப்பட

வில்லை என்றால் அதை விட வருத்தப் படக் கூடிய விஷயம் வேறு என்ன இருக்க முடியும்!

பொது மக்கள் கொடுக்கும் தொகை சர்க்காரின் திறமைக் குறைவினால் வீணாகி வருவதற்குப் பல நிகழ்ச்சிகள் அடிக்கடி நடை பெற்று வருகின்றன. சில ஆண்டுகளுக்கு முன்பு நடந்த ஜீப் ஊழல், ரஸாயன எரு ஊழல் போன்ற பல ஊழல்கள் பொது மக்களின் பல லட்சக்கணக்கான தொகைகளை விழுங்கி ஏப்பம் விட்டு விட்டன. அதற்குப் பிறகு இன்னும் பல ஊழல்கள் வெளியாயின. அயல்நாட்டில் இந்தியத் தூதர் காரியாலயம் ஹோட்டல் நடத்தியதில் ஏற்பட்ட நஷ்டம், நேபாள அரிசி வாங்கிய இனத்தில் ஏற்பட்ட நஷ்டம், இங்கிலாந்தில் இந்திய சர்க்கார் கொடுத்த பென்ஷன் தொகைக்கு வருமான வரி வசூலிக்கப்படாதது—இப்படிப் பல வழிகளில் பல லட்சங்கள் பறி போயின.

ஆனால் மேற்படி ஊழல்களின் கதை அத்துடன் முடிந்து விடவில்லை. சென்ற வாரம் மக்கள் சபையில் சமர்ப்பிக்கப்பட்ட 1953–54ம் வருஷக் கணக்குப் பரிசீலனை அறிக்கையிலிருந்து (ஆடிட்டர் ரிப்போர்ட்) மற்றும் பல பயங்கரமான ஊழல்கள் வெளியாகி உள்ளன.

1. மோட்டார் வாகனங்கள் ஏற்கனவே உபரியாக இருக்கும் போது மேலும் மோட்டார் வாகனங்கள் வாங்கப்பட்டிருக்கின்றன. இதற்கு 7 கோடி ரூபாய் வீண்செலவு.
2. எந்த விதமான பொருள் வேண்டும் என்று சரியாகக் குறிப்பிடப்படாததால் 25 லட்சம் ரூபாய்க்கு மேல் மிகவும் பழசாகிப் போன சாமான்கள் பாதுகாப்பு இலாகாவின் தலையில் கட்டப்பட்டிருக்கின்றன.
3. பெட்ரோல் சேமித்து வைக்க 7 லட்சம் ரூபாய் செலவில் 16 டாங்கிகள் கட்டப்பட்டன. இதில் 12 டாங்கிகள் உபயோகிக்கப்பட வில்லை. மீதமுள்ள 4 டாங்கிகள் சரியாகக் கட்டப்படாததால் அதில் இருந்த பெட்ரோல் எல்லாம் ஆவியாக மாறிய அலங்கோலத்தில் ஏற்பட்ட நஷ்டம்.
4. ஒரு தொழிற்சாலைக்குத் தேவையான வார்ப் படங்கள் தயாரிக்கப்பட்டன. தயாரித்த வார்ப்படங்கள் சரியாக இல்லாததால் ஆர்டர்கள் ரத்து செய்யப்பட்டன. இதனால் ரூ. 1,27,832 நஷ்டம் உண்டாயிற்று.
5. விமானப்படை அதிகாரிகளுக்கு ஒரே பிரயாணத்துக்கு இருமடங்கு பிரயாணப்படி கொடுக்கப்பட்டிருக்கிறது. இதன் மூலம் ஏற்பட்டிருக்கும் நஷ்டம்.

சர்க்கார் கணக்குப் பரிசீலனை அறிக்கையிலிருந்து மேலே குறிப்பிட்ட நிதி நிர்வாக ஊழல்கள் வெளியாகி யிருக்கின்றன.

எனவே, இத்தகைய ஊழல்களைச் சர்க்கார் நன்கு விசாரித்து அதற்குப் பொறுப்பானவர்களைக் கடுமையாகத் தண்டிக்க வேண்டும். இனியும் இவ்வித ஊழல்கள் தொடர்ந்து நடைபெறாமல் இருப்பதற்குக் கண்டிப்பான நடவடிக்கைகளைக் கைக் கொள்ள வேண்டியது மிகவும் அவசரமும் அவசியமுமாகும்.

# சபாநாயகர் மாவ்ளங்கர்

தில்லி மக்கள்-சபைக்கு உண்டாகி யிருக்கும் புகழுக்கும், பெருமைக்கும் ஒரு முக்கியமான காரண புருஷராக இருந்தவர் திரு மாவ்ளங்கர். பல காலமாகச் சுகக் குறைவாக இருந்தவர்; சென்ற திங்கட் கிழமையன்று மறைந்து விட்டார். சுதந்திரம் பெற்ற நாட்டின் பேரவையின் கௌரவத்துக்குத் தகுந்த ஒரு சபாநாயகர். அதற்கென்றே பிறந்தவர் போல் பதவி வகித்து நடத்தினார். காலஞ்சென்ற வல்லபாய் படேல் அவர்களுக்கு ஆப்த நண்பராக அகமதாபாத்திலேயே காங்கிரஸ் கிளர்ச்சிகளில் சேர்ந்து உழைத்தவர். அப்பு அழுக்கு என்பது என்னாளவும் இல்லாத உத்தமர். யாருக்கும் மனம் புண்படாமல், எந்தக் கட்சியினரும் குறை கூற இடமில்லாமல், மிகச் சிக்கலான காலங்களிலும் சந்தர்ப்பங்களிலும் கூடத் தைரியமாகவும் சாமர்த்தியமாகவும் தேசத்தின் நன்மையை மறக்காமல் விவாதங்களைக் கண்காணித்து வந்தார். அது மட்டுமே அல்ல, பெரிய தர்மஸ்தாபனங்களுக்காக வசூலித்த பணங்களை யாருடைய மேற்பார்வையின் கீழ் ஒப்படைத்து வைப்பது என்று தேடும் போதெல்லாம் திரு மாவ்ளங்கர்தான் அதற்குத் தகுந்தவர் என்று அவரிடம் பல நிதிகளின் பொறுப்புக்கள் ஒப்படைக்கப்பட்டு வந்தன. கஸ்தூரிபா நிதி, காந்திநிதி, இன்னும் அகமதாபாத்தில் பல நிதிகள் இவருடைய பாதுகாப்பில் இதுவரையில் இருந்து வந்தன. ஒரு ரூபாயும் வீண் செலவாகாமல் மிக ஜாக்கிரதையாகப் பார்த்து வந்தார்.



ஒருவர்பின் ஒருவராகப் பெரியோர்களை இழந்து வருகிறோம். நமது நாட்டுக்கு இது ஒரு சோதனைக் கட்டம். தவமும், தெய்வ பக்தியும், தேச பக்தியும், அறிவும், பரந்த நோக்கமும், அன்பில் ஊறின உள்ளமும் கொண்டவர்கள் நாட்டுக்கு வேண்டும். காலனுடைய காரியக் கிரமத்தை எதிர்க்க முடியாது. தேசத்தின் பொறுப்பை எடுத்துக் கொள்ளக்கூடிய இளைஞர்கள் வரிசைக் கிரமமாக முன் வந்தாலொழிய, நாட்டின் நிர்வாகம் சரிவர நடைபெறாது.

மாவ்ளங்கர் அவர்களுடைய மறைவு துக்கம் தரும் நிகழ்ச்சி. அதுவே இளைஞர்களுக்குத் தங்கள் கடமையை நினைவு படுத்தும் நிகழ்ச்சியும் ஆகும்.

# என்ன சேதி!

## மகாமக உற்சவம்

கும்பகோணம் மகாமகம் உத்சவம் வெகு சிறப்பாக நடைபெற்றது. லட்சோப லட்சம் மக்கள் மகாமகக் குளத்தில் புனித நீராடினர். கும்பகோணத்திலிருந்து திரும்பி வந்த மக்கள் எல்லாரும் வாயார மனமாரக் கும்பகோண நகரவாசிகளையும், நகராண்மைக் கழகத்தையும் பாராட்டுகிறார்கள். விரிவான போலீஸ் தபால் தந்தி ஏற்பாடுகளையும், சுகாதார ஏற்பாடுகளையும், ரயில்வே அதிகாரிகள் ஏற்படுத்திக் கொடுத்த வசதிகளையும் புகழ்ந்த வண்ணம் இருக்கிறார்கள். பாரத் சாரணப் படையினர், கூட்டத்தில் காணமற் போன குழந்தைகளைத் தேடி அவரவர் பெற்றோர்களிடம் சேர்ப்பித்த தொண்டினை எல்லோரும் பாராட்டுகிறார்கள். அன்னதான சிவன் சங்கத்தார், காஞ்சி காமகோடி பீடாதிபதி, வைசியர் சத்திரப் பொறுப்பாளர்கள் இன்னும் பலரும் லட்சோப லட்சம் பேர்களுக்கு அன்னதான கைங்கரியம் செய்து யாத்ரீகர்கள் பசிப்பிணியால் வாடாமலிருக்கச் செய்திருக்கிறார்கள். இவற்றையெல்லாம் கேட்கக் கேட்க உள்ளம் ஆனந்தத்தால் பெருமிதம் அடைகிறது. சர்க்கார் நிர்வாகிகளைப் போற்றுவதா, ஒழுங்காக நடந்துகொண்ட பொதுமக்களைப் போற்றுவதா என்று தெரியாமல் திணறவேண்டியிருக்கிறது. உண்மையில் சர்க்கார், சங்கங்கள், பொது மக்கள் இத்தனை பேரும் பாராட்டப்பட வேண்டியவர்கள் தாம். ஆனால் இவர்களுக்கு மேலும் போற்றிப் பாராட்டி, வணக்கம் செலுத்தப்பட வேண்டியவர் ஒருவர் இருக்கிறார். அவர்தான் தென்னாடுடைய சிவன். தமிழ் மக்களுக்கு நல்ல பெயரும் புகழும் வாங்கித் தந்தமைக்காகவும் மீண்டும் ஒரு முறை அவருக்கு வணக்கம் செலுத்துகிறோம்.

## புது ரயில் பெட்டிகள்

தமிழகத்துத் தொழிலாளர்களும் தொழில் துறையில் ஈடுபட்டிருப்பவர்களும் தமிழ்ப் பொதுமக்களும் மகிழ்ச்சியடையத்தக்க நிகழ்ச்சி சென்ற வாரம் நிகழ்ந்திருக்கிறது. சென்னைக்கு அருகில் பெரம்பூரில் இண்டக்ரல் கோச்பாக்டரி என்ற பெயரில் பிரம்மாண்டமான ரயில்பெட்டி செய்யும் தொழிற்சாலை நிர்மாணிக்கப்பட்ட விஷயம் தமிழ்ப் பொது மக்களுக்கு ஏற்கனவே தெரியும். இத்தொழிற்சாலையைச் சென்ற ஆண்டு நமது பாரதப் பிரதமர் நேரு திறந்து வைத்ததும் நினைவிருக்கலாம். அப்பொழுதிலிருந்து இந்தப் பிரம்மாண்ட தொழிற்சாலை மிக சுறுசுறுப்போடு வேலை செய்து ஏழு ரயில் பெட்டிகளைச் செய்து முடித்துச் சென்ற வாரம் பம்பாய் மாகாணத்துக்கு அனுப்பி வைத்திருக்கிறது. முதல் முதல் செய்யப்பட்ட இந்த ஏழு ரயில் பெட்டிகளைப் பம்பாய் மாகாணத்துக்கு அனுப்பும் காலை, தொழிற்சாலை அதிகாரிகளும் தொழிலாளர்களும் திருநாளாகவே கொண்டாடியிருக்கின்றனர். இவ்வைபவத்துக்குத் தலைமை வகித்த பிரதம நிர்வாக அதிகாரி திரு கே. சடகோபன் அவர்கள், தாங்கள் எதிர்பார்த்ததை விட சீக்கிரத்தில் ரயில் பெட்டியைச் செய்து முடித்த தொழிலாளர்களைப் பாராட்டினார்.

முதல் 25 பெட்டிகளைப் பம்பாய்க்கும், அடுத்த 75 பெட்டிகளைச் சென்னை ரயில்வேத் தொழிற் கூடத்துக்கும் அனுப்பத் தீர்மானிக்கப்பட்டிருப்பதாக அறிவித்திருக்கிறார்கள். தமிழகம் தொழில் துறையில் முன்னேறி வருவதைக் கேட்டுக் குதூகலமடையாதவர் யார்தான் இருக்க முடியும்?

## எல்லை விஷமம்

இதற்கு முன்பு பலமுறை பாரத எல்லையில் பாகிஸ்தானின் தகராறுகள் நடைபெற்றிருக்கின்றன. இப்பொழுது மீண்டும் அதேமாதிரி தவற்றைப் பாகிஸ்தான் செய்திருக்கிறது.

சமீபத்தில் கட்ச் பிரதேசத்தில் சாட்பீடா என்ற 35 சதுர மைல் கொண்ட புல்வெளிப் பிரதேசத்தில் தகராறு நடந்தது. அங்குள்ள மக்களைப் பாரத சர்க்காருக்கு எதிராகத் தூண்டி வந்திருக்கின்றனர். அப்பகுதி மக்கள் பாரத சர்க்காருக்கு மேய்ச்சல் கூலி கட்டி விட்டு, தங்கள் ஒட்டகங்களை மேய்ப்பார்கள். பாரத எல்லையில் புகுந்த பாகிஸ்தான் ராணுவத்தினர், பாரத மக்களை, பாரத சர்க்கார் அதிகாரிகளுக்கு மேய்ச்சல் கட்டணத்தைச் செலுத்த வேண்டாம் என்று கூறி வந்திருக்கிறார்கள்.

அத்துடன், அந்த எல்லைப் பிரதேசத்தில் காவல் படையினர் சென்றபோது, பாகிஸ்தான் துருப்புகள் சுட்டு, பாரத வீரர்கள் இருவரைக் காயப்படுத்தியதோடு, மூன்று ஒட்டகங்களையும் தீர்த்திருக்கின்றனர். இந்த விஷயம் சர்வ சாதாரண எல்லைச் சண்டை என்று கருத வேண்டும் என்று பாகிஸ்தான் அதிகாரிகள் கூறுகின்றனர். ஆனால் பண்டிதநேரு "இது சாதாரண விஷயமல்ல. மிக விபரீதமான விஷயம்" என்று கூறியிருக்கிறார். அதற்குத் தகுந்தபடி நடவடிக்கைகளும் உடனே எடுக்கப்பட்டு விட்டன. பாகிஸ்தான் ராணுவத்தினர் தங்கள் எல்லைக்குத் திரும்பி விட்டனர். அமெரிக்காவின் ராணுவ உத

# மாற்றாந்தாயின் குழந்தையா




செஸ் நிதியிலிருந்து கைத்தறிச் சங்கங்களுக்கே உதவி வருகிறார்கள் சர்க்கார். சங்கத்தில் சேர இயலாத தனி நெசவாளர்கள் நிலை எவ்விதத்திலும் உயரவில்லை.

வியை நம்பித்தான் பாகிஸ்தான் இம்மாதிரி வீண் வம்புகளை எல்லைகளில் செய்து வருகிறது. உலக நாடுகள் அனைத்துடன் நேச உறவுடனும் சகஜ மனப்பான்மையுடனும் பழக வேண்டும் என்ற குறிக்கோளைக் கொண்டுள்ள பாரதத்துடன் பாகிஸ்தான் இவ்விதம் அடிக்கடி தகராறுகளை வளர்ப்பது மிகவும் வருந்தத் தக்க விஷயம்.

## ஸர் கந்தையாவின் ராஜிநாமா

இலங்கையில், கைத்தொழில் விடமைப்பு, சமூக சேவா மந்திரி ஸர் கந்தையா வைத்தியநாதன் தாம் மந்திரி பதவியை ராஜிநாமாச் செய்யப் போவதாகத் தீர்மானித்து விட்டதாக அறிவித்திருக்கிறார். அதைவிட அவர் இலங்கை மேல் சபையின் செனட்டர் பதவியைத் துறந்ததுதான் பெரிய விஷயம். அவர் இன்னும் நான்கு ஆண்டுகள் எவ்வித இடையூறுமின்றி மேல் சபை அங்கத்தினராக இருந்திருக்கலாம். இருப்பினும் அவர் பதவியைத்தியாகம் செய்து, வருகிற தேர்தலில் மன்னார் தொகுதியில் சட்டசபைக்குச் சுயேட்சை அபேட்சகராக நிற்கத் தீர்மானித்திருக்கிறார். ஸர் கந்தையா வைத்தியநாதன் இலங்கைத் தமிழ் பெரு மக்களிடத்தும், சர்க்கார் கட்சியினிடமும் செல்வாக்குப் பெற்றவர். இலங்கைத் தமிழர்களுக்கு இலங்கையில் இப்பொழுது சோதனைக் காலமாக இருந்து வருகிறது. தமிழை அரசாங்க மொழியாக்கக் கூடாது என்ற பிரச்னை மீது தேர்தல் வருகிற ஏப்ரல் மாதம் நடக்கவிருக்கிறது. இச் சமயத்தில் எல்லாக் கட்சித் தமிழர்களும் ஒன்றுபட்டு நிற்க வேண்டும். சர் கந்தையா வைத்தியநாதனின் செனட்டர் பதவித் தியாகம் தமிழர்கள் அனைவரும் ஒன்றுபட்டு நிற்கிறார்கள் என்ற எண்ணத்தை இலங்கை சர்க்கார், சிங்களக் கட்சியினர் மனத்தில் நிச்சயம் உண்டாக்கும்.

## ஆஸ்திகர்களுக்கு

கிரகங்களின் இட மாற்றத்தினால் நன்மை தீமைகள் மாறுகின்றன என்பது நமது முன்னோர் கண்ட முடிவு. நவக்கிரகங்களில் உக்கிர கிரகமான சனியைக் கொண்டாடும் வழக்கமும் நீண்ட நெடுநாட்களாக நம் நாட்டில் இருந்து வருகிறது. மார்ச் மாதம் ஆறாம் தேதி முதல் பத்தாம் தேதி வரை மேற்கு மாம்பலம் வேங்கடாசல ஐயர் தெருவில் உள்ள சனீச்சரர் ஆலயத்தில் திலஹோமம் நடத்த ஏற்பாடு செய்து வருகிறார்கள். இந்த பகவத் கைங்கர்யத்தில் ஆஸ்திக அன்பர்களும், பக்தர்களும் திரளாகக் கலந்து கொண்டு பலனடையலாம்.

## நூற்றாண்டு விழா

'பயிற்றிப் பல கல்வி தந்து—இந்தப்
பாரை உயர்த்திட வேண்டும்'

என்றார் மகா கவி பாரதியார். இத்தகைய அரும் பணியைப்புரியும் பள்ளிக்கூட ஆசிரியர்களைத் தயாரித்து அனுப்பும் கல்லூரி சென்னை சைதாப்பேட்டையிலிருக்கிறது என்பது எல்லாருக்கும் தெரியும். ஆனால் அது தோன்றி இன்றைக்கு நூறு ஆண்டுகள் ஆகிவிட்டன என்று சொன்னால் யாருமே ஆச்சரியப்பட்டுப் போவார்கள்! நூறு ஆண்டுகளாக இந்த ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி பல அற்புதமான ஆசிரியர்களைத் தமிழ் நாட்டுக்குத் தந்திருக்கிறது. அந்தக் கல்லூரியின் நூற்றாண்டு விழாவைப் பெப்ருவரி 29ம் தேதி மார்ச்சு 1, 2 ஆகிய மூன்று தினங்கள் வெகு சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள்.

சென்னை முதன் மந்திரி திரு காமராஜ், கல்வி மந்திரி திரு சி. சுப்பிரமணியம், விவசாய மந்திரி திரு பக்தவத்ஸலம், மராமத்து இலாகா மந்திரி ராமநாதபுரம் ராஜா, திரு சுந்தரவடிவேல், திரு டி. எம். நாராயணசாமிப் பிள்ளை, டாக்டர் லட்சுமணசாமி முதலியார், டாக்டர் செரியன் முதலியவர்கள் கலந்து கொள்ளுகின்றனர்.

நூறாண்டுகளாகப் பணி புரிந்து வரும் இக்கல்லூரி இன்னும் பல நூறாண்டுகள் சிறந்து பணி செய்து பெயரும் புகழும் தமிழகத்துக்கு ஈட்டித் தர வேண்டும் என்று பல்லாண்டு கூறி வாழ்த்துகிறோம்.

## மாதர் சங்க விழா

சுதந்திர இந்தியாவில் "விடுதலைப் பெண்"களாக விளங்கும் நமது மாதர்கள் கலைகளையும் நாகரிகத்தையும் பண்படுத்துவதற்காக, சங்கம் நிறுவி ஒற்றுமையுடன் பல தொண்டுகளும், இலக்கிய சேவையும் செய்து வருகின்றனர். சென்னை பெரம்பூரிலுள்ள மாதர் சங்கத்தார் தங்கள் சங்கத்தின் நான்காவது ஆண்டு விழாவை வெகு சிறப்பாகக் கொண்டாடினர். கலவல கண்ணன் செட்டி உயர் நிலைப் பள்ளியில் நடைபெற்ற இவ் வைபவத்துக்குச் சென்னை மேயர் வி. ஆர். ராமநாதய்யர் அவர்கள் தலைமை வகித்தார். சங்க உபதலைவி திருமதி கமலா அனந்த கிருஷ்ணன் விழாவுக்கு வந்திருந்தவர்களை வரவேற்றார். மகாகவி பாரதியாரின் அருமைப் புதல்வி திருமதி சகுந்தலா பாரதி கண்காட்சியைத் திறந்து வைத்துப் பேசினார். சங்கத்தின் அறிக்கையைக் காரியதரிசி திருமதி வசந்தா ராமமூர்த்தி வாசித்தார். குழந்தைகளின் ஆடல் பாடலும் இவ் விழாவில் இடம் பெற்றிருந்தன. திருமதி சகுந்தலா நடராஜன் நன்றியுரை கூறினார்.

# காந்தி மண்டபத்தில் பிரார்த்தனைக் கூட்டம்




சென்ற பெப்ருவரி மாதம் 24-ம் தேதி வெள்ளிக்கிழமை காந்தி மண்டபத்தில் காந்தி மகான் நடத்தி வந்த முறையில், நூற்புயக்ஞம், திருக் குர்ஆன், கிறிஸ்தவ வேதம், கீதை, ராமநாம பஜனை ஆகியவற்றுடன் பிரார்த்தனைக் கூட்டம் வெகு சிறப்பாக நடைபெற்றது. சென்னையின் பல பகுதிகளிலிருந்தும் ஆயிரக்கணக்கானவர் வந்திருந்தனர்.

ராஜாஜி தமது தலைமையுரையில், "காந்திமகான் இரண்டு காரணங்களுக்காகத் தோன்றினார். ஒன்று பாரத நாட்டுச் சுதந்திரம். அதை அடைந்து விட்டோம். மற்றையது தெய்வ பக்தி. சர்வமத சம்மதம் என்ற அடிப்படையில் காந்தி மகான் தெய்வ பக்தியை வளர்க்க முயன்று வந்தார். இந்தப் பணியில் ஈடுபட்டிருந்த போது தான் ஜனவரி மாதத்தின் கடைசி வெள்ளிக் கிழமையன்று காந்திமகான் நம்மிடையிருந்து பிரிக்கப்பட்டார். அவர் பூர்த்தி செய்ய முயன்ற இந்த பக்திப் பணியை வளர்ப்பதற்கே இந்த மண்டபம் தோற்றுவிக்கப்பட்டது. இனி மாதந் தோறும் கடைசி வெள்ளிக்கிழமை யன்று இத்தகைய பிரார்த்தனைக் கூட்டங்கள் நடைபெறும்" என்று கூறியபோது ஒவ்வொருவர் உள்ளத்திலும் மகிழ்ச்சி பொங்கியது.

அன்றையப் பிரார்த்தனைக் கூட்டத்தின் காட்சிகள்: 1: திரு பி. ஜி. நடேச பிள்ளையின் நாகஸ்வர இன்னிசை நடைபெறுகிறது. 2. ராஜாஜியின் தலைமையுரை. 3. திருக்குர்ஆன் ஓதப்படுகிறது. 4. ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பிரார்த்தனை கீதங்கள் பாடி, முடிவில் ராமநாம பஜனையும் நிகழ்த்தினார். 5. கீதா வாசகம். 6. கர்நாடக சங்கீதக் கல்லூரி மாணவிகள் பக்திப் பாடல்கள் பாடினர். 7. தக்கர் பாபா வித்தியாலய மாணவர்களின் நூற்பு யக்ஞம். —போட்டோ: வி. கோபாலகிருஷ்ணன்.

# பனித்துளி

"சென்ற வருஷம் இந்தியாவில் உற்பத்தியான மருதோன்றி (மருதாணி) இலை வெளி நாடுகளுக்கு அனுப்பப்பட்டதின் மூலம் இந்தியாவுக்குப் பதினாறு லட்சம் ரூபாய் வருமானம் கிடைத்தது."

—சர்க்கார் செய்தி

'மருதாணி' விஷயமே இப்படித்தான். பனிச்சென்று கைமேல் பலன் கிடைத்து விடும்!

★

"சமீபத்தில் பாரத நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்து விட்டு அமெரிக்கா திரும்பியுள்ள இந்தியா லீக் தலைவர் ஜே. ஜே. சிங் 'ரஷ்யா, அமெரிக்கா முதலிய நாடுகளிடமிருந்து இந்தியா உதவி பெறக்கூடாது' என்று கூறினர்."

— செய்தி

ராஜாஜியின் அபிப்பிராயமும் இதுவே. இதை வலியுறுத்தியுள்ள இந்தியா லீக் தலைவருக்கு இரண்டு 'ஜே' போடுவோம்.

★

"புதிய ரெயில்வே பட்ஜெட்டின்போது மூன்றும் வகுப்பு ரயில் வண்டிகளுக்கு 'இரண்டாம் வகுப்பு வண்டி' என்று மாற்றி நாமகரணம் சூட்டப்பட்டது." —செய்தி

எல்லோரும் இந் நாட்டு 'மன்னர்'களானதைப்போல் மூன்றும் வகுப்பு வண்டிகளும் முன்னேற்ற மடைந்திருக்கின்றன!

★

"சென்னை கார்ப்பொரேஷன் நடத்தும் புஷ்பக் காட்சியில் செடி கொடிகளால் ஆன கடிகாரம் ஒன்று உள்ளது. ஆனால் இது மணி பார்க்க உதவாது."—ஒரு செய்தி

பல ஊர்களில் நகர வீதிகளில் வைத்துள்ள கடிகாரங்கள் மட்டும் என்ன வாழ்ந்ததாம்? மணி பார்க்க உதவுமா, என்ன?

★

"தோட்டங்களில் உள்ள பூக்களைப் பறிப்பது, இலைகளைக் கிள்ளுவது செடி கொடிகளை ஒடிப்பது இவையெல்லாம் குழந்தைகளின் கெட்ட வழக்கமாகும்."

—ஒரு பிரசங்கி

பூக்களாலான மாலைகளைப் போட்டுக் கொள்வது, இலைகளால் ஆன பூச்செண்டுகளைக் கையில் பிடித்துக் கொள்வது - இவை யெல்லாம் பிரசங்கிகளின் நல்ல வழக்கமாகும்!

அட்டைப்பட விளக்கம்

## ஒரு குதூகலக் காட்சி

இந்த வாரத்து அட்டையில் மின்னும் இரண்டு நட்சத்திரங்களைப் பாருங்கள். ஒரு பெண்மணி கைத்தறிச் சேலைக்குச் சாயம் போடும் கிராமத்துப் பெண்மணி. இன்னொரு பெண்மணி கைத்தறிச் சேலையை வாங்கிக் கட்டிக் கொண்டு மகிழும் தேசபக்தி நிறைந்த நவநாகரிகப் பெண்மணி.

இந்தப் பெண்மணிகள் போன்றவர்களால்தான் பாரத நாட்டில் நெடுங்காலமாக இருந்து வரும் கைத்திறமை மிக்க கைத்தொழிலான நெசவுத்தொழில் காப்பாற்றப்பட்டு வருகிறது. வான்புகழ் கொண்ட வள்ளுவன் வளர்த்த உத்தமத் தொழில் உயிருடன் இருந்து வருகிறது.

இந்த அருமையான தொழிலில் ஈடுபட்டுப் பாடுபட்டுவரும் திறமை வாய்ந்த நெசவுத் தொழிலாளர் குடும்பங்கள் இந்த நாட்டில் முப்பது லட்சத்துக்கும் அதிகமாக இருந்து வருகின்றனர். அவர்களை நம்பிப் பிழைக்கும் ஜீவன்கள் ஒரு கோடிக்கு மேல் இருந்து வருகின்றனர்.

ஒரு கோடி மக்களுக்கு உணவளித்து வரும் இந்தத் தொழிலுக்கு ஆபத்து நேர்ந்ததை நேயர்கள் மறந்திருக்க மாட்டார்கள். தலைவர் ராஜாஜியின் சலியாத உழைப்பினாலும், விடா முயற்சியினாலும் அத் தொழிலுக்கு மீண்டும் புத்துயிர் அளிக்கப்பட்டது நினைவிருக்கலாம்.

கைத்தறிச் சேலைகளையும் துணிகளையும் வாங்கினால் நெசவுத் தொழிலாளிகளின் குடும்பங்களைக் காப்பாற்றிய புண்ணியத்துடன் நெசவுத்தொழிலையும் அழிந்து போகாமல் பாதுகாத்த திருப்பணியையும் செய்தவராவோம்.

இந்தத் தொழிலுக்கு இந்திய சர்க்கார் அளித்து வரும் பாதுகாப்பு ஒரு புறம் இருக்கட்டும். தமிழ் நாட்டில் சவிரக்கம், பச்சாதாபம் உள்ளவர்கள் அனைவரும் தங்கள் தேவைக்குக் கைத்தறித் துணிகளையே வாங்க வேண்டும். அதனால் நாட்டு மக்களின் நலன் பெருகும். தேசத்தின் பொருளாதார நிலைமையும் உயரும்.

அப்படி ஏற்பட்டால், இந்த வாரத்துக் "கல்கி" அட்டையில் நமது சித்திரக்காரர் மணியம் கற்பனையில் தீட்டியிருப்பது போன்ற கைத்தறிக் குடும்பங்களும், அதை அணிந்து செல்லும் பெண்மணியும் குதூகலமாக விளங்கும் காட்சியை நாம் நாடெங்கும் பார்த்து மகிழலாம்.



# அத்தை வீடு

பார்வதி

சாமாவுக்குப் பத்து வயது தான் இருக்கும். அவனுக்குச் சொந்த அத்தை இருந்தாள். அவள் மிகவும் பணக்காரி என்று அவன் அப்பாவும் அம்மாவும் சொல்லக் கேட்டிருக்கிறான். அவன் அத்தையின் கணவர் பெரிய சர்க்கார் உத்தியோகஸ்தர். அவர்கள் அடையாற்றில் அழகிய தோட்டத்துக்கு மத்தியில் பெரிய பங்களாவில் வசிப்பதாகச் சொன்னார்கள். சாமாவுக்கு அந்த அத்தை வீட்டுக்குப் போய் இரண்டு நாட்களாவது இருந்து விட்டு வர வேண்டும் என்று ஆசை பிறந்தது. அது நாளடைவில் வளர்ந்து அவனுக்குச் சதா அதே எண்ணமும் ஏக்கமுமாக இருந்து வந்தது.

ஆனால் அவன் அத்தையின் கணவருக்குச் சாமாவையும் அவன் பெற்றோர்களையும் கண்டால் பிடிக்கவே பிடிக்காது. அவன் அப்பா சாதாரணப் பள்ளிக்கூட வாத்தியார். குறைந்த வருவாயில் எப்படித் தனி வீட்டில் இருக்க முடியும்! ஆகையால் இரண்டு குடித்தனங்களுக்கு நடுவில் மயிலாப்பூரில் வசித்து வந்தார். சாமாவின் அத்தை அழகே உருவானவள். அவள் அழகைப் பார்த்துத்தான் கைலாசம் அவளைக் கல்யாணம் செய்துகொண்டு அழைத்துப் போய் விட்டார்.

அத்தையைப் பார்க்கச் சாமா வீட்டிலிருந்து யாரும் போவதே யில்லை. அத்தைக்கு மட்டும் சாமாவிடமும் அவன் அப்பாவிடமும் உயிர். ஆனால் அவள் தன் கணவருக்குப் பயந்து கொண்டு அவர்களிடம் அதிகமாக நெருங்கி உறவு கொண்டாடுவதில்லை. அவள் எப்பொழுதாவது தான் வருவாள்.

ஒரு நாள் அத்தை தன் குழந்தைகளுடன் பெரிய காரில் சாமாவையும் அவன் பெற்றோர்களையும் பார்க்க வந்தாள். அப்பொழுது "மன்னி! சாமாவை என் வீட்டுக்கு ஒரு நாள் அனுப்பு. குழந்தைகள் சீனு, பாபு, தங்கம் எல்லோரும் அவனுடன் விளையாட ஆசைப்படுகிறார்கள்" என்றாள்.

"அதற்கென்ன அக்கா, அப்படியே செய்கிறேன்" என்றாள் மீனாட்சி. அவள் குரலில் பணிவும் மரியாதையும் கலந்திருந்தன. இதைக் கேட்டுக் கொண்டிருந்த சாமாவுக்கு ஒரே சந்தோஷம்.

சனிக்கிழமை எப்பொழுது வரும், எப்பொழுது வரும் என்று எதிர்பார்த்துக் கொண்டே இருந்தான். சனிக்கிழமையும் வந்தது. அன்று காலையில் அவன் தன் அம்மாவிடம் வந்து, "அம்மா! இன்று நான் அத்தை வீட்டுக்குப் போய் விட்டுத் திங்கட்கிழமை காலையில் வருகிறேன்" என்றான். சாமாவின் தாயார் பதில் சொல்ல வில்லை.

"அன்றைக்கே அத்தை என்னைக் கூப்பிட வில்லையா!" என்று மீண்டும் கேட்டான்.

"உங்கப்பாவைக் கேட்டுக் கொண்டு போய் வா. அத்தை ஆசையாகத் தான் கூப்பிட்டாள். ஆனால் எனக்கென்னவோ அங்கு போவது பிடிக்கவில்லை" என்றாள் மீனாட்சி.

"போம்மா! நான் போகத்தான் போவேன். எனக்கு அவர்களை எல்லாம் பார்க்க வேண்டும். அத்தை வீட்டில் நிறைய விளையாட்டுச் சாமான்கள் எல்லாம் இருக்கின்றனவாம். நான் தங்கம், பாபு, சீனு எல்லாருடனும் விளையாட வேண்டும்" என்று பிடிவாதம் செய்தான்.

"உங்கப்பாவைக் கேட்டுக் கொண்டுதான் போ என்றேனே!" என்றாள் சாமாவின் தாயார்.

சாமா தன் தந்தையிடம் ஓடினான். "அப்பா! நான் இன்று அத்தை வீட்டுக்குப் போய்த் திங்கட்கிழமை காலையில் வருகிறேன்" என்றான்.

"சரி – சமர்த்தாய்ப் போய் வா – அதிகம் பேசாதே. அவர்கள் வீட்டில் அழகான சாமான்கள் நிறைய இருக்கும். ஒன்றையும் எடுத்து உடைத்து விடாதே. குழந்தைகளுடன் வம்புக்குப் போகாதே. அவர்கள் ஏதேனும் விஷமம் செய்துவிட்டு நீதான் செய்தாய் என்று சொன்னாலும் சொல்லுவார்கள். ஆகையால் மிகவும் ஜாக்கிரதையாக நடந்து கொள். மாமா எதிரே போகவே போகாதே" என்று அநேக புத்திமதிகள் சொல்லியனுப்பினார் சாமாவின் தந்தை சங்கரன்.

"ஆமாம். குழந்தையிடம் இத்தனையும் சொல்லியனுப்ப வேண்டுமாக்கும்! உங்களுக்கு இஷ்டமில்லாமல் பயப்படுவதற்கு, போகவே வேண்டாம் என்று சொல்லி விடுவதுதானே" என்றாள் மீனாட்சி.

"நான் போகத்தான் போவேன். அப்பா! நான் சமர்த்தாய்ப் போய் வருகிறேன்" என்று பஸ்ஸுக்குக் காசை வாங்கிக் கொண்டு சந்தோஷமாய்ப் புறப்பட்டு விட்டான் சாமா.

"மீனாட்சி, கவலைப்படாதே. நான் குழந்தை மனம் ஒடிய வேண்டாம் என்றுதான் அனுப்பினேன். தானே அவன் ஆயுளுக்கும் ஒரு பாடம் கற்றுக்கொண்டு வரப்போகிறான் பார். அதற்காகவே போவது நல்லது" என்று சொல்லி விட்டுச் சங்கரன் தன் அலுவலைக் கவனிக்கப் போய் விட்டார்.

* * *

"சாமா வந்திருக்கிறான் போலிருக்கிறதே. காலையில் குழந்தைகளுடன் விளையாடிக்கொண்டிருந்ததைப் பார்த்தேன். எப்பொழுது வந்

தான் !'' என்று கைலாசம் கேட்டுக்கொண்டே காப்பி சாப்பிட உட்கார்ந்தார்.

அவருக்குக் காப்பி ஆற்றிக் கொடுத்துக் கொண்டே சாந்தா சொன்னாள்: "இன்று காலையில் தான் வந்தான். சனி, ஞாயிறு லீவு நாட்களாயிற்றே என்று வந்திருக்கிறான். நான் தான் அவனை வரச் சொல்லிக் கூப்பிட்டேன்."

"சரி, குழந்தைகள் அவனிடம் நெருங்கிப் பழக வேண்டாம். அவன் வசிக்கும் இடமெல்லாம் ஒரே வியாதிகள் நிறைந்த இடம். அவனிடமிருந்து நம் குழந்தைகளுக்கு ஏதாவது தொத்து வியாதி வந்துவிடப் போகிறது. பார்த்துக் கொள்."

சாந்தாவுக்குச் சுருக்கென்று இருந்தது. ஆனாலும் ஒன்றும் சொல்லவில்லை. அப்பொழுதுதான் கதவுப் பக்கமாகப் பந்தைப் பொறுக்கிக் கொண்டு சாமா போனதையும் அவள் கவனிக்கத் தவறவில்லை. ஒரு சமயம் அவர் சொன்ன வார்த்தைகள் அவன் காதில் விழுந்திருக்குமோ வென்று அஞ்சினாள்.

ஆம். சாமாவின் காதில் அந்த வார்த்தைகள் விழத்தான் விழுந்தன. தற்செயலாக அங்கு பந்தைப் பொறுக்கியெடுக்க ஓடிவந்த பொழுது தான் அவன் அதைக் கேட்டான்.

"அம்மா ! பார். நாங்கள் விளையாடக் கூப்பிட்டால் சாமா வரமாட்டேன் என்கிறான்'' என்று பாபு தன் தாயாரிடம் புகார் சொன்னான்.

"அம்மா, சீனு, சாமாவுக்கு அழகு காண்பிக்கிறான். அதனால்தான் அவன் வரமாட்டேன் என்கிறான்" என்று ஐந்து வயதுத் தங்கம் சொன்னாள். அவளுக்குச் சிறுவன் சாமாவிடம் அலாதிப் பிரியம். அவளுடன் ஓடி, ஓடி ஆசையாக விளையாடுவான். அவன் சொல்லும் கதைகள் அவளுக்கு ரொம்பப் பிடிக்கும்.

சாமா மனத்துக்குள் அழுத்தும் வேதனையை அடக்கிக் கொண்டு தோட்டத்துக்குப் போனான்.

"ஏ, தம்பீ ! எங்கே வந்தாய்! பூக்களைப் பறிக்கப்படாது தெரியுமா! பறித்தால் எசமான் கோபிப்பார். அப்பாலே போய்விடு'' என்று தோட்டக்கார முனிசாமி சற்று அதிகாரமாகவே சொன்னான்.

"நான், பூக்களையாவது செடியையாவது தொடக்கூட மாட்டேன்'' என்று சொல்லி விட்டுச் சாமா நகர்ந்தான். அதற்குள் ஒரு பெரிய நாய் பாய்ந்தோடி வந்து அவன் தொடையைக் கவ்விற்று. "ஐயோ !'' என்று அலறினான் சாமா.

"என்ன, தம்பி, இப்படிச் சத்தம் போடுகிறாய் ! ஒன்றும் செய்யாது, நம் சீசர் ! நல்ல நாயல்லவா ! உயர்ந்த ஜாதி நாயாச்சே. நீ பயப்படாதே'' என்று தோட்டக்காரன் சொல்லி ஓநாயைப் போல் தோன்றிய அந்த நாயை அழைத்துச் சென்றான்.

சாமாவுக்கு இதற்குள்ளேயே மனம் என்னமோ சங்கடம் செய்ய ஆரம்பித்தது.

சாப்பாட்டு நேரம் ஆகிவிட்டது. எல்லோரும் சாப்பிட உட்கார்ந்தார்கள்.

அத்தையும் எல்லோருக்கும் சாப்பாடு போடுவதைக் கிட்டேயிருந்து கவனித்தாள்.

"அம்மா, சாமாவுக்கு மேஜை மேல் சாப்பிடத் தெரிய வில்லை; கீழே யெல்லாம் இறைக்கிறானே'' என்று சீனு பரிகாசமாகச் சொன்னான்.

"பழக்கமில்லை. தானே கற்றுக் கொள்வான். நீ அவனைப் பரிகாசம் பண்ணாதே'' என்று சாந்தா கடிந்து கொண்டாள்.

"மடியில் 'நாப்கின்' போட்டுக் கொள்'' என்று தங்கம் தன் சின்னக் கையினால் ஒரு துண்டுத் துணியை எடுத்துக் கொடுத்தாள்.

அதற்குள் சாந்தாவைப் பார்க்க யாரோ சிநேகிதர்கள் வரவே, அவள் சமையல்கார மாதவனிடம் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டு முன்கூடத்துக்குப் போய் விட்டாள்.

மாதவன் சாமா இலையை வெகு அசட்டையாகத்தான் கவனித்தான். மற்றக் குழந்தைகளுக்குக் கேட்டுக் கேட்டுப் பரிமாறி விட்டு, சாமாவைக் கவனிக்கவே யில்லை. அத்தை ஆசையாக அவன் இலையில் லட்டு ஒன்றைப் போட்டிருந்தாள். ஆனால் தித்திப்பான லட்டு கூட அவன் வாய்க்குக் கசந்தது. மென்னியை அடைத்தது. ஏனோ தெரிய வில்லை !

சாப்பிட்டு எல்லோரும் எழுந்து போய் விட்டனர்.

மத்தியானம் மூன்றுமணி சுமாருக்குச் சாமா அவன் அத்தையிடம் மெதுவாக வந்தான்: "அத்தை, நான் வீட்டுக்குப் போய் வரட்டுமா !'' என்று கேட்டான்.

"ஏன் சாமா, இரண்டு நாட்கள் இருக்கப் போவதாகச் சொன்னாயே'' என்றாள் அத்தை.

"ஆமாம், அத்தை! நினைவு இல்லாமல் சொல்லி விட்டேன். திங்கட்கிழமை யன்று பரிட்சை. பாடங்கள் படிக்க வேண்டும். படித்து நல்ல மார்க் வாங்கா விட்டால் அப்பா கோபித்துக் கொள்வார். ஆகையால் நான் இப்பொழுதே போய் விடுகிறேன்'' என்றான் சாமா.



"இரு. சாயங்காலம் நாங்கள் பீச்சுக்குப் போகும்பொழுது உன்னைக் கொண்டு போய் விடுகிறேன்" என்றாள் அத்தை அன்பாக.

"அம்மா, நாம் இன்று பீச்சுக்குப் போகக் கார் கிடைக்காது என்று அப்பா சொல்லச் சொன்னார்" என்று வேகமாக ஓடி வந்து சொன்னான் சீனு.

பக்கத்து அறையில்தான் கைலாசம் இருந்தார். அவருக்குச் சாந்தாவின் ஏற்பாடு காதில் விழுந்துதான் அப்படிச் சொல்லி யனுப்பினார்.

"வேண்டாம் அத்தை. நான் பஸ்ஸில் போய் விடுவேன். அப்பா என்னிடம் சில்லறை கொடுத்திருக்கிறார்" என்றான் சாமா.

"சரி, அப்படியானால் ஜாக்கிரதையாகப் போய் வா. இந்தா, இந்த ஷர்ட்டை எடுத்துக் கொள். நான் பாபுக்கு வாங்கிய பொழுது உனக்கும் ஒன்று வாங்கினேன்" என்று சொல்லிச் சாமாவின் கையில் ஒரு ஷர்ட்டைக் கொடுத்தாள் சாந்தா.

"எதற்கு அத்தை எனக்கு ஷர்ட் !" என்று அதை வாங்கத் தயங்கினான் சாமா.

"இல்லை. எடுத்துக் கொள். அத்தை கொடுத்ததாக இருக்கட்டும்" என்று ஆசையுடன் கொடுத்தாள்.

சீனு பொறுமையுடன் பார்த்துக் கொண்டிருந்ததைச் சாந்தா கவனிக்கா விட்டாலும் சாமா கவனிக்கத் தவறவில்லை.

ஆயினும் அத்தை மனம் நோகக் கூடாது என்று சிறியவனானாலும் சாமாவுக்குத் தோன்றியது. ஆதலால் அதைப் பெற்றுக் கொண்டு வந்தனம் கூறிவிட்டு எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டான்.

சாந்தாவுக்கு ஒரு பக்கம் நிம்மதி; ஒரு பக்கம் துக்கம். எப்படியோ சமாளித்துக் கொண்டு உள்ளே சென்றாள்.

"நீ எப்போ மறுபடியும் வரே !" என்று கொஞ்சிக் கேட்டாள் குழந்தை தங்கம்.

"ஓ, கூடிய சீக்கிரமே வருகிறேன்" என்று சொல்லி விட்டுச் சாமா புறப்பட்டான். அவன் கண்களில் கொஞ்சம் கண்ணீர் ததும்பியதைச் சாந்தா கவனித்திருக்க முடியாது.

* * *

"சாமா ! என்ன அதற்குள் வந்து விட்டாய் ! திங்கட்கிழமை காலையில் அல்லவோ வரப்போவதாகச் சொன்னாய் !" என்று சாயங்காலம் வாசலில் வரும் சாமாவைப் பார்த்துக் கேட்டாள் மீனாட்சி.

"ஆமாம், அம்மா! இன்றே வந்து விட்டேன். எனக்கென்னவோ வந்து விட வேண்டும் போலிருந்தது. வந்து விட்டேன் !"

"ஏன், கண்ணே ! என்ன சமாசாரம் ! அத்தைவீடு ரொம்ப நன்றாயிருந்திருக்குமே. நன்றாய் சந்தோஷமாகப் பொழுது போக்கினாயா ! எல்லாம் ரொம்ப நேர்த்தியா யிருந்திருக்குமே. அவர்கள் பணக்காரர்கள், இல்லையா! நம்மைப் போலவா—அல்லது உன் சித்தியைப்போலவா! பாவம்! அவள்தான் திருவல்லிக்கேணியில் பத்து



குடித்தனத்துக்கு நடுவில் என்ன கஷ்டப்படுகிறாள்!" என்றாள் மீனாட்சி.

"அம்மா—நான் அதைத்தான் சொல்லப் போகிறேன். நான் அத்தை வீட்டிலிருந்து வரும்பொழுது திருவல்லிக்கேணிக்கு வந்து சித்தியையும் பார்த்து விட்டு வரலாம் என்று போனேன். அப்புறம் தானம்மா எனக்குச் சந்தோஷம் வந்தது. சித்தி வீடு சிறியதாக இருந்தாலும், அவள் கஷ்டப்பட்டாலும் எனக்கு அங்கு கிடைத்த மன நிம்மதி அத்தையின் மாளிகையில் கிடைக்கவில்லை அம்மா!" என்றான்.

"என்ன சொல்லுகிறாய், சாமா! எனக்கு ஒன்றுமே புரியவில்லையே. என்ன நடந்தது!" என்று கேட்டாள் மீனாட்சி.

"இல்லை அம்மா. அத்தை வீடு ரொம்ப நன்றாகத்தான் இருந்தது. ஆனாலும் எனக்கு என்னவோ ஒரு பயம் பிடித்துக் கொண்டு விட்டது. அத்தை ஆசையாகத்தானிருந்தாள். ஆனாலும் எனக்கு அங்கே இருக்க முடியவில்லை. நான் வரும்பொழுது எனக்கு அழகான ஒரு ஷர்ட் கொடுத்தாள் அத்தை. நான் சித்திவீட்டுக்குச் சென்ற பொழுது அங்கே சித்தி பிள்ளை ராமு கிழிசல் சட்டைபோட்டுக்கொண்டிருந்ததைப் பார்த்தேன். எனக்கு வருத்தமாக இருந்தது. அதை அவனிடம் கொடுத்து விட்டு வந்து விட்டேன்.

"சித்தி குழந்தைகள் எல்லாரும் என்னுடன் தெருவில் விளையாடினார்கள். பொழுது போனதே தெரியவில்லை. சித்தி எனக்குத் தோசையும் கீரைக் குழம்பும் கொடுத்தாள். சாப்பிட்டேன். அத்தை வீட்டுத் தித்திப்பு லட்டுவைவிட அந்தத்தோசை ரொம்பநன்றாயிருந்தது! சாப்பிடும் பொழுது என் மென்னியை அடைக்கவில்லை. சந்தோஷமாய்ச் சாப்பிட்டேன்" என்றான் சாமா தழுதழுத்த குரலில்.

"கண்ணே, சாமா! உன் தகப்பனார் என்னிடம் சொன்னது உண்மையாகி விட்டது. இனி நீ பணக்கார உறவினர்கள் அருகிலேயே போக வேண்டாம்."

"வேண்டாம் அம்மா, எனக்கு இனிமேல் அத்தை வீடு வேண்டவே வேண்டாம்!"

---

திருச்சி மாவட்டத்திலுள்ள தமிழ் எழுத்தாளர்கள் தங்களுக்கு என்று ஒரு சங்கம் நிறுவி, தமிழுக்கும் தமிழ் இலக்கியத்துக்கும் அரும்பெரும் தொண்டாற்றி வருகிறார்கள். இந்த இலக்கிய சங்கத்தின் ஆண்டு விழாவைப் பெப்ருவரி 19ந் தேதி திருச்சி வாணி மன்றத்தில் வெகு விமரிசையாகக் கொண்டாடினர். காலையில் ஒன்பது மணிக்கு ஸ்ரீமதி ஜானகி சீனிவாசனின் கடவுள் வாழ்த்துடன் விழா ஆரம்பமாகியது. ஆனந்தவிகடன் நிர்வாக ஆசிரியர் திரு மகாதேவன் இவ் விழாவுக்குத் தலைமை தாங்கினார். விழாவுக்கு வந்திருந்தவர்களைத் திரு கலைவாணன் வரவேற்றுப் பேசினார். சங்கச் செயலாளர் திரு அகிலன் எழுத்தாளர் சங்கத்தின் நடவடிக்கைகளை விவரித்துக் கூறினார். 'உயிர்த்தமிழ்' என்னும் தலைப்பில் புதுக்கோட்டை ஸப் ஜட்ஜ் திரு எஸ். மகாராஜன் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார். மற்றும் 'தமிழ்ச் செல்வம்' என்னும் தொடரில் திருவாளர்கள் ஐயம்பெருமாள் கோனார், கே. என். கமலபதி, திரிலோக சீதாராமன், அ. மு. சரவண முதலியார் ஆகியோர் பேசினார்கள்.

அன்று மாலையில் நடந்த கூட்டத்தில் கவிதை, நாடகம், சிறுகதை, கட்டுரை ஆகிய பல்வேறு கோணங்களில் இன்றையத் தமிழின எழுத்தாள அன்பர்கள் ஆராய்ந்தார்கள். இந்த ஆராய்ச்சி அரங்கில் திருவாளர்கள் துறைவன், சக்திசரணன், ரா. ஆறுமுகம், மாறன், புஷ்பத்துறை சுப்ரமணியம், ரா. நீலமேகம், மாயா, ஏ. எஸ். ராகவன், செட்டியார், கவி ஆகியோர் கலந்து கொண்டனர்.

இலக்கிய விவாதத்துக்குப் பிறகு, ஐந்தாண்டுத் திட்ட அதிகாரி திரு கே. எம். பாலசுப்ரமணியம், "எழுத்தாளரும் நாட்டுப் பணியும்" என்னும் பொருள் பற்றியும், கலைமகள் ஆசிரியர் திரு கி. வா. ஜகந்நாதன், "எழுத்துப் பணி" என்ற தலைப்பிலும் சொற்பொழிவாற்றினர்.

திருச்சித் தமிழ் எழுத்தாளர் சங்கத்தினர் இலக்கியப் பணியாற்றுவதோடு, ஒற்றுமையுடன் செயலாற்றும் திறனும் படைத்தவர்கள் என்பதற்கு இந்த இலக்கிய ஆண்டு விழாவின் வெற்றியே சிறந்த உதாரணமாக விளங்குகிறது. விழாத் தலைவர் அமர்ந்திருப்பதையும், திரு மகாராஜன் சொற்பொழிவு நிகழ்த்துவதையும் மேலேயுள்ள படத்தில் காணலாம்.




நர்கீஸ் விஜயம்!
பிரபல சினிமா நக்ஷத்திரமான நர்கீஸும் அவரது சகாக்களும் சமீபத்தில் ஜவுளி எடுக்க வந்தபோது. எமது பட்டுச் சேலைகளின் கலையழகு, சரிகை வேலைப்பாடு, டிசைன் அமைப்பு மற்றும் வர்ணக் கோர்வைகளைக் கண்டு "அற்புதம்! அற்புதம்!" என்று வியந்து பாராட்டினர்.
போன்: 71166
ராதா ஸில்க் எம்போரியம்
வெங்கடேச அக்ரஹாரம் தெரு
பன்னாதி தெரு, மைலாப்பூர்.. மதராஸ்-4.

# தலைநகரிலே! சுப்புடு

## விநயநகர் விழா

புது டில்லிக்குத் தெற்கே "விநய நகர்" என்றொரு ஸ்தலமுண்டு. "ஹாமில்டன் பிரிட்ஜ்" அம்பட்டன் வாராவதி ஆகிய கதையாக இது 'ஓநாய் நகர்' என்று இவ்வூர்க்காரர்களால் அழைக்கப்படுகிறது. உண்மையில் இங்கே இருக்கும் 'நகர்'களெல்லாமே விலங்குகளின் தமிழ்ப் பெயரும், பக்ஷிகளின் தமிழ்ப் பெயரும் தாங்கி மிளிர்கின்றன. உதாரணமாக, மான் நகர், காகா நகர், இதையொட்டிப் புதிதாக நிர்மாணிக்கப்பட விருக்கும் தூதுவர் நகருக்கு "நரி நகர்" என்று பெயரிடலாம் என்று அதிகார பூர்வமில்லாத வதந்தி யுள்ளது. கிடக்க: விநயநகரில் சென்ற ஞாயிறு தென்னிந்திய சமாஜத்தார் ஆண்டு விழாக் கொண்டாடினார்கள். கத்தா நிகழ்த்திய டில்லிக் குறவஞ்சியில் ராஷ்டிரபதி முதல், ராமசாமி வரை எல்லாரும் தோன்றினார்கள். பூர்ணம் விஸ்வநாதனின் "ராஜிப் பேச்சு" என்ற ஹாஸ்ய நிகழ்ச்சி ரொம்ப கச்சிதம். உமா கிருஷ்ண மூர்த்தியும், கிருஷ்ணமூர்த்தியும் திறம்பட நடித்துச் சபையோரைக் குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைத்தார்கள்.




## காமாலைக் கமிட்டி யாதாஸ்து

யாதாஸ்து! 93 பக்கங்கள் கொண்ட ஒரு யாதாஸ்து சென்ற வாரம் பார்லிமெண்டில் சமர்ப்பிக்கப்பட்டது. வியாதிக்குத் தண்ணீர் கலப்படம்தான் காரணம் என்று ஐயந்திரிபுக்கு இடமின்றிக் கண்ணீர் விட்டிருக்கிறார்கள் அதிலே. மேல்சபையில் அனுமய மந்திரியை ஆறு நிமிஷங்கள் அனுயாசமாய்க் கேள்விகள் கேட்டபோது, அவர், பொறுப்பு டில்லி ராஜ்ய சபையைச் சேர்ந்தது என்று தெரிவித்து விட்டார். இந்தச் சச்சரவு ஒரு வழியாய் ஓயுமுன் ஆண்டவன் அருளால் மற்றொரு புது வியாதி துவங்கி விட்டால், "வாலு போச்சு, கத்தி வந்தது" என்று இதை மறந்து விடலாம். ஆமாம்; இரண்டு ஆண்டுகளுக்கு முன் "என்ஸிபாலிடீஸ்" (Encephalities) என்றொரு புது வியாதி வந்து குழந்தைகளைக் கொன்று கொண்டு போயிற்று. "என்ஸி-பாலிடி"க்குக் காரணம் "முனிஸிபாலிடி" தான் என்ற சர்ச்சை முடியுமுன் காமாலை வந்து காப்பாற்றியது.

இதற்கிடையில் பெப்ருவரி இருபதாம் தேதி பி. ஸி. ஜி விழா, விழாமல் கொண்டாடப்பட்டது என்பதையும் சூட்டோடு சூடாகத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். எல்லாவற்றையும் தேசிய மொழியாக்கும் தற்போதைய வேகத்திலே "பி. ஸி. ஜி வாரம் ஒன்று ஏற்படுத்தி அதை "அக்ஷய வார"மாக (அ × க்ஷய)க் கொண்டாடப்படலாம்!

## கூற்றுவன் கூத்து

"கற்பகப்பூங் காவெட்டலாமோ கறிக்கு" என்று கூவத்து காரணனின் மரணத்தைக் குறித்துப் பாடினார் ஒரு புலவர். தக்ஷிண பாரத சமாஜத்தின் காரியதரிசி ஸ்ரீ சுப்புசாமி அவர்களின் மரணம் டில்லித் தமிழர்களைத் துக்கத்தில் ஆழ்த்தியுள்ளது. பெப்ருவரி 13-ம் தேதி காரியாலயத்துக்குச் செல்லும் போது கார் விபத்தில் சிக்கி இறந்தார். முப்பதே வயது நிரம்பிய இந்தச் சளையா உழைப்பாளி, இளம் மனைவியையும் மூன்று சிசுக்களையும், அநாதரவாய் விட்டுச் சென்றார். மூன்று வருடங்களுக்கு முன் முளைத்த தக்ஷிண பாரத சமாஜம் இன்று பல ஆயிரம் ரூபாய் நிதியுடனும் சிறந்த செல்வாக்குடனும் விளங்குவதற்குக் காரண புருஷராய் விளங்கியவர் ஸ்ரீ சுப்புசாமி. பெரியோர்களும் கலைஞர்களும் டில்லியில் காலடி வைத்த ஐந்தாவது நிமிஷம் அவர்களை வரவேற்று உபசரித்து, ஒரு பொதுக்கூட்டம் ஏற்பாடு செய்து விடுவார் சுப்புசாமி. பெப்ருவரி 19ம் தேதியன்று நடந்த அனுதாபக் கூட்டத்தில் திரு கத்தா அவர்கள் சுருக்கமாகவும் உருக்கமாகவும் சுப்புசாமி அவர்களின் கொடைத்திறனைப் பற்றிப் பேசினார். துன்பக்கடலில் மூழ்கி யிருக்கும் அவர் குடும்பத்தினருக்கு நமது அனுதாபம்.




# ஆற்றங்கரையினிலே

பேராசிரியர் ரா.பி.சேதுப்பிள்ளை

## 60. காரைக்கால்

அம்மை என்பது ஓர் அருமையான சொல். அதன் செம்மையை உணர்ந்த மாணிக்கவாசகர் "அம்மையே! அப்பா! ஒப்பிலா மணியே! அன்பினில் விளைந்த ஆரமுதே" என்று ஆதிபகவனை அகம் குழைந்து பாடினார்.

தமிழ் நாட்டிலுள்ள காரைக்காலிலே ஒரு தெய்வப்பாவை அம்மையார் என்னும் திருப்பெயர் பெற்றாள். அரிசிலாறு கடலோடு கலக்கும் துறையில் அமைந்தது காரைக்கால். அந் நகரில் வளமார்ந்த வணிகர் குலத் தலைவன் தனதத்தன் செய்த தவப்பயனாய்த் தோன்றினாள் அப்பாவை.

"வங்கமலி கடற்காரைக்
காலின்கண் வாழ்வணிகர்
தங்கள்குலத் தலைவனார்
தனதத்த னார்தவத்தால்
அங்கவர்பால் திருமடந்தை
அவதரித்தாள் எனவந்து
பொங்கியபே ரழகுமிகப்
புனிதவதி யார்பிறந்தார்"

(வங்கம் - மரக்கலம்)

என்று அவர் பிறப்பின் மேன்மையை உணர்த்துகின்றது திருத்தொண்டர் புராணம். புனிதவதி என்னும் பெயர் பெற்ற அப்பெண்மணி அழகின் கொழுந்தெனத் திகழ்ந்து வளர்ந்தாள். மங்கைப் பருவம் எய்தினாள். நாகையம்பதியில் வாழ்ந்த பரம தத்தன் என்ற நம்பிக்கு அந் நங்கையை மணம் செய்தார்கள்.

குல நலமும் குண நலமும் வாய்ந்த காதல் மனையாளும் காதலனும் கருத்தொருமித்து இல்லறம் நிகழ்த்தினர். அறவோர்க்கும் துறவோர்க்கும் ஆதரவளித்தனர்.

"நம்பர்அடி யார்அணைந்தால்
நல்லதிரு அமுதளித்தும்
செம்பொன்னும் நவமணியும்
செழுந்துகிலும் முதலான
தம்பரிவி னால்அவர்க்குத்
தகுதியின்வேண் டுவகொடுத்தும்
உம்பர்பிரான் திருவடிக்கீழ்
உணர்வுமிக ஒழுகுநாள்"

(துகில் - ஆடை; பரிவு - அன்பு; உம்பர் பிரான் - தேவதேவன்)

என்று அம் மனையறத்தின் மாட்சியைப் பாடினார் சேக்கிழார்.

இவ்வாறு இருவரும் வாழ்ந்து வருகையில் புனிதவதியாரின் இணையற்ற சீர்மை பரமதத்தனுக்குப் புலனாயிற்று. 'தன் மனையாள் மானுடமல்லள்; மாதருக்குள் ஒரு

தெய்வம்' என்று மாசற உணர்ந்தான்; அயலறியாமல் அவளை விட்டுப் பிரியத் துணிந்தான். மனத்திலே அக் கருத்தை மறைத்து வைத்து, வெளி நாட்டில் வாணிகம் செய்வான் போல் சென்றான்.

"கடல்மிசை வங்கம் ஓட்டிக்
கருதிய தேயம் தன்னில்
அடைவுறச் சென்று சேர்ந்தங்கு
அளவில்பல் வளங்கள் முற்றி
இடைசில நாட்கள் நீங்க
மீண்டும்அக் கலத்தில் ஏறிப்
படர்புனல் கன்னி நாட்டோர்
பட்டினம் மருங்கு சேர்ந்தான்"

(கன்னி நாடு - பாண்டி நாடு; பட்டினம் - கடற்கரை நகரம்)

திரைகடல் ஓடிய பரமதத்தன் திரும்பி வருவான் என்று வழிமேல் விழி வைத்துக் காத்திருந்தாள்; கவலை உற்றாள் காரைக் கால் நங்கை.

சில ஆண்டுகளுக்குப் பின்னர் அவனைப் பற்றிய செய்தி யொன்று கிடைத்தது. பாண்டி நாட்டில் உள்ள ஒரு கடற்கரை நகரத்தில் அவன் வாணிகம் செய்து வாழ்வதாக அறிந்தாள். உடனே சுற்றத்தார் சிலரைத் துணைக் கொண்டு புறப்பட்டாள்; கணவன் இருந்த இடம் போந்தாள்.

பரமதத்தன் மனம் பதைத்தான். புதிதாக மணந்த மனைவியோடும், பெற்ற மகவோடும் அவளடிகளில் விழுந்து வணங்கினான். அச் செய்கையைக் கண்டோர் எல்லாம் திகைத்து நின்றார். பரமதத்தன் அவர்களைப் பார்த்து, "இவர் மானிடம் அல்லர்; பெண்ணுரு வந்த பெருந் தெய்வம். இதனை அறிந்தவுடன் இவரை விட்டகன்றேன். இங்கு மறுமணம் செய்தேன். பெற்ற இப் பெண் மகவிற்கு இவர் பெயரை இட்டேன். என் குல தெய்வம் இவரே யாதலால் குடும்பத்துடன் வந்து வணங்கினேன். கண்கண்ட இத் தெய்வத்தை நீங்களும் கைகூப்பித் தொழுங்கள்" என்றான்.

"மற்றவர் தம்மை நோக்கி
மானுடம் இவர்தாம் அல்லர்
நற்பெருந் தெய்வம் ஆதல்
நானறிந்து அகன்ற பின்பு
பெற்றஇம் மகவு தன்னைப்
பேரிட்டேன் ஆத லாலே
பொற்பதம் பணிந்தேன் நீரும்
போற்றுதல் செய்மின் என்றான்"

(பதம் - பாதம்)

கணவன் சொல்லிய சொற்களைக் கேட்டாள் காரைக்கால் அம்மையார். அவன் உள்ளக் கருத்தைத் தெளிவின் உணர்ந்தாள். இறைவன் திருவடியை நினைந்து உருகினாள்.

"ஈசனே! இத்தனை காலமும் என்னைக் கொண்ட கணவர்க்காக இவ்வுடலைப் பேணினேன். இனி இவ் ஊன் பொதியை யான் வேண்டேன்; உன் திருவருளை வேண்டி நிற்பேன்.

"பிறந்து மொழிபயின்ற
பின்னெல்லாம் காதல்
சிறந்து நின்சேவடியே
சேர்ந்தேன் – நிறந்திகழும்

மைஞ்ஞான்ற கண்டத்து
வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்பது இடர்"

(மைஞ்ஞான்ற - கருமை பொருந்திய; எஞ்ஞான்று - எப்பொழுது)

"இம்மண்ணிலே பிறந்து மொழிபயின்ற கால முதல் உன் திருவடியே எண்ணினேன்; உன் திருப்புகழே பேசினேன். நஞ்சுண்டு கண்டம் கறுத்த நாதனே! என் நெஞ்சத்து இடர் தீர்ப்பது எந் நாளோ?" என்று இறைஞ்சினள்.

"தனக்குவமையில்லாத் தலைவனாகிய ஈசன் விண்ணுலகத்தில் உள்ளான் என்று சொல்லுவார் சொல்லுக. பொன்னுலகத்தில் உள்ளான் என்று பேசுவார் பேசுக. அவன் என் உள்ளத்திலே உள்ளான் என்றுரைப்பேன் யான்" என்று உறுதி கொண்டாள்.

"வானகத்தான் என்பாரும்
என்கமற்று உம்பர்கோன்
தானத்தான் என்பாரும்
தாமேன்க — ஞானத்தான்
முன்நஞ்சத் தால்இருண்ட
மெய்ப்போவிசேர் கண்டத்தான்
என்நெஞ்சத் தானென்பன் யான்"

(உம்பர்கோன் - இந்திரன்)

என்று பாடினள்; ஆனந்தமுற்று ஆடினள்; மேனி வாடினள்; எலும்புக் கூடாயினள். காரைக்கால் பேயார் என்ற பெயரும் பெற்றாள்.

கயிலாச மலையில் அமர்ந்தருளும் கண்ணுதற் பெருங் கடவுளைக் காணும் பேறு பெற்றாள் காரைக்கால் அம்மை. எங் நாட்டவர்க்கும் இறைவனாகிய ஈசனிடம் தன் மனத்தில் எழுந்த ஆசையைச் சொல்லி முறையிட்டாள். "என்னை ஆளும் ஐயனே! உன் பால் எந்நாளும் மாறாத இன்ப அன்பு வேண்டும்; இனிமேல் பிறவாதிருக்க வேண்டும்; பிறப்பு நேர்ந்தால் உன்னை என்றும் மறவாதிருக்க வேண்டும்; இன்னும், அறவாழி அந்தணா! நீ ஆடும் பொழுது உன் அடியின் கீழ் அமர்ந்து பாடி மகிழ வேண்டும்" என்று விண்ணப்பம் செய்தாள். தொண்டை நாட்டுத் திருவாலங் காட்டில் ஈசன் அண்டமுற நிமிர்ந்து ஆடும் அடியின்கீழ் அமர்ந்து,

"காடும் கடலும் மலையும் மண்ணும்
விண்ணும் சுழல அனல்கை யேந்தி
ஆடும் அரவப் புயங்கன் எங்கள்
அப்பன் இடம்திரு ஆலங்காடே"

என்று பாடி மாறிலா இன்பத்தில் மலர்ந்தார் காரைக்கால் அம்மையார்.

# பெண்ணின் பெருமை



ஒரு பெண்ணின் பெருமை விளங்க, அப்பப்பா! எத்தனை பேர் எவ்வளவு விதசிரமங்களுக்குள்ளாக வேண்டியிருந்தது!

ஜமீன்தார் மகன் ஒருவனுக்குப் பைத்தியம் பிடிக்க வேண்டியிருந்தது; பிடித்த பைத்தியம் படிப்படியாக இறங்கவும் வேண்டியிருந்தது; கட்டுக்கு அடங்காத காளை போலிருந்த அவன் சகோதரன் பெட்டிப் பாம்பாக அடங்க வேண்டியிருந்தது; இவை மட்டுமா? வான வீதியில் பவனி வரும் வெண்மதியும், வெண்மதியின் உற்ற துணையான நன்னிரவுகளும் கூடப் பயனற்றுப் போக வேண்டியிருந்தன.

ஏழை விவசாயியின் பெண் பத்மா, உழவர் உரிமைக்காகப் போராடி, ஜமீன்தாரின் மருமகளாகும் உரிமையைப் பெறுகிறாள். துடுக்கும் மிடுக்கும் கொண்ட தம் இளைய மகன் நாகுவுக்கே அவளை மணம் முடிக்க விரும்பினார் ஜமீன்தார். ஆனால் அவர் இளைய மனைவி அந்தஸ்தில்லாத பெண்ணை மருமகளாக ஏற்க மறுத்ததன் காரணமாக அவள், அவருடைய மூத்த மனைவியின் பைத்தியக்கார மகனை ரகுவையே மணக்க நேர்ந்தது. ரகுவின் பைத்தியம் கல்யாணம் ஆகியும் தெளியவில்லை! அப்படி உடனே தெளிந்து விட்டால் பெண்ணின் பெருமை எப்படி விளங்கும்? டாக்டரிடம் அவனைச் சிகிச்சைக்காக அனுப்பிய பொழுது, தம்பி நாகுவின் சதியின் காரணமாகச் சிகிச்சை தடைப்படுகிறது. பத்மாவே அவனுக்குச் சிகிச்சை செய்யத் தொடங்குகிறாள். திரைப்படக் கதையின் திருப்பமும் தொடங்குகிறது.

பைத்தியக்கார ரகுவாக நடிக்கும் ஜெமினி கணேசன் இப் படத்தில் புதியதோர் பாத்திரம் ஏற்றுத் திறம்பட நடித்திருக்கிறார். இதுவரையில் பல படங்களில், அன்புக் கணவனாகவும், ஆசைக் காதலனாகவுமே நடித்து அநுபவப்பட்ட அவருக்கு இந்தப் படத்தில் முற்றிலும் புதிய முறையில் நடிக்கச் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. கிடைத்த சந்தர்ப்பத்தை அவர் பைத்தியக்காரத்தனமாக நழுவ விட்டு விடவில்லை. பைத்தியம் பிடித்திருந்த போதும், பைத்தியம் தெளிந்த பிறகும் அவரது நடிப்பு அலுப்புத் தட்டாமல் மிகவும் சுவாரஸ்யமாக இருக்கிறது.

தம்பி நாகுவாக நடிக்கும் சிவாஜி கணேசன், வழக்கம்போல் எல்லோரையும் மிரட்டி உருட்டுகிறார்; உருட்டி விழிக்கி



ஞர்; அதட்டி வெருட்டுகிறார்; கடைசியில், தாயாரின் காலில் விழுந்து கதறிக் கண்ணீர் உகுத்து, சினிமா ரசிகர்களின் உள்ளங்களை உருக்கிக் கரகோஷத்தைப் பெற்று விடுகிறார்.

பெண்ணின் பெருமை விளங்க, சாவித்திரி நன்கு நடித்திருக்கிறார். களத்துமேட்டில் நின்று வீராங்கனையாக கர்ஜனை புரிந்ததிலிருந்து, நாகுவின் ஏச்சுக்கு எதிர்ப் பேச்சுப் பேசிய போதும், பைத்தியக்காரக் கணவனுடன் பருவத் துடிப்பையும் மறந்து பயனற்ற இரவுகளைக் கழித்தபோதும், கணவனின் பைத்தியத்தைப் படிப்படியாகக் குணப்படுத்தியபோதும், கடைசியில் துப்பாக்கி முனைக்கும் அஞ்சாமல், மாமிக்கு அறபோதனையைச் செய்த போதும் அவரது நடிப்பு மிகவும் கச்சிதமாயமைந்திருக்கிறது. "மிஸ்ஸியம்மா" வுக்குப் பிறகு "பெண்ணின் பெருமை" தான் அவருக்குப் பெருமை யளிக்கிறது.

மனப் போராட்டத்தில் உழன்று, விம்மி, வெய்துயிர்த்து, உயிரையும் விடும் பாத்திரத்துக்கு ஏற்ற குணசித்திர நடிகர் நாகையாதான்; ஜமீன்தாராக வந்து உயிர் விடும் தருணத்தில் நாகையா படத்துக்கு உயிர் கொடுத்து விடுகிறார்.

கரடுமுரடாக இல்லாமல், வசனம் நன்றாயிருக்கிறது. பாடல்களும் பாதகமில்லை.

"முகூர்த்த நாளும் முடிவாச்சா
மூக்கணாங் கயிறும் போட்டாச்சா"

என்ற பாடலும் பெண்களின் அபிநயமும் நன்றாயிருக்கின்றன.

நல்ல படம் என்று பாராட்டக் கூடிய ராகினி பிலிம்ஸாரின் தயாரிப்பான "பெண்ணின் பெருமை" யில் திருஷ்டி பரிகாரமாகச் சில காட்சிகள் ஹாஸ்யமாக நினைத்துச் சேர்க்கப் பட்டிருக்கின்றன. ஏற்கனவே சேட்டு விட்ட ஹாஸ்ய வெடிகள் நன்கு வெடிக்காதது அதிசயமில்லை.

ஜமீன்தாரின் இளைய மனைவியாக நடிக்கும் சாந்தகுமாரியின் நடிப்பு துஷ்டப் புதல்வனைத் துப்பாக்கி கொண்டு சுட முயன்ற போது உயர்ந்து நின்றது.

நாகுவின் காதலியாகத் தோன்றி, எம். என் ராஜம் நன்றாக நடித்திருக்கிறார்.

நடை, உடை, பாவனை எதிலும் அருவருப்பு உணர்ச்சி ஏற்படாமல் இருக்கும் இந்தப் படத்தைப் பொதுவாக யாரும் பார்த்து வைக்கலாம்.

# லைப் இன்ஷ்யூரென்ஸ்

# நாட்டு முன்னேற்றத்தின் ஜீவநாடி

*1956-ம் வருட ஆயுள் இன்ஷ்யூரென்ஸ் (அவசரகால விதிகள்) சட்டத்தை, 19–1–56 அன்று ராஷ்டிரபதி பிரகடனம் செய்துள்ளார். இதனால் இந்தியாவிலுள்ள எல்லா ஆயுள் இன்ஷ்யூரென்ஸ் கம்பெனிகளின் பூரண நிர்வாகம் உடனடியாக மத்திய சர்க்கார் பொறுப்பின் கீழ் வரும். வெளிநாடுகளில் இந்தியர்கள் நடத்தும் ஆயுள் இன்ஷ்யூரென்ஸ் தொழிலுக்கும் இந்தியாவில் வெளிநாட்டவர்கள் நடத்தும் ஆயுள் இன்ஷ்யூரென்ஸ் தொழிலுக்கும் இந்த அவசரச் சட்டம் பொருந்தும்.*

இது எல்லா ஆயுள் இன்ஷ்யூரென்ஸ் தொழிலையும் சர்க்கார் நிர்வாகத்தின் கீழ் கொண்டு வருவதற்காக எடுத்துக்கொண்ட முதல் பூர்வாங்க நடவடிக்கை. இவ்வளவு பிரம்மாண்ட அளவில் இம்மாதிரி உலகில் எங்குமே இதுவரை முயற்சி செய்யப்படவில்லை; இந்திய இன்ஷ்யூரென்ஸ் சகாப்தத்திலேயே இது ஒரு புதிய அத்தியாயத்தின் ஆரம்பம்.

## இப் புதிய மாறுதல்களால் நீங்கள் எவ்வாறு பாதிக்கப் படுகிறீர்கள்?

### ஏற்கனவேயுள்ள பாலிஸிதாரர்கள்

ஏற்கனவே நீங்கள் இன்ஷ்யூர் செய்து கொண்டிருந்தால் உங்களுக்கு உறுதி செய்து கொடுக்கப்பட்டுள்ள நிபந்தனைகள், சலுகைகள், லாபங்கள் முதலியவைகள் முன்பு போலவே நீடிக்கப்படும். யாதொரு சிரமமும் தடங்கலும் தாமதமும் இல்லாமல் காலக்கிரமத்தில் உங்களுடைய பாலிஸிப் பணம் பட்டுவாடா செய்யப் படும். சர்க்கார் நிர்வாகத்தால் பாலிஸிதாரர்களுக்கு திறமையாகவும், துரிதமாகவும் சேவை செய்ய இயலும்.

உங்கள் பாலிஸிகளை அமுலில் இருக்கும்படிச் செய்யுங்கள். அவைகளைப் 'பெய்டப்' பாலிஸிகளாகவோ அல்லது ரத்தாகும்படியோ செய்து விடாதீர்கள். வழக்கம்போல் பிரீமியங்களைச் செலுத்தி வாருங்கள்.

### ஆயுள் இன்ஷ்யூரென்ஸ் ஏஜெண்டுகள்

*நீங்கள் ஒரு இன்ஷ்யூரென்ஸ் ஏஜெண்டாயிருந்தால், நீங்கள் அதேபோல் நீடித்திருக்கலாம்.*

உங்கள் மூலம் எடுக்கப்படும் பாலிஸிகளுக்கு சர்க்காரின் பூரண ஆதரவு உள்ளது என்பதனால் இன்ஷ்யூரென்ஸின் மேன்மையான தத்துவத்தை சமூகத்தில் அதிகமாகப்

பரவச் செய்து அதனால் உங்கள் சொந்த வருமானத்தை மாத்திரமேயன்றி, தாய் நாட்டின் பொருளாதாரத் திட்டமும் முன்னேற்றம் அடையும் என்ற திட நம்பிக்கையுடன் முயற்சி செய்வீர்களாக.

## இன்ஷ்யூர் செய்துகொள்ளும் பொதுமக்கள்

ஆயுள் இன்ஷ்யூரென்ஸ் தொழிலை தேசியமாக்குவதின் முக்கிய நோக்கம், மக்களின் சேமிப்புத் தரத்தைப் பல் வழிகளில் நன்றாக அபிவிருத்தி செய்து அச்சேமிப்புக்களைத் திரட்டி தேசிய அபிவிருத்தித் திட்டங்களை மேற்கொண்டு நிறைவேற்றுவதற்கேயாம்.

இன்று ஆயுள் இன்ஷ்யூரென்ஸ் தொழிலில் முதலீடு செய்யப்படும் ஒவ்வொரு ரூபாயும் உங்கள் குடும்பத்திற்கு மாத்திரம் பாதுகாப்பு அளிப்பதோடு நின்று விடாமல் பெருவாரியான மக்களுக்கும் சுபிட்சத்தைக் கொடுக்க ஏது செய்கிறது.

உங்களால் எடுத்துக் கொள்ளப்படும் பாலிஸிகளுக்கு சர்க்கார் பூரண ஆதரவளிப்பார்கள். மேலும் இந்தியா பூராவிற்கும் ஒரே மாதிரியாக தாராளமான சலுகைகள் பாலிஸிகளுக்கு வழங்கப்படும். கீழே குறிப்பிட்டுள்ளபடி பிரீமிய விகிதமும் ஒன்றேதான்.

### பிரீமிய விகிதத்தில் குறைப்பு

20-1-56 அன்று அல்லது அதற்குப் பிறகோ அமுலில் வந்த பாலிஸிகளுக்குப் பிரீமியத்தொகை ஓரியண்டல் கவர்ன்மெண்டு செக்யூரிட்டி லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட் எல்லாவிதமான பாலிஸிகளுக்கும் எந்த விகிதத்தில் பிரீமியம் வசூலித்தார்களோ அதை விட பிரதி ஆயிரம் ரூபாய் அஷ்யூரன்ஸ் தொகைக்கு வருஷத்திற்கு ஒரு ரூபாய் வீதம் குறைவாக வசூலிக்கப்படும். ஆனால் பிரதி ஆயிரம் ரூபாய் அஷ்யூரன்ஸ் தொகைக்குக் கட்ட வேண்டிய வருஷாந்திர பிரீமியம் ரூ. 20/-க்குக் குறைவாயிருந்தால் 5 சத விகிதமே குறைக்கப்படும். இந்தக் குறைவான பிரீமிய விகிதம் ஒரே தவணையில் பிரீமியம் செலுத்தப்படும் பாலிஸி திட்டங்களுக்கு செல்லுபடியாகா. 20-1-56க்கு முன்னர் ஓரியண்டல் கம்பெனியாரின் பிரீமிய அட்டவணைகளில் கொடுக்கப்பட்டிருக்கும் இன்ஷ்யூரென்ஸ் திட்டங்கள் மட்டுமே இனிமேல் அமுலிலிருக்கும்.

## தேசியமயமாக்கப்பட்டதால்

உங்களுக்கு

**பூரண பாதுகாப்பு — சிறந்த பாலிஸி நிபந்தனைகள்—குறைவான பிரீமிய விகிதங்கள்—நம்பகமான சேவை—சிக்கனமான நிர்வாகம் ஆதரவான லாபங்கள்**

அதனால் இப்பொழுதே ஒரு பாலிஸி எடுத்துக்கொண்டு இன்ஷ்யூரென்ஸ் தேசியமயமாக்கப்பட்டதால் கிடைக்கும் லாபங்களை அடையுங்கள்

இந்தியாவில் ஆயுள் இன்ஷ்யூரென்ஸ் தொழில் நடத்தும் கம்பெனியார்களால் வெளியிடப்பட்டது




லையில் பொழுது விடிவதற்குள் ஜம்முவிலிருந்து கிளம்பி விட வேண்டும். அதற்குள் ஜம்முவைப் பற்றிக் கொஞ்சமாவது தெரிந்து கொள்வோம்.

தவி நதியின் கரையில் ஜம்மு நகரம் அமைந்திருக்கிறது என்பதை நேயர்கள் அறிவார்கள். தவி என்றால் நதி என்றுதான் பெயர். ஆனால் அங்குள்ள ஆறுகளுக்கு அந்த ஆறுகள் செல்லும் ஊரின் பெயரைச் சேர்த்துத் தவி என்று சொல்கிறார்கள். அதாவது ஜம்மு தவி, ரஜௌரி தவி, பூஞ்ச் தவி என்று பெயர் சொல்கிறார்கள். தவி எப்படியோ போகட்டும். ஜம்முவைப் பற்றித் தெரிந்து கொள்வோம். ஜம்மு நகரில் நாம் பார்க்கும் மக்கள் எல்லாரும் பஞ்சாபிகள் போல் அல்லவா இருக்கிறார்கள்! ஆம், பஞ்சாபிகள் அதிகம்தான் இருக்கிறார்கள் என்று நினைக்கும்படி இருக்கிறது. விசாரித்துப் பார்த்தால், அவர்கள் ஆடைகள் அணிந்திருக்கும் விதம்தான் பஞ்சாபிகள்போல் இருக்கிறதே ஒழிய அவர்கள் உண்மையில் பஞ்சாபிகள் அல்ல என்பதை அறிய முடிகிறது.

ஜம்முவுக்கு டுக்கர் என்பது பழைய பெயர். டுக்கர் நகரில் வசிக்கும் மக்களை டோக்கர் என்று அழைத்து வந்தனர். இப்பொழுதும் டோக்கர்களில் இந்துக்களும் முஸ்லிம்களும் இருக்கிறார்கள். இவர்கள் உடல்கள் கட்டுமஸ்தானதாக இல்லை. ஆனாலும் பார்ப்பதற்கு வசீகரமாகக் காணப்படுகிறார்கள். டோக்கர்கள் பேசும் மொழி டோக்கரி. பாரசீகமும், பஞ்சாபியும் கலந்த மொழிதான் டோக்கரி. ஜம்முவை டோக்கர் மன்னனான குலாப்சிங் தரும தவறாது அரசாண்டு வந்தான்.

இருநூறு ஆண்டுகளுக்கு முன் வியாபாரிகளாக வந்த வெள்ளைக்காரர்கள் அப்பொழுது இந்தியாவில் கொஞ்சம் கொஞ்சமாகத் தங்கள் ஆட்சியை நிலைநாட்டி வந்தனர். இந்தியாவின் ஆட்சி கிழக்கிந்தியக் கம்பெனியாரிடமிருந்து வந்தது. அவர்களிடமிருந்து எழுபத்தைந்து லட்சம் ரூபாய் கொடுத்து உலகிலேயே மிக அழகு வாய்ந்த சொர்க்க பூமியான காஷ்மீரை விலைக்கு வாங்கி அதையும் தன்னுடைய ஆட்சிக்குக் கீழே கொண்டு வந்தான் மன்னன் குலாப்சிங். வெள்ளைக்காரர்கள் மகா கெட்டிக்காரர்கள். இந்தியாவின் ஒரு பாகத்தை இந்திய மன்னனிடமே விற்றுப் பணம் பெற்றால் அவர்களைக் கெட்டிக்காரர்கள் என்று சொல்லாமல் வேறு என்ன சொல்வது! அன்று முதல் சுமார் நூறு ஆண்டுகளுக்குமேல் டோக்கர்களின் ஆட்சியில்தான் ஜம்மு - காஷ்மீர் இருந்து வந்தது. காஷ்மீர் மன்னரின் சேனையில் டோக்கர் வீரர்கள்தான் அதிகம்.

காஷ்மீர் மன்னர் பரம்பரையில் கடைசி மன்னரான ஹரிசிங் தமது பதவியைத் தியாகம் செய்த பிறகு ஜம்மு-காஷ்மீரின் நிலைமை மாறியது. ஜம்மு-காஷ்மீர் மக்கள் விருப்பத்துக்கு இணங்க ஜம்மு-காஷ்மீர் சமஸ்தானம் இந்தியாவுடன் இணைந்து இருந்து வருகிறது.

இன்று ஜம்முவில் இந்துக்கள்தான் அதிகம் இருக்கிறார்கள். முஸ்லிம்கள் ஜம்முவைக் காலி செய்து விட்டு வெளியேறி விட்டனர்.

இந்த விவரங்களையெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டே ஜம்முவின் புகழ் பெற்ற ரகுநாதர் கோயிலுக்குச் சென்றோம்.

அதனுடைய மின்னும் தங்கக் கோபுரங்கள் "வாருங்கள்! வாருங்கள்!" என்று வாழ்த்துக் கூறி நம்மை அழைக்கின்றன.

கோயிலுக்குள் இப்போது பிரவேசித்து விட்டோம். நம்மைப் போல் வருகிறவர்கள் எல்லாரும் என்ன செய்கிறார்கள்! வாசலில் பாதரட்சைகளைக் கழற்றி வைத்து விட்டு உள்ளே செல்கிறார்கள். கர்ப்பக்கிருகம் வரையில் நேரே செல்கிறார்கள். சாதிபேதமில்லாமல் எல்லாரும் கர்ப்பக்கிருகம் வரையில் செல்லலாம். அங்கு கம்பீரமாக நிற்கும் ராமனையும், சீதா பிராட்டியையும், லட்சுமண சாமியையும் கைகூப்பி வணங்கி வலம் வருகிறார்கள். ஸ்ரீராமன் கரிய திருமேனியனாகவே காட்சி தருகிறார்! விக்கிரகம் எல்லாம் திபேத்தியரின் சாயையில் காட்சி தருகிறது! உள்ளிருந்து சாம்பிராணி வாசனை கம்மென்று வருகிறது! சிலர் கைநிறையப் புஷ்பங்களை எடுத்துப் போடுகிறார்கள். அவர்கள் சுவாமியின் பாதங்களில் பூவை வைத்துவிட்டுப் பக்தியுடன் நிற்பதே அழகிய காட்சியாக இருக்கிறது.

கர்ப்பக்கிருகப் பிராகாரங்களைச் சுற்றி வருவோம். பிராகாரச் சுவர்களில் எல்லாம் புராண இதிகாசங்களில் உள்ள பல காட்சிகளை, இறைவன் திருவிளையாடல்களை வெள்ளைச் சலவைக் கல்லில் செதுக்கி வைத்திருக்கிறார்கள்.

தமிழ் நாட்டுக் கோயில்களில் உள்ள சிற்பங்களைப் பார்த்து விட்டுச் சென்ற நமக்கு அது அவ்வளவு தூரம் கவர்ச்சிகரமாக இல்லாவிட்டாலும் அந்தச் சிற்பங்களிலும் ஒரு அழகு மிளிரத்தான் செய்கிறது.

கோயிலுக்கு இடது புறத்தில் ஒரு ஜோதி லிங்கம் இருக்கிறது. இந்த லிங்கமும் சலவைக் கல்லினால் செய்யப்பட்டதுதான். ஆனாலும் ஏதோ ஒரு புது மாதிரியான கண்ணாடிக் கல்லால் ஆனது போல் காட்சி தருகிறது. ஜோதி லிங்கத்துக்குக் கற்பூர தீபாராதனை செய்கிறார்கள். அப்போது லிங்கத்தில் கற்பூரத் தீபாராதனையின் ஜோதி பிரதிபலிக்கிறது. அந்தச் சமயத்தில் ஜோதிலிங்கத்தின் உள்ளே வான வில்லின் வர்ண ஜாலங்கள் அத்தனையும் ஒளி வீசித் திகழ்கின்றன.

ஜோதிலிங்கத்தைத் தாண்டி அப்பால் சென்றோம். அங்கு பிராகாரத்தில் பத்து அவதாரங்களையும் தனித்தனியே விக்கிரக உருவத்தில்



# ஜம்முவின் சரித்திரம்

வெள்ளைச் சலவைக் கல்லிலேயே செய்து வைத்திருக்கிறார்கள். இது இல்லாமல் விநாயகர், சரஸ்வதி தேவி முதலிய விக்கிரகங்களும் இருக்கின்றன. இவைகளை ஒவ்வொன்றாகப் பார்த்துக் கொண்டே செல்லும்போது ஒரு அபூர்வமான சிலை தெரிகிறது. இந்தச் சிலை என்ன என்று தெரியவில்லை. அது என்ன சிலை என்று விசாரிப்பதற்காக அருகிலிருந்த வட இந்திய பைராகிகள் போல் தோன்றிய சாமியாரைப் பார்த்து, "இந்த விக்கிரகத்தின் பெயர் என்ன!" என்று ஹிந்தியில் விசாரித்தோம்.

அந்தச் சாமியார் தம் அருகில் இருந்த சாமியாரைப் பார்த்து "இது என்ன விக்கிரகம் சாமி!" என்று பச்சைத் தமிழில் விசாரித்தார்.

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஜம்முவில் நாம் பார்க்கும் பரதேசி ஒரு தமிழனா என்று ஆச்சரியப்பட்டுப் போனேன். கோவணம் மட்டுந்தான் தரித்திருந்தார் அந்தப் பரதேசி. காலணா கையில் இல்லாமல் ராமநாதபுரத்திலிருந்து க்ஷேத்திராடனம் செய்து வருகிறார். இப்பொழுது இமாலயத்தில் உள்ள அமர்நாத்துக்குச் சென்று கொண்டிருப்பதாகச் சொன்னார்.

அமர்நாத்துக்குச் செல்லும் சந்நியாசிகளுக்கு எல்லா விதமான வசதிகளையும் ஜம்மு-காஷ்மீர் சமஸ்தானம் செய்து வருகிறது என்று அறிந்தோம்.

அதிர்ஷ்டவசமாக ஜம்முவில் நடக்கும் தெருக் கூத்தைப் பார்க்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. கோயிலின் பிராகாரத்திலேயே கூத்து நடந்து கொண்டிருந்தது. அந்தக் கூத்தைப் பற்றி என்னத்தைச் சொல்வேன்! "அபிமன்யு வதம்" என்ற கூத்து அது. அதில் ஒரு காட்சியைப் பார்த்தோம். ஹா! ஹிட்லர் மீசையும், சூட்டும் கோட்டும் போட்டுக் கொண்டு வந்து ஆடிய சிறுவன் அபிமன்யுவின் வேஷத்தைச் சொல்வதா! மீசை முளைத்த ஆண் பிள்ளை பெண் வேஷம் தரித்து வந்து கூத்தடித்த கோலத்தைக் கூறுவதா! திடீரென்று கூத்துப் பார்த்துக் கொண்டிருந்த கூட்டத்தில் ஏற்பட்ட கலாட்டாவின் அமளி துமளியைப் பற்றி இயம்புவதா! இல்லை, அந்தச் சமயத்தில் மேடைமீதிருந்த அபிமன்யு






தன்னுடைய வேஷத்துடனேயே கூட்டத்தில் குதித்து ஆர்ப்பாட்டம்செய்ததைச்சொல்வதா! பெண் உடை தரித்த ஆண்பிள்ளை கூட்டத்தில் 'தொப்' என்று குதித்தானே. அந்தக் காட்சி இன்னமும் என் கண் முன்னால் நிற்கிறது!

## அக்னூர் கோட்டை

மறு நாள் ஜூன் 26-ல் காலையில் ஜம்மு நகருக்கு ஒரு வணக்கம் செலுத்தி விட்டுக் கிளம்பினோம். ஜினாப் நதியில் இருந்து பிரிந்து வரும் கிளை நதியான ரன்பீர் ஆற்றங்கரை யோரமாகப் பத்திரிகையாளர்களைச் சுமந்து கொண்டு ராணுவ ஜீப் வண்டிகள் ஓடிக் கொண்டிருந்தன. ரன்பீர் நதிக் கரையில் ஆண்களும் பெண்களும் குளித்துக் கொண்டும் துணி துவைத்துக் கொண்டும் இருந்தனர். அங்குமிங்கும் சில குதிரைகள் மேய்ந்துகொண்டிருந்தன. நதியில் குளித்துக் கொண்டிருந்தவர்களோ, புல்லை மேய்ந்து கொண்டிருந்த குதிரைகளோ வரிசையாகச் சென்று கொண்டிருந்த ராணுவ ஜீப் வண்டிகளைச் சிறிதும் லட்சியம் செய்ததாகத் தெரிய வில்லை. இதை விடப் பயங்கரமான ராணுவ டாங்கிகளையும், லாரிகளையும் பார்த்துப் பார்த்து இது சர்வ சாதாரணமாகி யிருக்கும் போலிருக்கிறது.

ரன்பீர் ஆற்றின் கரையைத் தாண்டிக் காடும் மலையும் நிறைந்த கரடு முரடான சாலையில் ஜீப் வண்டிகள் ஓடத் தொடங்கின. வானத்துக்கும் பூமிக்குமாகத் தூக்கித் தூக்கிப் போடுவதுபோல் ஜீப் வண்டிகள் அந்தக் கச்சா ரோடில், அதாவது சீர்திருத்தம் செய்யப்படாத சாலையில் குதி போட்டுக் கொண்டு ஓடின. இவ்வாறு இருபத்தேழு மைல்கள் சென்ற பிறகு ஜினாப் நதியின் புதிய பாலத்தைக் கடந்தோம். புதிதாகக் கட்டியிருக்கும் பாலத்துக்குச் சற்றுத் தூரத்துக்கு அப்பால் ஜினாப் நதியின் பழைய பாலம் இடிந்து கிடந்தது. யுத்தம் செய்த கொடுமையை இன்னும் நினைவூட்டிக் கொண்டு பரிதாபமாக அந்தப் பழைய பாலம் காட்சி யளித்தது.

ஜினாப் நதியைத் தாண்டியதும் மீண்டும் ஒரு காட்டாற்றின் கரையோடு ஜீப் வண்டிகள் ஓடின. காட்டாற்றில் தண்ணீர் இல்லாததால் பார்ப்பதற்குப் பயங்கரமாக இருந்தது. இந்த உலகையே விழுங்கி விடுவதற்கு இமய மலை வாயைப் பிளந்து கொண்டிருப்பது போலிருந்தது. இந்தப் பயங்கரக் காட்டாற்றைத் தாண்டியதும் இடது புறத்தில் அழகு நிறைந்த அக்னூர் கோட்டை கம்பீரமாகக் காட்சி அளித்தது. அந்தக் கோட்டைக்கு அருகில் அமைதி நிறைந்த சின்னஞ் சிறு நகரம் தென்பட்டது. "இதுதான் அக்னூர் நகரம்" என்றார் சிப்பாய்.

இப்பொழுது அமைதியாகக் காணும் இந்த நகரம் 1947-ம் ஆண்டில் கொடிய யுத்தத்தில், கொள்ளைக் கூட்டத்தாரின் கொடுமையிலும் பாகிஸ்தான் வீரர்களின் படுபாதகத்திலும் அகப்பட்டுத் தவியாய்த் தவித்தது.

அந்தச் சமயத்தில் அக்னூர் நகரில் உள்ள மக்களில் பெரும்பாலோர் அக்னூர் கோட்டைக்குள் அடைக்கலம் புகுந்தனர். இன்னும் சிலர் உயிர் பிழைத்தால் போதும் என்று தங்கள் உடைமைகளை எல்லாம் விட்டு விட்டு இந்தியாவுக்கு ஓடிவிட்டனர்.

இந்த விவரங்களை ஜீப் வண்டியை ஓட்டி வந்த ராணுவ சிப்பாய் கூறிக் கொண்டிருக்கும் போதே "அப்பொழுது நமது பட்டாளம் இங்கு வரவில்லையாக்கும்" என்று கேட்டேன்.

"நமது சேனைகள் வந்துதான் இந்த மக்களைக் காப்பாற்றினர். இரண்டு இந்திய பட்டாளங்கள் இங்கே நிலையாக இருந்து மக்களுக்கு அபயம் அளித்து வந்தன. அப்பொழுது ஏற்பட்ட சண்டையில் இந்தக் காட்டாற்றில் நம்முடைய டாங்கி ஒன்று இறங்கிச் சென்றது. பாதி ஆறு கடந்து செல்லும் போது திடீரென்று வெள்ளம் வந்து டாங்கியையே அடித்துக் கொண்டு போய் விட்டது. அந்த டாங்கி எங்கு சென்றது என்று இன்னும் தெரியவில்லை. நாற்பது ஐம்பது டன் நிறையுள்ள டாங்கியே அடித்துப் போகும் இப்படிப்பட்ட வெள்ளத்தில் நமது வீரர்கள் எத்தனையோ பேர் தங்கள் இன்னுயிரையும் தியாகம் செய்து இங்குள்ள மக்களைக் காப்பாற்றினர். எதிரிகளை அடித்து விரட்டினர்" என்றார் சிப்பாய்.

அவருடைய உணர்ச்சி நிறைந்த பதிலைக் கேட்டு மயங்கி உட்கார்ந்து விட்டோம்.

அக்னூர் ஜனத்தொகையில் தொண்ணூறு பேர் முஸ்லிம்கள்தான். அப்படி இருந்தும் பாகிஸ்தான் வீரர்கள் சாதியைப் பார்த்துக் கொடுமை செய்ய வில்லை. அநாகரிகமான கொள்ளைக் கூட்டத்தினரும், அக்னூரில் இருந்த ரௌடிகளும் பாகிஸ்தான் பட்டாளங்களும் சேர்ந்து இந்துக்கள் முஸ்லிம் என்று பேதம் பாராட்டாமல் குழந்தைகளையும், பெண்களையும் மிக இழிவான காரியங்களை எல்லாம் செய்து கொடுமைப் படுத்தினர். இந்திய ராணுவம்தான் அந்தக் கொடுமைகளை அடக்கி, அராஜகத்தை ஒழித்து அக்னூரில் அமைதியை நிலை நாட்டியது.

"இங்குள்ள மக்கள் என்ன தொழில் செய்து ஜீவனம் நடத்துகிறார்கள்!"

"எல்லாருக்கும் முக்கியமான தொழில் விவசாயம்தான்" என்றார் சிப்பாய்.

## சீடு மரக் காடுகள்

அக்னூரைத் தாண்டி மேலே பிரயாணத்தைத் தொடங்கினோம். இமய மலையின்மீது தான் பிரயாணம் செய்து கொண்டிருக்கிறோம். ஆனாலும் வழியில் எங்கு பார்த்தாலும் பாலைவனத்துக்குச் சமமான சமவெளிகள் காணப்படுகின்றன. அதில் பசும் புல் என்பது இலையவே கிடையாது. குட்டை குட்டையான முட்செடிகள் மண்டிக் கிடக்கின்றன. எங்கு பார்த்தாலும் கருங்கல் உருளைக் கற்களை ஆகாயத்திலிருந்து வாரி இறைத்தது போல் பரவலாகக் கிடக்கின்றன. பூமியில்தான் இருக்கிறோமா என்று சந்தேகம் ஏற்படும்படி ஆங்காங்கு சின்னதும் பெரியதுமாகப் பல குன்றுகள் தெரிகின்றன. அவைகளுக்கு மத்தியில்தான் சீடு மரங்கள். நன்கு வளர்ந்து கூர்மையாக இருக்கும் இலைகளை யுடைய, பரவலான கிளைகளே இல்லாத உயரம் உயரமான சீடுமரக் காடுகள் தெரிகின்றன. நூறடி இருநூறடி உயரம் வானோங்கி வளர்ந்துள்ள சீடு மரத்தில்

ஒரு மாதிரியான எண்ணெய் இருக்கிறது.

பச்சை மரத்திலே நெருப்புப் பட்டால் கூட பெட்ரோலில் தீப் பிடிப்பது போலக் காடே தீப்பற்றி எரிகிறது. இந்தக் கோரக் காட்சியை, சீடு மரங்கள் தீப்பற்றி எரியும் பயங்கர சம்பவத்தை அன்று மாலையே பார்க்கும்படியாகி விட்டது. சீடு மரக் காடு பற்றி எரிகிறது. தீயின் ஜ்வாலைகள் வானை நோக்கித்தாவிக் கிளம்புகின்றன. சட சட என்ற சத்தத்துடன் மரங்கள் எரிந்து சரிந்து விழுகின்றன. எங்கு பார்த்தாலும் கரும் புகை சூழ்ந்து கொண்டிருந்தது. பச்சை மரம் பற்றி எரியும் அதிசயத்தை நேரிலேயே பார்த்து வியந்து போனேன்.



படகின் மூலம் பத்திரிகையாளர்கள் ஆற்றைக் கடக்கின்றனர். மேலே பிரயாணத்துக்கு அக்கரையில் அபாயமான சாலையில் ஜீப் வண்டிகள் வரிசையாக நிற்பதைக் கூர்ந்து கவனியுங்கள்.

சீடு மரங்களில் கூடு கட்டி வாழ்ந்த பறவைகள் மாலைவேளையில் தங்கள் கூடுகளைத் தேடித் திரும்பி வந்தன. ஆனால் மரங்களில் தாங்கள் கட்டியிருந்த கூடுகள் காட்டுத் தீயில் விழுந்து எரிவதையும், கூடுகளில் இருந்த குஞ்சுகள் இறக்கை அடித்துப் பறக்க முடியாமல் துடி துடித்துச் சாவதையும் பார்த்த தாய்ப் பறவைகள் பட்ட வேதனையை இப்பொழுது நினைத்தால்கூடக் கண்ணீர் வருகிறது.

தீயிடம் நெருங்கவும் முடியாமல், குஞ்சுகளைக் காப்பாற்றவும் முடியாமல் அவைகள் படும் வேதனையைப் பார்த்த போது, "இப்படித் தான் இங்குள்ள மக்கள் யுத்த சமயத்தில் செய்வது இன்னதென்று புரியாமல் துடி துடித் . மடித்தார்கள்" என்றார் சிப்பாய். அப்படி அவர் சொன்ன போது அந்த ஒரு வாக்கியத்திலேயே யுத்தத்தின் பயங்கரக் கொடுமையை விளக்கிக் காட்டி விட்டார்.

சீடுமரக் காடுகளுக்கு மத்தியில் ஜீப் வண்டிகள் எத்தனை எத்தனையோ வளைவு நெளிவான சாலைகள் வழியாகத் திரும்பித் திரும்பிச் செல்ல வேண்டி யிருந்தது.

நடு நடுவே பல செக் போஸ்ட்கள், அதாவது வண்டிகள் எங்கிருந்து எங்கே, ஏன் செல்லுகின்றன என்று பரிசோதனை செய்யும் நிலையங்கள் இருக்கின்றன. இந்தப் பாதைகள் மகா பயங்கரமான பாதையாக இருப்பதாலும், முக்கியமாக ராணுவத்தினர் உபயோகப்படுத்தும்படியாக இருப்பதாலும் குறிப்பிட்ட நேரங்களில்தான் வண்டிகள் செல்லலாம் என்று விதி செய்திருக்கின்றனர்.

மலைகளைச் சுற்றிச் சுற்றி ஏறியும் இறங்கியும் வண்டிகள் ஓடிக் கொண்டிருக்கும்போது "1947 ம் ஆண்டு பாகிஸ்தான் வீரர்கள் இங்கு அக்கிரமமாக நுழைந்தார்கள் அல்லவா! அந்தச் சமயத்தில் அதோ தெரிகிறதே ஒரு மலை, அதன் உயரத்தில் பாகிஸ்தான் படைகள் இயந்திரத் துப்பாக்கியைப் பொருத்தி வைத்திருந்தன. அதற்கு அப்பால் தெரிகிறதே, அந்தக் குன்றின்மீது பெரிய பீரங்கியையே வைத்திருந்தார்கள். அங்கிருந்து சுட்டால் இந்தச் சாலையில் குறி தவறாமல் குண்டு வந்து விழும்" என்றார் சிப்பாய்.

"அதை எப்படிச் சமாளித்தீர்கள்!"

"இங்கிருந்து மூன்று மைல்களுக்குப் பின்னாலேயே நமது சோல்ஜர்கள் மோட்டார் வாகனங்களில் இருந்து இறங்கிக் கொண்டார்கள். பிறகு கால் நடையாக வந்தார்கள். இந்த இடத்துக்கு வந்ததும் தரையில் படுத்து ஊர்ந்த வண்ணம் அந்த மலைமீது ஏறினார்கள். மழைபோல் பொழிந்து கொண்டிருந்த இயந்திரத் துப்பாக்கிக் குண்டுகளையும், பீரங்கிக் குண்டுகளையும் லட்சியம் செய்யாமல் ஏறினார்கள். ஏறித் தங்கள் கையில் இருந்த துப்பாக்கியின் மூலம் அங்குள்ள எதிரிகளை முறியடித்து அந்தப் பீரங்கியை வசப்படுத்தினார்கள். வசப்படுத்திய பீரங்கியை எதிரிகளின் திசைப் பக்கம் திருப்பி வைத்தனர்."

இதை அந்தச் சிப்பாய் சாதாரண சம்பவமாகத்தான் சொன்னார். ஆனால் அந்தப் பீரங்கியைக் கைப்பற்றுவதற்குள் நமது சிப்பாய்கள் எத்தனை பேர் உயிரை விட்டிருக்க வேண்டும்! எத்தனை பெரிய கஷ்டங்களை அனுபவித்திருக்க வேண்டும்! கரடு முரடான காட்டிலும் மலையிலும் மார்பினாலேயே ஊர்ந்து கொண்டு ஐந்துமைல் தூரத்துக்கு மேல் செங்குத்தான மலைமேல் ஏறுவது, அதிலும் துப்பாக்கிகளையும் இதர சாமான்களையும் சுமந்து கொண்டு செல்வது என்பது சாதாரண காரியமா! அப்பொழுதெல்லாம் எதிரிகளின் குண்டு மழை பொழிந்துகொண்டு

தானே இருந்திருக்கும். எத்தனையோ வீரர்கள் அதற்குப் பலியாகித்தானே இருப்பார்கள். அதையெல்லாம் லட்சியம் செய்யாமல் சென்று எதிரிகளுடன் போரிட்டு அவர்களை முறியடிப்பது என்பது மனத்தால் கற்பனை கூடச் செய்து பார்க்க முடிய வில்லையே! நமது இந்திய வீரர்களின் வீரமே வீரம்!

## இன்னும் சில முகாம்கள்

அந்த இடத்தில் குன்றுகளுக்குப் பக்கத்தில் மண் குடிசைகள் கட்டிக் கொண்டு அதன் மீது உலைகளையும், மரக் கிளைகளையும் போட்டு மூடிக்கொண்டு இரவு பகல் இருபத்து நாலு மணி நேரமும் நமது வீரர்கள் பாரத பூமியின் எல்லையைக் காவல் காத்து வருகிறார்கள்.

வீரர்கள் வசிக்கும் மண் குடிசைகளுக்குப் பக்கத்திலேயே கோவேறுக் கழுதைக் கொட்டில்களும் இருக்கின்றன. கருத்த உருவமுள்ள இந்தக் கோவேறு கழுதைகள் சிப்பாய்களுக்கு எத்தனை எத்தனையோ வகைகளில் உதவி செய்து வருகின்றன. கோவேறு கழுதைதான் அங்கு சிப்பாய்களின் ஜீப் வண்டி, கால்வாய் அதாவது ராணுவ லாரி, விமானம் எல்லாம்.

இவ்வாறு யுத்த பூமியில் நேரில் சென்று சாதாரணமாக யாருமே பார்க்க முடியாத பயங்கரக் காட்சிகளை எல்லாம் பார்த்துக் கொண்டு குறுக்கே வந்த ஆற்றைத் தாண்டினோம். இந்த ஆற்றில் இருந்த பாலமும் யுத்தத்தின் போது எதிரிகளால் இடிக்கப் பட்டு விட்டது. அதனால் படகுகள் மூலமாகத் தான் ஆற்றைக் கடந்தோம்.

இந்த இடங்களிலெல்லாம் வெடி குண்டுகள் பட்டுத் தெறித்த மலைப் பாறைகள் ஆங்காங்கு சிதறிக்கிடக்கும் காட்சியை இப்பொழுதுகூடக் காண முடிகிறது! மூன்று வருடங்கள் அரும்பாடுபட்டு நமது சைன்யங்கள் இந்த இடங்களையெல்லாம் தெரிந்து கொண்டு இப்பொழுது வசதியோடு இருக்கின்றன. மற்ற இடங்களை விடத் தனியாக இருந்தாலும், அதாவது மனித சஞ்சாரமற்ற இடத்தில் இருந்தாலும், ராணுவ வீரர்கள் பல வசதிகளைச் செய்து கொண்டிருக்கின்றனர். தங்கள் சொந்தப் பணத்திலிருந்து மின்சாரம் உற்பத்தி செய்யும் இயந்திரம் வாங்கி மின்சாரத்தை உற்பத்திசெய்து ராணுவ கூடாரங்களுக்கு விளக்கும் இதர சௌகரியங்களும் செய்து கொண்டிருக்கிறார்கள்.

ஆரோக்கியமான சத்துள்ள உணவைச் சமைத்துச் சாப்பிடுகிறார்கள். அநேகமாக எல்லா ராணுவ வீரருக்கும் எழுதப் படிக்கத் தெரிகிறது. ஆகையால் ஒவ்வொரு ராணுவ முகாமிலும் ஒரு வாசகசாலையும் பொழுது போக்கு இடமும் இருக்கின்றன.

வாருங்கள், சிப்பாய்கள் உல்லாசமாக இருக்கும் இடம் ஒன்றைப் பார்ப்போம். இதில் சிப்பாய்களின் பொது அறிவு விருத்திக்காக ஒரு கேள்வி போர்டு செய்து வைத்திருக்கிறார்கள். இந்தக் கேள்வி போர்டில் பல கேள்விகள் கேட்கப்பட்டு அதற்குப் பல பதில்களும் எழுதப் பட்டிருக்கின்றன. அந்தப் பதில்கள் சரியாகவும், தப்பாகவும் குறிக்கப் பட்டிருக்கின்றன. கேள்விகளுக்கு வரிசையாக எண்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அந்தப் போர்டில் உள்ள கேள்விகளுக்கான சரியான பதிலில் கை வைத்தால் கேள்விக்கு நேரே இருக்கும் பச்சை விளக்கு எரிகிறது. தப்பான பதிலில் கை வைத்தால் சிவப்பு விளக்கு எரிகிறது. இப்படி விளையாட்டாகவே சிப்பாய்களுக்குப் பொது அறிவு வளருவதற்கு வழி செய்திருக்கிறார்கள். அடிக்கடி இந்தக் கேள்விகள் மாற்றப்பட்டுச் சிப்பாய்களின் அறிவை வளர்த்து வருகிறார்கள். இதற்கு உதவி செய்து வரும் உயர்தர ராணுவ அதிகாரிகளின் சேவைகளைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை.

இந்த முகாமில் உள்ள ஒரு வீரருக்குப் பரம வீர சக்கரம் கிடைத்திருக்கிறது. அதை அந்த முகாமில் உள்ள ஒரு சிப்பாய் மிகுந்த பெருமையோடு சந்தோஷத்துடன் சொன்னார். யாரோ ஒரு சிப்பாய்க்குப் பரம வீரச் சக்கரம் கிடைத்தாலும் அந்த முகாமில் உள்ள அத்தனை பேரும் தாங்களே பரமவீரச் சக்கரம் பெற்றது போல மகிழ்ச்சியையும் பெருமையையும் அடையும் அதிசயத்தைப் பார்த்து வியந்துபோனோம். சிப்பாய்களுக்குள் இருந்து வரும் ஒற்றுமை உணர்ச்சி தேச மக்கள் மத்தியில் வளர்ந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

இன்னொரு முகாமுக்குச் செல்வோம். இந்த முகாமில் நாம் சுதந்திரமாகச் செல்லலாம். எங்கு பார்த்தாலும் சிரித்த முகங்கள். சிரித்த முகத்துடன் காட்சி யளிப்பவர்கள் யாராக இருப்பார்கள்! எல்லாரும் தமிழ் வீரர்கள் தான். ஆம், இது தென்னிந்திய ராணுவ முகாம். பொதுவாக ராணுவத்தில் தென்னிந்தியருக்கு நல்ல பெயர் இருக்கிறது. அதில் ஒன்றும் அதிசயம் இல்லை. நாங்கள் பார்த்த ராணுவ முகாம்களுக்குள்ளாகவே தென் இந்திய ராணுவ முகாம்கள்தான் சுத்தமாகவும், பார்ப்பதற்குக் கவர்ச்சிகரமாகவும் இருந்தன. இது ஏதோ நமது தென் இந்திய ராணுவ முகாம் என்பதற்காக நான் கூறும் விஷயம் அல்ல. இந்த உண்மையை அகில இந்தியப் பத்திரிகையாளர்கள் அத்தனை பேருடன் எல்லா ராணுவ அதிகாரிகளும் மனப் பூர்வமாக ஒப்புக் கொண்டார்கள். இங்கு ஒரு அதிசயம்! தென் இந்திய ராணுவத்துக்கு 'தட்சிண இந்திய ரெஜிமெண்ட்' என்று பெயர். இதில் மலையாளிகள், தெலுங்கர்கள், கன்னடியர்கள், தமிழர்கள் எல்லாரும் ஒன்றாகத்தான் சகோதரர்கள் போல் மகிழ்ச்சியுடனிருக்கிறார்கள். ராணுவத்தைப் பொறுத்த மட்டில் அங்கு தட்சிண ராஜ்யம் தான் அமுல் நடத்தப்பட்டு வருகிறது.

சேர்ந்து வாழ்ந்தால் தானே சிறந்து விளங்கலாம்! அதனால்தானே அவர்கள் இந்தியாவில் உள்ள இதர பகுதிகளில் இருந்து வந்திருக்கும் ராணுவ வீரர்களை விட சிறந்து விளங்குகிறார்கள். அத்துடன் தென்னாட்டில் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக வளர்ந்த வீர பரம்பரையில் வந்தவர்கள் அல்லவா!

இன்னும் எவ்வளவோ இடங்களை நாம் சுற்றிப் பார்க்க வேண்டும். ஒரு இடத்திலேயே அதிக நேரம் தங்குவது என்பது சாத்தியமான காரியமல்ல. ஆகையால் நேயர்கள் நாள் ஒன்றுக்கு முந்நூறு மைல் பிரயாணம் செய்ய வேண்டியிருக்கும். இந்த அவசரப் பிரயாணத்துக்குத் தயாராக இருங்கள். கடும் வேகமாக நம்முடைய ஜீப் வண்டிகள் மேலே பிரயாணத்தைத் தொடங்கி விட்டன. நௌஷாராவை நோக்கிக் காட்டிலும் மேட்டிலும் இதோ ஓடிக் கொண்டிருக்கின்றன. நௌஷாராவில் என்னென்ன பயங்கரங்கள் எல்லாம் நடைபெற்றனவோ! அவைகளை அடுத்த இதழில் பார்க்கலாம். (தொடரும்)

ஹத்திபாயின்

தராசு  மார்க்

உத்திரவாதமான





**ஸ்டெய்ன்லஸ்**
**ஸ்டீல் பாத்திரங்கள்**

உயர்ந்த ரகம்-நேர்த்தியான தயாரிப்பு

ஹத்திபாய் துள்ஸிதாஸ் அண்டு ஸன்ஸ், பம்பாய்-2







## மதிப்பில் சிறந்த ப்ளேட் எதுவென்று நீங்கள் எளிதில் சொல்லமுடியும்

ஒரு ப்ளேடின் மேன்மையை நிர்ணயிக்க உறுதியான பரீக்ஷை அதைக்கொண்டு க்ஷவரம் செய்துகொள்வதுதான்! ஒரு சிறந்த, கூர்மையான ப்ளேட் சுக க்ஷவரத்தை ஒரு தடவையல்ல, அநேகம் தடவைகள் அளிக்கிறது.

ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகளை ஏது தயாரிப்பான வேறெந்த ப்ளேடுகளுடன் ஒப்பிட்டுப் பாருங்கள். உங்கள் முகத்தில் எவ்வளவு சுலபமாக வழுக்கிக்கொண்டு செல்லுகிறது. அதற்குப் பிறகு எவ்வளவு மழுமழுப்பாக உங்கள் முகம் ஆகிறது என்பதையும் கவனியுங்கள். அதே போல் அதன் கூர்மை எவ்வளவு காலத்திற்கு நீடித்திருக்கிறதென்றும் பாருங்கள். நாளுக்கு நாள் அதன் சுக க்ஷவரத்தை அனுபவிப்பீர்கள்.

ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகள் எவ்வளவு நேர்த்தியாக இருக்கின்றன என்பதை, அவைகளைக்கொண்டு க்ஷவரம் செய்துக் கொண்டு பாருங்கள். இதில் தவறுதலுக்கு இடமேற்படுவதில்லை. ஸெவன் ஓ'க்ளாக்தான் உங்கள் பணத்திற்குப் பெறுமானம் கொடுக்கிறது என்று தெரிந்துகொள்ளுவீர்கள்.

# 7 o'clock



**BLADES**

**ஸெவன் ஓ'க்ளாக் ப்ளேடுகள்**



[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

## 16

பெயரும் அளவும் கடந்த ஈசனுக்கு நம்முடைய அறிவை ஒட்டி நாம் வைக்கும் பெயர்கள் பல்லாயிரம். அவற்றில் தரித்திர நாராயணன் என்பதும் ஒரு பெயர். வறுமையில் கஷ்டப்படும் மக்கள் வழிபடும் மூர்த்தி, ஏழைகளுடைய இதயத்தில் குடியிருக்கும் தெய்வம், என்பது அதற்குப் பொருள். [யங் இந்தியா 4—4—29]

ஏழை மக்களின் கருத்தெல்லாம் தங்களுடைய கஷ்டத்தை எப்படி நிவாரணம் செய்வது என்பதிலேயே செல்லும். ஆத்ம உபதேசம் அவர்கள் உள்ளத்தை எட்டாது. போதிய உணவு இன்றித் தவிக்கும் மக்களின் மனத்தை மற்ற விஷயங்களில் இழுக்க முடியாது. என்ன சொன்னாலும் ஏறாது. ஆனால் தங்களுக்கு உணவு கொடுத்தவனைத் தெய்வம் என்று நினைப்பார்கள். வேறு கருத்துக்குள் பசியில் தவிப்பவர்களின் உள்ளத்தில் ஏறாது. [யங் இந்தியா 5—5—27]

ஏழைகளின் கந்தல் துணியில் முடிபோட்டு வைத்திருந்த செப்புக் காசுகளை, களிம்பேறிய தம்பிடிகளை, நான் அவர்களிடம் இந்தக் கையால் வாங்கியிருக்கிறேன். அவர்களிடம் நான் புது நாகரிகங்களைப் பற்றியும் முன்னேற்றங்களைப் பற்றியும் பேசவா? அவர்களிடம் போய் வேதாந்தம் பேசுவது அவர்களைப் புண்படுத்துவது ஆகும். பேசினால் என்னையும் உங்களையும் கொடிய அரக்கர்களாகப் பாவிப்பார்கள். அவர்களறிந்த தெய்வம் கருணையற்றகொடுங்கோல் தெய்வமே அல்லவா?

கோபமும் பயங்கரமும் நிறைந்த தெய்வந்தான் அவர்கள் கண்டது. இவர்களிடம் நான் ஆண்டவனைப் பற்றி என்ன பேச முடியும்? பேச எனக்குத் தைரியமில்லை. இந்த ஏழை மக்களின் ஒளியற்ற கண்களைப் பார்க்கும்போது அவர்களிடம் ஆண்டவனைப் பற்றிப் பேச எனக்கு எப்படி மனம் வரும்? சோறே அல்லவோ அவர்களுக்குத் தெய்வம். ஊமைப் பிராணிகளிடம் நான் சாஸ்திரம் பேசுவதைப் போலவே ஆகும், இவர்களிடம் நான் தெய்வ உபந்யாஸம் செய்வது. அவர்களுக்குக் கூலி தரும் வேலையைக் காட்டிய பிறகே நான் அவர்களிடம் ஆண்டவனைப் பற்றிப் பேச முடியும். இங்கே நாம் கூடி உட்கார்ந்து காலைப் பலகாரம் நன்றாக முடித்து மத்தியானச் சாப்பாடு என்னவாக இருக்கலாம் என்று யோசனை செய்யும் நிலையில் நாம் தெய்வத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்யலாம். ஒருவேளைச் சோற்றுக்கே திண்டாடும் நிலையில் வாழும் மக்களிடம் நான் என்ன தெய்வ ஆராய்ச்சி செய்ய முடியும். அவர்களுக்கு ஈசனுடைய அவதாரம் சோறும் சாறுமே. ஏழைக் குடியானவர்கள் நிலத்தை உழுது சோறு சம்பாதித்துக் கொள்வார்கள். அந்தச் சோற்றுக்கு 'வெஞ்சனம்' கிடைக்குமாறு ராட்டையைக் கொடுத்தேன். இன்று நான் முழங்காலுக்கு மேல் வேஷ்டி கட்டிக்கொண்டு பசியில் தவிக்கும் அந்த ஏழை மக்களின் தனிப் பிரதிநிதியாக உங்கள் முன் நிற்கிறேன்.

[யங் இந்தியா 15—10—31]

**ராஜாஜி**

என் நாட்டு ஏழை மக்களின் உள்ளம் எனக்குத் தெரியும். அவர்களிடையில் அல்லவோ நான் வாழ்ந்து வருகிறேன். அவர்களுடைய நலமே என்னுடைய முதல் கவலை. மற்றதெல்லாம் அதற்குப் பின். அவர்கள் நிலை சீர்திருத்தப் பட்டால் என் கவலை தீர்ந்தது. அவர்கள் உள்ளத்தில் காணும் நாராயணனே என்னுடைய நாராயணன். அந்த நாராயணனை அவர்கள் காணவில்லை. நான் காண்கிறேன். கண்டு வணங்குகிறேன். அவர்களுக்குப் பணி செய்து சத்திய தெய்வத்தைக் காண்கிறேன். எந்த சத்தியம் தெய்வமோ, எந்த தெய்வம் சத்தியமோ அதைக் காண்கிறேன்.

[ஹரிஜன் 11—3—39]

நாமெல்லாரும் திருடர்கள் என்றே சொல்ல வேண்டும். என்னுடைய அவசியத்துக்கு மேல் இந்தச் சமயம் எனக்கு வேண்டாதது ஒன்றை நான் எடுத்துப் பத்திரப்படுத்தி வைத்தேனானால், அதை நான் திருடியவனே ஆவேன். மற்றவர்களின் அவசியத்துக்கு வேண்டியதான ஒன்றை அவர்களுக்குக் கிடைக்காமல் நான் மூடி வைத்தால் அது திருட்டே அல்லவா? மக்கள் சமூகத்துக்கு வேண்டியதை இயற்கை அன்னை தருகிறாள். அவனவனுக்கு வேண்டியதை அவனவன் அந்த அளவில் மட்டுமே எடுத்துக் கொண்டு வாழ்ந்தால் இந்த உலகத்தில் பிச்சை எடுக்கும் ஏழைகள் இருந்தே இருக்க மாட்டார்கள். யாருமே பசியால் சாக மாட்டார்கள்.

[1918]

இந்தியாவில் தற்போது ஒருவேளை உணவு உண்டு இருப்போர் லக்ஷக் கணக்கு. அந்த ஒருவேளைச் சாப்பாட்டில் நெய்யுமில்லை, எண்ணெயுமில்லை. இந்த லக்ஷக்கணக்கான ஏழைகள் பசியாற உண்டு மானம் காக்க உடையும் அடைந்த பிறகே நீங்களும் நானும் எதையும் நமது என்று சொல்லி உரிமை பாராட்ட முடியும். நமக்கு அறிவு வேண்டும். நம்முடைய ஆசைகளைக் குறைத்துக் கொண்டு ஏழைகளுக்கு ஓரளவு மிஞ்சும்படி செய்வது நம்முடைய கடமை.

[1918]

# படித்துப் பாருங்கள்!

## திருமந்திர மாநாட்டு மலர்

சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவில் சிகாகோ சமய மகாநாட்டில் பேசும்போது, ஒருவர், "நீங்கள் விக்கிரகங்களை ஏன் வழிபடுகிறீர்கள்!" என்று கூறி உருவ வழிபாட்டை இகழ்ந்துரைத்தார். அதற்கு விவேகானந்தர் சிறிது பஞ்சை எடுத்துக் காட்டி, "சூரியனில் இருக்கிற தீயைக் கொண்டு இந்தப் பஞ்சைக் கொளுத்த முடியுமா!" என்று வினவினார். சபையிலுள்ளோர் இயலாது என்றார்கள். "நான் கொளுத்துகிறேன், பாருங்கள்!" என்று கூறிச் சூரிய காந்தக் கண்ணாடியின் உதவியினால் பஞ்சைத் தீப்பற்றச் செய்தார். பஞ்சு எரிந்தது. இதைக் கண்டு, சபையோர், "இப்படிச் செய்து காட்ட எங்களுக்குத் தான் தெரியுமே!" என்றனர்.

அதற்கு விவேகானந்தர், "உங்களுக்குத் தெரியும். ஆனால் அனுபவம் இல்லை. அனுபவம் இருந்தால் விக்கிரக வழிபாட்டைக் குறை கூறியிருக்க மாட்டீர்கள். சூரியன் கடவுளைப் போல் விளங்குகிறான். பஞ்சைப் போல் ஆன்மா விளங்குகிறது. ஆன்மாவுக்குக் கடவுள் அருளை நேரிலே பெற்றுக் கொள்ள முடியவில்லை. சூரிய காந்தக் கண்ணாடிபோல் எங்களுடைய விக்கிரகங்கள், திருவுருவங்கள் விளங்குகின்றன. அத்திருவுருவங்கள் கடவுளின் சக்தியை எடுத்து வழிபடுபவர்களுக்கு வழங்குகின்றன" என்று கூறினார். அப்பொழுது மேல் நாட்டார் விக்கிரக வழிபாட்டின் உண்மையை அறிந்து வியந்தனர்.

இந்த அரிய கருத்தை, உண்மையைப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே திருமூலர் தமது அழகிய கவிதையில் எடுத்துக் கூறியிருக்கிறார்.

"சூரியகாந்தமும் சூழ்பஞ்சும் போலவே
சூரியகாந்தம் சூழ்பஞ்சைச் சுடமாட்டா
சூரியன் சந்நிதியில் சுடுமாறுபோல்
சூரியன் தோற்றமுன் அற்றமலங்களே."

என்று அரிய விஞ்ஞானக் கருத்தைக் கடவுள் தத்துவத்தோடு இணைத்து போற்றியிருக்கிறார் திருமூலர்.

விஞ்ஞானம், சமயம், கடவுள் தத்துவம் இழையோடும் திருமூலரின் இத்தகைய அரிய கருத்துக்கள் நிரம்பிய கட்டுரைகளை இந்தத் திருமந்திர மாநாட்டு மலரில் காண்கிறோம். இரண்டாவது திருமந்திர மகாநாட்டில் திருமந்திரத்தின் ஒன்பது பிரிவுகளையும் பற்றிப் பல அறிஞர்கள் செய்த சொற்பொழிவுகளைத் தொகுத்து, திருவாவடுதுறை ஆதீனத்தார் புத்தக உருவில் தயாரித்து வெளியிட்டிருக்கிறார்கள். இந் நூலின் வாயிலாக அருட்கவி திருமூலரின் பெருமையை நன்றாகத் தெரிந்து கொள்ளலாம்.

பிரசுரம்: திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை, தஞ்சை ஜில்லா.

## புதுமை பெறுக! இதம் பெறுக! நளினமாய் இருங்கள்!

### நாள் முழுதும்!

சார்மிஸ் டால்கம் பவுடரை உபயோகித்து, அதன் சிறந்த நறுமணத்தை அனுபவியுங்கள். குளித்த பின் சார்மிஸ் டால்கம் பவுடரை மேலெங்கும் தூவுக. அது புதுமையும் குளுமையும் தருகிறது. அரிப்பு வராமல் அதன் பட்டுப்படலம் பாதுகாக்கிறது. சார்மிஸ் டால்கம் பவுடர் சிக்கனமான அத்யாவசியப் பொருள். இன்பம். அழகின் இரகசியம் அது.



# சார்மிஸ்

## டால்கம் பவுடர்

### மிகவும் சிறந்த இன்ப மணமுள்ளது

கால்கேட் சார்மிஸ் வாசனைத் திரவியங்களில் சகல உபயோகிக்கும் ஸ்நோவும் உன்னன. எல்லாவித சருமங்களுக்கும் ஏற்ற இரு பிரபல வஸ்துக்கள்

CH-TP6/3




# EPHRILIME

## எப்ரிலைம்

அவரது ஆஸ்த்மா உபாதைகளை குணப்படுத்த எப்ரிலைம் மிகச் சிறந்தது. ஒரு பாட்டில் மருந்தை உபயோகித்தால் அதன் பூரண பலன்களைக் காண்பார்.

நீண்ட நாள்பட்டதும், மிக்க உபாதை தரக்கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த நிவாரண மருந்து.

யூனியன் டிரக் கம்பெனி, லிமிட்.
மதராஸ் டிப்போ: 2, ஜோன்ஸ்லேன், மதராஸ்-1




## E.S. மைதீன் & கோ

கும்பகோணம்.




அத்தியாயம் 36

## தாபம் பெருகியது

படங்களை எடுக்கும் போது எனக்கு ஆவலினால் இதயம் விரிந்து பெரிதாகி மேலே எழும்புவது போல் இருந்தது. இந்துவின் படங்களில் மூன்று மிக நன்றாக இருந்தன. பாக்கியெல்லாம் காமிரா அசைந்து விட்டதால் சரியாக விழவில்லை. ஸ்ரீமதி ஹார்வி என் உணர்ச்சிகளைக் கவனித்து விடக் கூடாதே என்ற கவலையினால் மனத்தை ரொம்பக் கட்டுப்படுத்திக் கொண்டேன்.

இந்து விளையாட்டாக "அஜந்தா சித்திரம்" மாதிரி சண்பக மரத்தில் சாய்ந்து கொண்டிருந்தாள். அது ரொம்ப அழகாக இருந்தது.

அதை ஸ்ரீமதி ஹார்வி பார்த்ததும், "இது யார்?" என்று கேட்டார்.

நான் சிறிது தயங்கினேன். பிறகு "என்னுடைய வருங்கால மனைவி" என்றேன். அதைச் சொல்லும்போதே எனக்கு 'இவ்வளவு உறுதியாகச் சொல்லுகிறேனே' என்றும் தோன்றியது. அந்த எண்ணத்தினால் என் நெஞ்சில் உண்டான வேதனை முகத்திலும் பிரதிபலித்திருக்க வேண்டும்.

"அட! நிஜமாகவா? ஆனால் உங்கள் முகம் ஏன் இப்படிச் சின்னதாகப் போய் விட்டது மிஸ்டர் ராய்? குதூகலமாக அல்லவா இருக்க வேண்டும்?" என்றார் ஸ்ரீமதி ஹார்வி.

"ஒன்றுமில்லையே!" என்றேன்.



"இவ்வளவு நீங்கள் கூச்சப்படக் கூடாது, மிஸ்டர் ராய்! இவ்வளவு அழகான பெண்ணைக் காதலியாகப் பெற்ற நீங்கள் எவ்வளவு பெருமைப்பட வேண்டும் தெரியுமா? சினிமா நட்சத்திரம் மாதிரியல்லவா இருக்கிறாள்? நீங்கள் ரொம்ப அதிர்ஷ்டசாலி!" என்று மிகவும் உற்சாகமாகக் கூறினார்.

அந்தப் படங்கள் எனக்குச் சில சமயம் ஆறுதலாக இருந்தன. சில சமயங்களில் அளவிலாத வேதனையைக் கிளறி விட்டுக்கொண்டிருந்தன.

ஒரு நாள் ஸ்ரீமதி ஹார்வி என்னிடம், "மிஸ்டர், ராய்! நீங்கள் எனக்கு ஏதேனும் இந்திய உணவு செய்வதற்குக் கற்றுத் தர வேண்டும்" என்றார்.

"எனக்குச் சமையலைப் பற்றி அதிகமாக ஒன்றும் தெரியாது. ஏதோ கலாசாலையில் விளையாட்டாக நண்பர்கள் எல்லாம் சேர்ந்து சில நாட்கள் இந்தியப் பண்டங்கள் செய்திருக்கிறோம். நான் எவ்வாறு உங்களுக்குச் சொல்லித் தர முடியும்?" என்றேன்.

"அதெல்லாம் பரவாயில்லை. நீங்கள் செய்யும் விதத்தைச் சொன்னால் நான் புரிந்து கொண்டு விடுவேன். பெண்களுக்குச் சமைக்கும் விதத்தைப் பற்றிச் சீக்கிரம் புரிந்து கொள்ளும் சக்தி உண்டு" என்றார் அவர்.

"அப்படியானால் சரி. நாம் இருவரும் சேர்ந்தே முயற்சி செய்து பார்ப்போம்" என்றேன்.

"அதைச் சாப்பிடுவதற்கு நீங்கள் யாராவது சிநேகிதர்களை அழைத்துக் கொண்டு வர வேண்டும்!"

"நம்மால் அதைச் சாப்பிட முடியாது என்று இப்போதே தீர்மானித்து விட்டீர்களா?" என்று கேலியாகச் சிரித்துக் கொண்டே கேட்டேன்.

"இல்லை. இல்லை. நம்முடைய திறமையை இன்னும் சிலர் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகத் தான் சொல்கிறேன்!"

"அப்படிப் பெருமைப்படும்படி இருக்குமா என்பது சந்தேகம் தான். அப்படி இருந்தாலும் அது முழுதும் உங்களைத் தான் சேருமென்று இப்போதே கூறி விடுகிறேன்" என்றேன்.

பிறகு பாதாம் ஹல்வா செய்வதற்கு வேண்டியவைகளை அவரிடம் கூறினேன். மறு நாளே எல்லாம் தயாராக இருந்தது. நான் மிரியத்தையும், ஜானையும் மாலை 'டீ' க்கு வரவேண்டுமென்று அழைத்தேன். ஜானுக்கு ஏதோ வேலையிருந்ததென்று மறுத்து விட்டான். மிரியம் உடனேயே "கட்டாயம் வரப் போகிறேன்" என்று கூறி விட்டாள்.

நான் ஸ்டிபான் ஹிம்மெல்லையும் வரச் சொல்லியிருந்தேன். அன்று பிற்பகல் முழுதும் நானும் ஸ்ரீமதி ஹார்வியும் பாதாம் ஹல்வா தயாரிப்பதில் ஈடுபட்டிருந்தோம். ஒருவாறு அது முடிந்ததும் நான் உடைமாற்றிக் கொள்ள என்னுடைய அறைக்கு வந்தேன். பட்டன்களை எடுப்பதற்காக மேஜை டிராயரைத் திறந்தேன். அதிலிருந்து இந்துவின் படம் வெளியே வந்து விழுந்தது.

அதைக் கையில் எடுத்துக் கொண்டேன். என் இதயத்தையே ஊடுருவிப் பார்ப்பது போல் இருந்தது அவளுடைய பார்வை.

'இந்து எப்படியெல்லாம் கஷ்டப்படுகிறாளோ? நான் இப்படி ஹல்வா பண்ணிக் கொண்டு விளையாட்டாகக் காலம் கழிக்கிறேனே' என்று தோன்றிற்று. ஏனோ எனக்கு இந்து சௌக்கியமாக இருக்கக்கூடும் என்றே தோன்றவில்லை. ஏதோ கஷ்டத்தில் அவள் அகப்பட்டுக் கொண்டிருக்கிறாள்; அவளைக் காப்பாற்ற முடி









குல்லாக்காரர்:- என், சார்! நீங்கள் மாம்பலம் போகிறவரா? இந்தப் பஸ்ஸை ஏன் தள்ளுகிறீர்கள்? அங்கு போய் மாம்பலம் பஸ்ஸைத் தள்ளுங்கள்!

யாமல் நான் இங்கே வந்திருக்கிறேன் என்ற தோன்றிக் கொண்டிருந்தது.

இந்துவின் அழகிய கண்களைப் பார்த்துக் கொண்டே வெகு நேரம் உட்கார்ந்திருந்து விட்டேன். கீழே மணியடிக்கும் சத்தம் கேட்டது. 'ஓ! மீரியம் வந்து விட்டாள் போலிருக்கிறது' என்று தலையை அவசரமாக வாரிக் கொண்டு கீழே சென்றேன். ஹிம்மேனும் அங்கே தயாராக இருந்தான். கலகல வென்ற சப்தம் அறையை நிறைத்ததே தவிர எனக்கு ஒன்றிலும் சுவாரஸ்யம் ஏற்பட வில்லை. மூன்று பேரும் ஹால்வா செய்யும் விதத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர்.

"மிஸ்டர் ராய்க்கு நம் பேச்சு ருசிக்க வில்லை என்று தோன்றுகிறது" என்றாள் மீரியம் நகைத்தபடியே.

"இல்லை. அவர் ஹால்வாவின் ருசியை அனுபவித்துக் கொண்டிருக்கிறார். அதைச் சாப்பிடும்போது தாய் நாட்டின் நினைவு வருமல்லவா? அதில் மெய் மறந்து விட்டார் போலிருக்கிறது" என்றார் ஸ்ரீமதி ஹார்வி.

ஹிம்மேனுக்கு அன்று மாலை ஏதோ வேலை இருந்தபடியால் விடை பெற்றுக் கொண்டு போய் விட்டான். மீரியம் கிளம்பும் வழியாக இல்லை. ஸ்ரீமதி ஹார்வியும் அவளும் மிகவும் உற்சாக மாகப் பேசிக் கொண்டிருந்தனர்.

மறுபடியும் மீரியம் என்னைப் பார்த்து, "உங்களுக்கு உடம்பு சரியில்லையா, மிஸ்டர் ராய்? இன்று பேசவே மாட்டே னென்கிறீர்களே?" என்று கேட்டாள்.

"ஒன்றுமில்லை. எனக்கு உங்கள் பேச்சில் கலந்து கொள்ளத் தெரியவில்லை. பெண்களுக்குரிய விஷயமாகவே நீங்கள் பேசுகிறீர்கள்" என்றேன்.

ஸ்ரீமதி ஹார்வி குறுக்கிட்டு, "அதெல்லாம் ஒன்றுமில்லை. நீங்கள் உங்களுடைய நாட்டைப் பற்றியும் அந்தப் பெண்ணைப் பற்றியுந்தான் நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள். நான் மத்தியானம் உங்கள் அறைக்குப் போன போது என் கண்ணாடியை உங்கள் அறையில் வைத்து விட்டு வந்து விட்டேன். அதை எடுத்துக் கொண்டு வருவதற்காகச் சற்று முன்னால் உங்கள் அறைக்குச் சென்றேன். கட்டிலின் மீது உங்கள் வருங்கால மனைவியின் 'போட்டோ' கிடந்தது. என்னை நீங்கள் ஏமாற்ற முடியாது" என்றார்.

என் முகத்தில் அசடு வழிகிறதோ என்ற அச்சம் என் மனத்தில் உண்டாயிற்று. நான் அவசரமாகக் கைக்குட்டையை எடுத்து முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டேன்.

மீரியம் ஆச்சரியமும் ஆவலும் தொனிக்கும் குரலில், "மிஸ்டர் ராய்! நீங்கள் என்னிடம் இதுவரை சொல்லவே இல்லையே. அவளுடைய போட்டோவை எனக்குக் காட்டுகிறீர்களா? அவள் பெயர் என்ன?" என்று கேட்டுக் கொண்டே போனாள்.

"கொஞ்சம் பொறு! கேள்விகளை அடுக்கினால் எப்படிப் பதில் சொல்வது? ஒவ்வொன்றாகப் பதில் சொல்கிறேன்" என்றேன் சிரித்துக் கொண்டே. அதற்குள் நிலைமையைச் சமாளிக்க எனக்குத் தெம்பு உண்டாகி விட்டது.

ஸ்ரீமதி ஹார்வி உற்சாகமாக "அவள் ஒரு சினிமா நட்சத்திரம் மாதிரி அவ்வளவு அழகாக இருக்கிறாள். மிஸ்டர் ராய் இப்படி எப்போதும் மெய்மறந்திருப்பதில் ஒரு அதிசயமும் இல்லை. மிஸ்டர் ராய்! அந்தப் படங்களை யெல்லாம் மீரியத்துக்கு நீங்கள் கட்டாயம் காட்ட வேண்டும்" என்றார்.

"அவள் பெயரென்ன?" என்று கேட்டாள் மீரியம்.

"இந்துமதி" என்றேன்.

"என்ன இனிமையாக ஒலிக்கிறது" என்றாள் மீரியம்.

அவள் அப்படிக் கூறியதுகூட எனக்கு இன்பத்தை அளித்தது.

"நீங்கள் இருவரும் உங்களுடைய அறைக்குச் சென்று படங்களைப் பார்த்

துக் கொண்டிருங்கள். நான் என் வேலைகளை முடித்துக் கொண்டு வருகிறேன்'' என்றார் ஸ்ரீமதி ஹார்வி.

நான் மிரியத்துக்குப் படங்களைக் காட்டியபோது அவள் அவ்வளவு தூரம் இந்துவைப் பற்றிக் கேட்பாள் என்று நான் நினைக்கவே இல்லை. அவளுடைய கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாமல் திணறிப் போனேன். புத்தம் புது மலர் போன்ற இந்துவின் அழகும், கபடமற்ற சிரிப்பும், ஊடுருவிப் பார்க்கும் ஆழ்ந்த பார்வையும் மிரியத்துக்கு மிகவும் வியப்பாக இருந்தன போலும்.

"இவ்வளவு நீளம் தலைப்பின்னல் தொங்குகிறதே. நிஜமாகவே இத்தனை நீளமா?'' என்று கேட்டாள்.

"அவள் பதினைந்து வயதுச் சிறுமி. நகரத்தையே பார்த்தறியாத பெண். அவளுக்குச் செயற்கையாக அலங்கரித்துக் கொள்ளவே தெரியாது.''

"உண்மையாகவா? அவள் முகத்தில் ஏதோ ஒரு வசீகரம் இருக்கிறது மிஸ்டர் ராய். ஒரு தடவை பார்த்தால் மறக்கக் கூடிய முகம் அல்ல. அவளுடைய கண்களில் குழந்தை உள்ளம் பிரகாசிக்கிறது. அவள் படித்திருக்கிறாளா?''

"கொஞ்சம் படித்திருக்கிறாள்.''

"ஆங்கிலம் தெரியுமா?''

"ரொம்பத் தெரியாது. படித்தால் புரிந்து கொள்வாள். எதற்காகக் கேட்கிறாய்?''

"நான் அவளுக்குக் கடிதம் எழுதிச் சிநேகம் செய்து கொள்ள விரும்புகிறேன். எனக்குக் கடித நண்பர்கள் உலகம் முழுதும் இருக்கிறார்கள். இந்தியாவில் மட்டும் ஒருவர்கூட இல்லை. அவளுக்கு எழுதட்டுமா?''

இந்தக் கேள்வி என் மனத்தை எவ்வளவு தூரம் புண்படுத்தியிருக்குமென்று படிப்பவர்கள் தான் புரிந்து கொள்ள வேண்டும். மிரியத்திடம் நான் என் வேதனையைச் சொல்ல முடியாமல் தவித்தேன். இவ்வளவு தூரம் இந்துமதியைப் பற்றி அவளுக்குத் தெரிந்த பிறகு, இந்து இருக்குமிடம் தெரியவில்லை என்று எந்த முகத்தோடு சொல்வது?

என் முகம் மாறியதைக் கவனித்துவிட்டாள் மிரியம். "ஏன் உங்கள் முகம் இப்படி வாடிவிட்டது? நான் அவளுக்கு எழுதக் கூடாதா? அதற்கு ஏதேனும் காரணம் இருக்கிறதா? என்னிடம் மனம் விட்டுச் சொல்லுங்களேன்'' என்று கேட்டாள்.

அதன் பிறகு என்னால் பேசாமலிருக்க முடியவில்லை. விஷயத்தைக் கூறினேன்.

மிரியம் மிகுந்த அனுதாபத்துடன் கேட்டுக் கொண்டிருந்தாள்.



தமிழ்நாட்டின் புயல் நிவாரண உதவி நிதிக்காகப் பெப்ருவரி 18-ம் தேதி பெங்களூரில் நாட்டியக் கச்சேரி நடைபெற்றது. சென்னை திருவல்லிக்கேணி பரதகலா நிலயத்தின் தலைவியான ஸ்ரீமதி செல்வமணியிடம் பரதநாட்டியம் பயின்ற சென்னை சகோதரிகள் சசி, கலா, மாலாவின் பரத நாட்டியமும், இந்திய நடனமும் பெங்களூர் சம்பங்கி ஸ்டேடியத்தில் நடைபெற்றன. நடனத்துக்குத் தலைமை வகித்த முன்னாள் பெங்களூர் உதவி மேயர் திரு ஜெயசிலன் சென்னை சகோதரிகளையும், அவர்களுக்கு நாட்டியம் சொல்லிக் கொடுத்த ஆசிரியை ஸ்ரீமதி செல்வமணியையும் பாராட்டினர்.

"அவளுக்கு அவள் தந்தை கல்யாணம் செய்து விட்டிருக்கலாமென்று நினைக்கிறீர்களா?'' என்று கேட்டாள்.

"அப்படி நினைக்கவில்லை. அவள் தந்தையும் அவளுடைய இஷ்டமில்லாமல் ஒன்றும் செய்யக் கூடியவரல்ல. என்ன காரணம் என்றே ஊகிக்க முடியாமல் திண்டாடுகிறேன்.''

"நண்பர்கள் யாருக்காவது எழுதிக் கேட்பதுதானே?''

"நான் அவ்வாறு செய்யாமலா இருப்பேன்? எழுதினேன். ஆனால் அவளைப் பற்றி விவரம் தெரிந்த ஒரே நண்பனும் எங்கோ போய்விட்டானாம். ஒன்றுமே தெரியவில்லை. ஒரே குழப்பமாக இருக்கிறது.''

"பாவம்! கவலைப்படாதீர்கள், மிஸ்டர் ராய். எப்படியும் நீங்கள் படிப்பில் கவனம் செலுத்துங்கள். இதைப் பற்றிப் பிறகு யோசிக்கலாம்.''

"என்ன யோசிப்பது? நான் திரும்பிச் சென்றுதான் விசாரிக்க வேண்டும். அதுவரை எனக்கு விஷயம் தெரிவிக்கக் கூடியவர்கள் யாரும் இல்லை.''

"எதற்கும் ஒரு முடிவு வந்துதான் தீரவேண்டும், மிஸ்டர் ராய்! நம்மால் தவிர்க்க முடியாத விஷயத்தைப் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. உங்கள் துயரத்தை நான் நன்றாக உணர்கிறேன். அவளைப் பற்றிப் பேசும்போதே உங்கள் குரல் கனிந்து விடுகிறது. அவளை ஒரு

குழந்தை மாதிரி நீங்கள் நேசிக்கிறீர்கள் என்பது அதிலிருந்தே தெரிகிறது.''

இந்துமதியிடம் நான் வைத்திருந்த அன்பை அவள் எவ்வளவு சீக்கிரம் அழகாகப் புரிந்து கொண்டு விட்டாளென்று நான் வியந்தேன். மற்றவர்களுக்கு அது சிரிக்கும்படியான விஷயமாக இருந்தது. ஹம்மெலுக்கு விளையாட்டாக இருந்தது. மிரியம் அதன் உண்மையை உடனே தெரிந்துகொண்டு விட்டாள். அது எனக்கு ரொம்ப ஆறுதலாக இருந்தது.

பிறகு அவளைப் பார்க்கும் போதெல்லாம் நான் இந்துவைப் பற்றிப் பேச ஆரம்பித்தேன். மிரியமும் அலுக்காமல் கேட்பாள். என்னுடைய கவலைகளையும், கற்பனைகளையும் கூறுவேன். அவள் அவற்றுக்குச் சமாதானம் கூறுவாள்.

காலண்டரில் தினமும் நான் நாட்களைக் கிழித்துக் கொண்டே வந்தேன். பரீக்ஷை நெருங்கி வந்தது. நான் சரித்திர ஆராய்ச்சியில் பட்டம் பெறவும் படித்துக் கொண்டிருந்தேன். ஐ.ஸி.எஸ். பரீக்ஷையில் தேறா விட்டால் ஏதேனும் படிப்பு வேண்டுமல்லவா? ஆகவே, சரித்திரத்தில் பட்டம் பெறுவதற்கு எழுத வேண்டிய 'தியஸிஸ்' எழுதிக் கொடுத்தேன். தேறியும் விட்டேன்.

லண்டன் சென்று ஐ. ஸி. எஸ். பரீட்சை எழுதினேன். அதிலும் தேறினேன். பிறகு ஒரு வருஷம் அங்கேயே இருந்து வேலை கற்றுக் கொண்டு, இன்னொரு பரீட்சையிலும் தேறவேண்டும்.

அதற்காக கேம்பிரிட்ஜ் நகருக்கே திரும்பி வந்தேன். குதிரை சவாரி முதல் பல விஷயங்கள் கற்றுக் கொண்டேன்.

இத்தனை நான் செய்து கொண்டிருந்த போதிலும் இந்துவின் நினைவு என் நெஞ்சை விட்டுக் கணமும் அகலவில்லை. ''இந்து! நான் இப்படித் தவிக்கிறேனே! உன்னை எப்போதும் நினைத்துக் கொண்டிருக்கிறேனே! நீ என்ன செய்கிறாய்? எங்கே இருக்கிறாய்? எனக்கு ஒரு கடிதம் எழுதக்கூடாதா? எப்படியாவது நீ இருக்கும் இடம் எனக்குத் தெரிந்து விடக் கூடாதா? என்னுடைய இதயத்தின் அடிவாரத்திலிருந்து பொங்கி எழும் அன்பின் ஒலி உன் நெஞ்சத்தில் எதிரொலியை எழுப்பவில்லையா?'' என்று இந்துவின் உருவத்தைக் கற்பனை செய்து கொண்டு நானே பேசிக் கொள்வேன்.

என் தாபத்தைச் சிறிது குறைக்க ஒரு விந்தையான சம்பவம் நிகழ்ந்தது. ஆனால் அது உண்மையில் தாபத்தைக் குறைக்கவா செய்தது? அதிகப் படுத்தியது என்று நான் கூற வேண்டும்.

## அத்தியாயம் 37

# கொந்தளிப்பு

நான் இங்கிலாந்து சென்ற சமயம் உலகம் முழுதும் ஒரே கொந்தளிப்பாக இருந்தது. 1938-ம் ஆண்டு ஆரம்பத்திலிருந்தே இன்னொரு உலக மஹா யுத்தம் ஆரம்பமாகலாம் என்பதற்கான அறிகுறிகள் தோன்றிக் கொண்டிருந்தன. இங்கிலாந்து தேசம் ஒரே பரபரப்பான நிலையில் இருந்தது.

ஜெர்மனியில் ஹிட்லர் படை பலத்தைப் பெருக்கிக் கொண்டிருந்தார். அவர் ஆஸ்திரியா தேசத்தின் மீது படையெடுத்து அதை ஆக்ரமித்துக் கொண்டதும் இங்கிலாந்தில் உள்ள சிலர் இங்கிலாந்தின் படை பலத்தைப் பெருக்க வேண்டுமென்று நினைத்தார்கள். ஆனால் சமாதானப் பிரியரான பிரதம மந்திரி சேம்பர்லின் அதற்கு எதிராக இருந்தார். யுத்தத்தைத் தவிர்ப்பதற்காக ஹிட்லரைச் சந்தித்துப் பல தடவைகள் பேசினார். அப்போதெல்லாம் இந்தக் குழப்பம் எதில் போய் முடியப் போகிறது என்று உலகம் முழுவதும் ஒரே வாதப் பிரதிவாதங்களாக இருந்தது.

ஒரு நாள் நானும் ஹம்மெலும் மிஸ்டர் சேம்பர்லின் ரேடியோவில் பேசுவதைக் கேட்பதற்காக ரேடியோவின் அருகில் உட்கார்ந்திருந்தோம். நான் ஹம்மெலைப் பார்த்து, ''ரொம்ப அழகாக இருக்கிறது, உங்கள் ஹிட்லரின் காரியம்! ஸுடட்டன் லாண்டிலிருந்து செக்கோஸ்லோவாகியா ஜனங்கள் உடனே வெளியேறி விட வேண்டுமென்று சொல்கிறாரே. இது ஏகாதிபத்திய வெறியில்லையா?'' என்று கேட்டேன்.

''இல்லவே இல்லை. அங்கே வசிப்பவர்களில் ஜெர்மானியர்கள்தான் மிக அதிகம். ஆகவே அது நியாயமாக ஜெர்மனியைச் சேர வேண்டியதுதான். அது எவ்வாறு ஏகாதிபத்திய வெறியாகும்? அங்குள்ள ஜனங்களே அதைத்தான் விரும்புவார்கள்.''

''அப்படியென்றால் தேர்தல் நடத்தி அந்தப் பிரதேசம் ஜெர்மனியைச் சேர்ந்தது என்று நிரூபிக்கட்டுமே? குறிப்பிட்ட தினத்துக்குள் எல்லோரும் வெளி

யேறவில்லையானால் படை எடுத்து வருவேன் என்று பயமுறுத்துவது நியாயமாகுமா?''

'' ஐரோப்பாவின் விஷயம் உனக்குத் தெரியாது. இங்கிலாந்தும் பிரான்சும் ஜெர்மனியை நசுக்குவதற்காகக் காத்துக்கொண்டிருக்கின்றன. யுத்தம் முடிந்தபோது நாங்கள் பட்ட கஷ்டங்களையும் எங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளையும் பற்றி உனக்கு எவ்வாறு தெரியும்? ஹிட்லர் இவ்வளவு கண்டிப்பாகவும் உறுதியாகவும் இருக்கா விட்டால் ஐரோப்பா கண்டத்தில் ஜெர்மனி என்ற பெயரே இல்லாமல் அழிந்து போயிருக்கும். மேலும்...''

அப்போது பிரதம மந்திரி சேம்பர்லின் ரேடியோவில் பேச ஆரம்பித்தார். அவர், '' நான் ஒரு சமாதான மனிதன். தேசங்களுக்கு இடையே யுத்தம் மூள்வது என்றாலே எனக்கு நடுக்கமாக இருக்கிறது. ஆனால் எந்த நாடாவது உலகத்தைத் தன் ஆயுத பலத்தால் ஆக்கிரமித்துக் கொள்ள நினைக்கிறது என்று உறுதியாகத் தெரியுமானால் அதைத் தடுக்க வேண்டுமென்றுதான் நான் கருதுவேன். சுதந்திரத்தில் நம்பிக்கை உள்ள ஜனங்களுக்கு அப்படிப்பட்ட அதிகாரத்தின் கீழ்வாழ்க்கையே உபயோகமற்றதாகத் தோன்றும். ஆனால்...''

ஹிம்மெல் சடாரென்று ரேடியோவின் சப்தத்தைக் குறைத்தான்.

'' பார்த்தாயா ராய்? இவர் பேசுவதைக் கேட்டாய் அல்லவா? உலகம் முழுவதிலும் அதிகாரத்தில் இருப்பவர்கள் ஒரே மாதிரிதான் பேசுகிறார்கள். ஜெர்மனி, ஜெர்மானியர் வாழும் பிரதேசத்தை விரும்பக் கூடாது. ஆனால் நாற்பது கோடி மக்கள் வாழும் இந்தியா தேசத்தை இவர்கள் கட்டி ஆளலாம். சுதந்திரத்தைப் பற்றிப் பேசவும் பேசலாம். அதற்குப் பெயர் ராஜதந்திரம்.''

'' இவர்கள் ஒரு தவறு செய்கிறார்கள் என்பதற்காக உங்கள் தவறு சரியாகி விடுமா? இவர் சொல்லுகிற விஷயம் என்னவோ சரியானது தானே '' என்று கூறிவிட்டு நான் மறுபடியும் ரேடியோவைப் பெரிதாக வைத்தேன்.

'' பார், பார்! ஹிட்லரால்தான் உலகத்துக்கே விமோசனம் பிறக்கப் போகிறது.''

'' சற்றுப் பொறு, ஹிம்மெல்! பிரதம மந்திரியின் பேச்சு முடிந்த பிறகு உன் பேச்சைக் கேட்கிறேன் '' என்றேன்.

இது நடந்த ஒரு மாதத்துக் கெல்லாம் நான் காலேஜ் மாணவர்களுடன் எங்கேயோபோய்விட்டு ஒருவாரம் கழித்துத் திரும்பிவந்தேன். வந்ததும் ஸ்ரீமதி




டாக்டர் :- கலை கலையாக ஏராளமான பணம் சாப்பிட்டதினால் அஜீரணம் வந்து விடுமா? இது என்ன அதிசயமான கேஸாக இருக்கே!

வந்தவர் :- பணம் இல்லை ஐயா; பழம்! பனைப் பழம் என்று சொன்னேன்!

ஹார்வி எனக்குத் திடுக்கிடும் செய்தி ஒன்றைச் சொன்னார். ஸ்டீபான் ஹிம்மெல் அறையைக் காலி செய்து விட்டுப் போய் விட்டதாகத் தெரிவித்தார். அவருக்கு ஹிம்மெலைப் பிடிக்காது என்று எனக்குத் தெரிந்திருந்த படியால், '' நீங்கள் போகச் சொல்லி விட்டீர்களா?'' என்று நான் கேட்டேன்.

அவர் என்னை ஒரு மாதிரி பார்த்து விட்டு, '' உங்கள் நண்பர் ஒரு விசித்திரப் பேர்வழி. என்னிடம் கூடச் சொல்லாமல் கிளம்பி விட்டார். ஆராய்ச்சி செய்து ஏதோ ரகசியம் கண்டுபிடித்து விட்டார் போலிருக்கிறது. அதனால் படித்தது போதும் என்று கிளம்பிவிட்டார். என் அறைக்குப் புதிய ஆள் தேடும் வேலை எனக்கு நேர்ந்திருக்கிறது. அது எவ்வளவு கஷ்டமான காரியம் என்று உங்களுக்குத் தெரியாது '' என்றார்.

'' எனக்கு ஏதேனும் கடிதமாவது கொடுத்திருக்கிறாரா?''

'' இல்லை. கொடுக்க வேண்டிய பணத்தை எல்லாம் ஒரு நாள் கொடுத்தார். ஐந்து நிமிஷத்துக் கெல்லாம் ஒரு டாக்ஸி வந்து நின்றது. 'நான் எங்கள் ஊருக்குப் போகிறேன்' என்று திடீரென்று கூறிவிட்டுப் புறப்பட்டுப்

போய் விட்டார். அவரை ஒன்றும் கேட்கவே முடியவில்லை.''

இந்த விஷயம் எனக்கு மிகவும் ஏமாற்றமாக இருந்தது. நாங்கள் எவ்வளவு காரசாரமாக விவாதம் செய்த போதிலும் எங்களுக்குள் ஒரு பாந்தவ்யம் ஏற்பட்டிருந்தது. இரண்டு பேரும் தாய்நாட்டை விட்டு வந்தவர்கள் என்ற எண்ணத்தினால் அந்த உறவு ஏற்பட்டது போலும்! அவனுடைய வீர உணர்ச்சியும், தேசப்பற்றும், நல்ல நடத்தையும், ஒளிவு மறைவு இல்லாத பேச்சும் எனக்கு அவன் மீது மதிப்பை உண்டாக்கியிருந்தன. என் நெஞ்சத்து உணர்ச்சிகளை எல்லாம் நான் அவனிடம் பகிர்ந்து கொள்ளா விட்டாலும் அவன் இருந்தது எனக்குத் தெம்பாக இருந்தது. ஒரு அருமை நண்பனைத் திடீரென்று பிரிய நேர்ந்ததைக் குறித்து மிகவும் ஏமாற்றமடைந்தேன்.

ஹிம்மெல்லின் திடீர் மறைவுக்குக் காரணம் எனக்குப் பின்னால்தான் தெரிய வந்தது. உலக மகா யுத்தம் ஆரம்பிப்பதற்கு முன்னால் வெளி தேசங்களிலிருந்த ஜெர்மானியர்களை யெல்லாம் திரும்பத் தங்கள் தேசத்துக்கு வரவழைத்து விட்டார்களாம்.

ஒரு நாள் நான் புத்தகங்கள் வாங்குவதற்காக ஒரு கடைக்குச் சென்றிருந்தேன். ஏதோ ஒரு பத்திரிகையின் மேல் இந்தியாவைப் பற்றி ரஸமான விவரங்கள் உள்ளே வெளியாகியிருப்பதாக எழுதப்பட்டிருந்தது. அதைப் பார்த்ததும் அந்த ரஸமான தகவல்கள் என்னவாக இருக்கும் என்று பார்க்க ஆவல் எழுந்தது. உடனே அதற்கு உரிய விலையைக் கொடுத்து வாங்கி, அங்கேயே பிரித்துப் பார்த்தேன். முதல் பக்கத்தில் தஞ்சைக் கோவிலின் படமும், தாஜ்மகாலின் படமும் காணப்பட்டன. யாரோ ஒரு பேராசிரியர் அந்தக் கட்டுரையை எழுதியிருந்தார். நான் அசுவாரஸ்யமாக அடுத்த பக்கத்தைத் திருப்பினேன். திடீரென்று என் இதயத்திலிருந்து ரத்தம் பொங்கி உடலெங்கும் பாய்ந்தது. உடலிலுள்ள ஒவ்வொரு நரம்பும் படபடவென்று துடித்தது. நின்று கொண்டிருந்தவன் சடாரென்று பக்கத்தில் இருந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்தேன். என்ன ஆயிற்று என்று தெரிவதற்கு எனக்கே இரண்டு நிமிஷங்கள் பிடித்தன. மறுபடியும் அந்தப் படத்தைக் கூர்ந்து பார்த்தேன். 'மஹாபலிபுர சிற்பங்களுக்கு மத்தியில் நிற்பது இந்துமதி தானா? அவள் அருகில் இருக்கும் பெண்மணி யார்? இவ்வளவு நாகரிகமாக அலங்கரித்துக் கொள்ள அவளுக்கு எப்படித் தெரிந்தது? ஒரு வேளை...... அதைப் பற்றி நினைக்கவே என் மனம் இடம் தரவில்லை.

எனக்கு ரொம்பத் தலை சுற்றியது. புத்தகத்தை எடுத்துக் கொண்டு என் அறைக்குப் போனேன்.

மறுபடியும் மறுபடியும், இந்துமதி எப்படி இந்தப் படத்தில் வந்திருக்க முடியும் என்று யோசித்தேன். கட்டுரை முழுவதையும் பரபரப்போடு படித்தேன். அதில் இந்துவைப் பற்றிய குறிப்பு ஒன்றும் காணவில்லை. ஒரு வேளை இது இந்துவாக இருக்க முடியாதோ என்று தோன்றியது. சின்னஞ்சிறு படத்தைக் கொண்டு எப்படி நிரூபிக்க முடியும்? இந்துவைப் போல வேறு யாராவது இருக்கலாமல்லவா? இந்துவின் படத்தை டிராயரிலிருந்து எடுத்தேன். இரண்டையும் எதிரில் வைத்துக் கொண்டு வெகு நேரம் பார்த்தேன். சந்தேகமில்லாமல் அது இந்துதான் என்று தோன்றிற்று.

ஒரு விதத்தில் மனத்துக்கு இந்துவின் படத்தைப் பார்த்தது ஆறுதலாக இருந்தது. இந்து உயிரோடுதான் இருக்கிறாள். அவளுக்கு நண்பர்களும் இருக்கிறார்கள். மகாபலிபுரம் போன்ற இடங்களுக்குச் செல்லும்படியான சந்தோஷமான சூழ்நிலையில்தான் இருக்கிறாள் என்ற இத்தனை விஷயங்களும் அந்தப் படத்தின் மூலம் புலப்பட்டன. ஆனால் இத்தனையும் அவளுக்கு எப்படிக் கிடைத்தது என்ற கேள்வி எழுந்தது. அவளுக்குக் கல்யாணமாகியிருக்கக் கூடும் என்ற எண்ணத்தை என்னால் தாங்க முடியவில்லை. அப்படி இருக்காது. இந்து ஒரு நாளும் சம்மதித்திருக்க மாட்டாள். அய்யாக்குட்டியின் மூலம் யாராவது சினிமா நக்ஷத்திரத்தின் அறிமுகம் கிடைத்திருக்கலாம். ஆம்! அப்படித்தான் இருக்க வேண்டும். இந்தக் கட்டுரையை எழுதியவரிடம் விசாரித்து இந்துமதி இருக்குமிடத்தைக் கண்டு பிடித்து விடலாம்.

கட்டுரையின் முதல் பக்கத்தைப் பார்த்தேன். பேராசிரியர் தாம்ஸன் எழுதிய கட்டுரை என்று போட்டிருந்தது. அவர் கேம்பிரிட்ஜில்தான் ஆசிரியர் என்று தெரிந்ததும் என் சந்தோஷம் அளவு கடந்து விட்டது. அவரை எனக்கு அதிகமாகப் பரிச்சயம் கிடையாது. ஆயினும் பல தடவைகள் புத்தகசாலைகளில் பார்த்திருக்கிறேன். அவர் இந்தியா சென்ற விவரமும் எனக்குத் தெரியும். அவரைத் தேடிக் கண்டு பிடித்து இந்த விவரங்களைக் கேட்க வேண்டுமென்று துடிக்கும் உள்ளத்துடன் கிளம்பினேன். (தொடரும்)

# பனி போன்ற க்ரீம் உங்கள் அழகை எடுத்துக் காட்டுகிறது

உங்கள் சருமத்திற்கு இயற்கையான மிருதுத்தன்மையை அளிக்கிறது . . . மற்றும் தழும்பு, மரு முதலிய சின்னங்களை வெளியே தெரியாமல் மறைக்கிறது

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமின் அழகூட்டும் ஆச்சரியமான சக்தியினால் எழிலோங்கும் லாவண்யத்தை நீங்கள் எப்பொழுதும் பெறமுடியும்.

பிரதி காலையிலும் மென்மையான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை முகத்தில் லேசாகத் தடவிக் கொள்ளுங்கள். சில வினாடிகளில் அது மறைந்து களங்கமற்ற அழகையும் ஒன்றுபோல் மிருதுவான சருமத்தையும் நீங்கள் பெறுவீர்கள். மேலும் இயற்கையையேயொத்த பட்டின் மிருதுத்தன்மை வாய்ந்த உங்கள் சருமத்தைக் கண்டு ஒவ்வொருவரும் பொறாமைப்படுவர்!



**பவுடர் போடுவதற்கேற்ற ஆதாரம் கொடுத்து அதைப் படியச் செய்கிறது**

பவுடர் பூசிக்கொள்ளுவதற்கு முன்போ அல்லது அலங்காரம் செய்து கொள்ளுவதற்கு முன்போ எண்ணெய்ப் பசையற்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை எப்பொழுதும் தடவிக்கொள்ளுங்கள். பவுடர் ஒன்று போலப் பரவி மணிக்கணக்கில் படிந்து நிற்க இது உதவுகிறது. பனிபோன்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் மூலம் நாள்முழுவதும் காந்தியுடன் கூடிய அழகுடன் நீங்கள் விளங்குவீர்கள்.




# பாண்ட்ஸ்
## வானிஷிங் க்ரீம்




**சங்கர்**

கொடிய வெப்பத்தால் கானல் அலை பறக்கும் பாலைவனம்! கண்ணுக் கெட்டிய தூரத்தில் வான முகடு மணல் வெளியில் புதையுண்டு கிடந்தது. அருந்துவதற்கு ஒரு துளி நீரோ, அமர்ந்து இளைப்பாற இலை மறைவு நிழலோ அற்ற அப்பாலை வழியிலே எறும்புச் சாரியைப் போல் அணியணியாக ஊர்ந்து கொண்டிருந்தது ஹஜ்ஜு யாத்திரிகர்களின் பெருங் கூட்டம்.

வெப்பத்தால் உடல் பூராவும் கருக, புதையும் கால்களைச் சுடுமணலிலிருந்து பெயர்த்து அடிமேல் அடியாக முன்னேறிக் கொண்டிருந்தனர் பலர். இன்னும் சிலர் ஒட்டகங்களின் மேல் வெய்யில் பவனி வந்து கொண்டிருந்தனர்.

"யா, அல்லாஹ்!"

சட்டென்று ஒரு ஈனக்குரல் எழுந்தது! அதோ ஒட்டகத்தின் மேல் வந்து கொண்டிருந்தவர்களில் ஒருவன் 'தொப்' பென்று மணலில் விழுந்து விட்டான். அவனைக் கவனியாமல் யாத்திரை மேலே நெளிந்து கொண்டிருந்தது.

"ஹக்கீம் சாகேப்! கொஞ்சம் நில்லுங்கள். இதோ நானும் வந்து விடுகிறேன்!" என்று கூவிக் கொண்டே ஓடி வருகிறான் அவன். வெய்யிலின் உக்கிரம் அவன் உடலைக் கருக்குகிறது. பெருகிய வியர்வை வெள்ளம் ஆவியாக மாறி அவனை வருத்துகிறது. கால்கள் இரண்டும் கனலுங் கொடியைப் போல் ஒன்றோடொன்று பின்னிக் கொள்கின்றன.

"என்ன வெய்யில்! யா அல்லாஹ்! என்னால் தாங்க முடியவில்லையே!" — தள்ளாடிக் கொண்டிருந்தவன் மண்டியிட்டபடியே கைகள் இரண்டையும் உயரத் தூக்கினான்.

"என்ன சாகேப்! தாங்க முடியவில்லையா! எங்களுக்கொன்றும் அப்படி இல்லையே! மனிதப் பயிர்களுக்கு அருள் மழையாக வந்து பெய்த நபிகள் நாயகம் பிறந்து புனிதம் விளைவித்த புண்ணிய பூமியிலே ஏன் இந்த அபயக் குரல் எழுப்புகிறீர்! அதோ காற்றில் பழுத்து மணம் பரப்பும் பேரீச்ச மரங்கள் நம்மைக் கைகாட்டி அழைக்கின்றன. வாருங்கள்!"

ஆள்காட்டி விரலால் மேலைத் திசையைத் தூண்டிக் காண்பித்தான் ஒருவன். அந்தத் திசையிலே தாகத்தால் தவித்தவன் கண்டது குளிர் நிழலல்ல; கொதிக்கும் மணல் பரப்பு! எங்கும் ஒரே கானல், கானல், கானல்!

கல்லாய்ச் சமைந்து நின்று விட்டான் அவன். மறுபடியும் உயிர்ப்பு வந்து இமை தட்டிய பொழுது தூரத்தில் அந்த யாத்திரிகர் சென்று மறைவது தெரிந்தது.

"ஸாகேப், நில்லுங்கள்; நில்லுங்கள் மௌலவி!" என்று கத்தியவண்ணம் ஓட எத்தனித்தவன் முடியாமல் மணலில் சுருண்டுவிழுந்தான்! உடலை அணு அணுவாக அக்னி விழுங்குவது போல் இருந்தது. மறுகணம்...

மயக்கத்தின் கோரப் பிடியிலிருந்து நிலையாக விடுபட்டு விழித்தார் அப்துல் ஸலாம் சாகேப் அவர்கள்! எதிரே மங்கலான விடிவிளக்கின் வெளிச்சத்தில் மறுநாள் தொடர இருக்கும் ஹஜ்ஜு யாத்திரைக்குக் கட்டிவைத்திருக்கும் மூட்டை முடிச்சுக்கள் கண்ணில் பட்டன. கண்களை இரண்டு தடவை கசக்கி விட்டுக் கொண்டார். பாலைவனமல்ல, அவருடைய படுக்கை அறைதான்! ஆனாலும் என்ன பயங்கரமான கனவு!

"மற்றவர்களைக் குளிர்வித்த அந்தக் கானல் என்னை மட்டும் கருக்குவானேன்!" மனத்துக்குள்ளேயே கேட்டுக் கொண்டார் சாகேப். ஆனால் பதில் சொல்ல வொட்டாமல் நெஞ்சை அடைத்தன எண்ணச் சுழல்கள். தூக்கம் கலைந்து கட்டிலின் மேலேயே நிமிர்ந்தபடி உட்கார்ந்து விட்டார். கீழே கோரைப்பாயின் வர்ண விரிப்பிலே 'கிதாபை' ஏந்தும் 'ரஹாலிப்' பலகை அவரை அண்ணாந்து பார்த்தபடியே மலர்ந்து கிடந்தது!

2

"என்ன ஸாகேப்! ரஹ்மானுக்கு நிக்காஹ் என்று கேள்விப் பட்டேனே, வாஸ்தவம் தானா?" என்று கேட்டுக் கொண்டே வந்தார் நடுத்தெரு பள்ளிவாசலில் இருக்கும் ஹஸ்ரத் அவர்கள்.

'ஆமாம்' என்பதற்கு அடையாளமாகத் தலையை மட்டும் ஆட்டினார் அப்துல் ஸலாம்.

"என்ன ஸாப், இப்படித் தலையை அசைத்தால் என்ன அர்த்தம்!" — அப்துல் ஸலாமின் குரல் அடைத்துப் போனதற்குக் காரணம் கேட்பதைப் போல இருந்தது ஹஸ்ரத் அவர்கள் கேட்ட தோரணை.

"ஒன்றுமில்லை — ரஹ்மானை நிறையப் படிக்க வைத்து விட்டேன் அல்லவா! 'பெண்ணைப் பிடிக்கவில்லை' — அப்படி இப்படி என்று பேச

கிறான். கடையில் அவனைச் சம்மதிக்க வைப்பதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது......" நிதானமாக ஒவ்வொரு சொற்களையும் அடுக்கினார் ஸலாம்.

ஹஸ்ரத்துக்கு அவருடைய பேச்சு எதிர் பாராத அதிர்ச்சியைக் கொடுத்திருக்க வேண்டும். கண்களை அகல விரித்த வண்ணம் அவரை ஏறிட்டுப் பார்த்தார். அந்தப் பார்வையிலே ஸலாம் என்னத்தைக் கண்டு பயப்பட்டாரோ! இப்போது அவருடைய கண்கள் மெல்ல மெல்ல இடுங்க ஆரம்பித்தன.

"வந்து......" என்று தடுமாறினார் அவர். அவரைப் பேசவிடாமல் ஹஸ்ரத்தே பேசினார்:

"இந்தக் காலத்துப் பிள்ளைகளை ஒன்றும் நிர்ணயமாகச் சொல்வதற்கில்லை. மாசற்ற முல்லைப்பூ இல்லை அவர்கள்; மனோரஞ்சிதம்! இதழுக்கு இதழ் வெவ்வேறு மணம்!"

"ஹஸ்ரத்!......"

"ஆமாம், ஸாப்! ரஹ்மானைப் பாருங்களேன். ஸுலைஹாவிடம் எவ்வளவு பிரியம் வைத்திருப்பவனைப் போலப் பழகினான். எல்லாம் மேலுக்குத் தானா! பாவம், அந்தப் பெண்பிள்ளை வேறு அவனைப் பற்றி எப்படி யெப்படி யெல்லாம் முடிவு செய்து விட்டாள்! கேளுங்கள் ஸாப் – எங்கள் கதீஜாவிடம் 'நிக்காஹ் செய்து கொண்டால் மாமுவின் மகனைத்தான் செய்து கொள்வேன்' என்று தண்ணீர் எடுக்கப் போகும் பொழுது வழி நெடுகச் சொல்லிக் கொண்டு போனாளாம்..."

அப்துல் ஸலாம் பேச்சு மூச்சில்லாமல் நின்று விட்டார்.

ஹஸ்ரத் மேலும் தொடர்ந்தார்:

"போகட்டும்; எப்படியாவது சம்மதித்து விட்டான் அல்லவா!......"

"ஹஸ்ரத், என்னை மன்னித்து விடுங்கள்!"— அப்துல் ஸலாமின் குரலிலே தொனித்த பாவத்தைக் கண்ட ஹஸ்ரத் ஒரு கணம் திகைத்துப் போய் விட்டார்.

"என்ன ஸாப்!"

"நான் சொன்னதைத் தவறாகப் புரிந்து கொண்டீர்கள் ஹஸ்ரத்! பெண் ஸுலைஹா இல்லை, இரும்புக் கடை பாஷாவின் மகள்..."

"என்ன, நிஜமாகவா!" என்று வியப்புடன் கூவினார் ஹஸ்ரத். அவர் முகம் வெளிறிப்போய் விட்டது. உதடுகள் படபடத்தன. தலையிலிருந்த தொப்பி கைக்கு இறங்கியது. அவருடைய மெய்ப்பாடுகளைக் கவனித்த அப்துல் ஸலாமுக்கு என்னவோ போலிருந்தது. தைரியத்தை நிலைநிறுத்திக் கொண்டவர்போல சமாளித்துக் கொண்டு "என்ன ஹஸ்ரத்! ஒரு மாதிரிப் போய்விட்டீர்களே! நான் சொல்கிறேன் என்று எண்ணுகிறீர்கள். ஆதியில் எனக்கும் உங்கள் எண்ணம்தான் இருந்தது. அப்போது ரஹ்மான் சின்னப் பிள்ளை. இப்போதோ நன்றாகப் படித்து விட்டான். தகுதிக்கேற்ற சம்பந்தம் வேண்டாமா! அதுவும் நானாகப் போகவில்லையே! இரும்புக்கடை முதலாளியே வலிய வந்து வற்புறுத்தும் பொழுது......"

"ஸாகேப்!" என்றார் ஹஸ்ரத்.

"என்ன ஹஸ்ரத்!"

"ரஹாலிப் பலகை இருக்கிறது தெரியுமா!"

"ஆமாம்; குரான் ஓதும்பொழுது தாங்கும் பலகை......"

"அதேதான்! பொருத்தமாக இணைந்திருக்கும் இரண்டு பலகைகளில் ஒன்றை மட்டும் கழற்றி விட்டால் 'கிதாபை' ஏந்த முடியுமா ஸாப்! அவ்வளவுதான் நான் சொல்வேன். அல்லாவுக்கு உகப்பான முறையில் செய்யுங்கள். ஸலாம் அலைகும்! நான் வருகிறேன்."

ஹஸ்ரத் போய் விட்டார்.

அப்துல் ஸலாமுக்கு அவர் இன்னும் எதிரே நின்று கொண்டிருப்பதைப் போல இருந்தது.

அன்று 'மக்ரிப்' தொழுகைக்குக் கூடப் போக மறந்து விட்டார் அப்துல் ஸலாம். வீட்டில் பீவியோடு ஒரே மனஸ்தாபம்.

"அநாதைப் பெண்; யாரும் வளர்த்துவிட ஆதரவில்லை என்று இரக்கம் காட்டப் போய் இப்பொழுது எப்படியெல்லாம் வந்து விட்டது. ஊரில் உள்ளவர்களுக்கு என்ன தெரியும்! எல்லாம் நம்முடைய குற்றம். சைத்தானைப் போய் வலிய வாங்கிக் கொண்டோமே......"

ஸலாமின் மனைவி காதைப் பொத்திக் கொண்டாள். ஆனாலும் துக்கம் கண்களின் வழியாகப் பெருக்கெடுத்தது.

"என்ன இப்படிப் பேசுகிறீர்கள்! சைத்தானும் அநாதையாம்....அல்லா அல்லா! அவள் வாப்பா குழந்தையை நம்மிடம் ஒப்படைக்கும் பொழுது கொடுத்த பணத்தை வைத்துத் தானே தொப்பிக் கடை ஆரம்பித்தீர்கள். நல்ல முதலாக இருக்கப் போய்த்தானே வியாபாரம் இவ்வளவு தூரமாவது விளங்கித் துலங்கி வந்தது. அதையெல்லாம் மறந்து விட்டுப் பேசாதீர்கள்......"

"ஆமாம் ஜக்காத்துக்கு ஒன்றும் கொடுத்து விட வில்லையே! இரண்டு வயதுக் குழந்தையைக் கன்னிப் பெண்ணாக வளர்த்து விட்டிருக்கிறோமே! அதைக் கவனிக்க வேண்டாமா!"

"அதற்குத்தான் சொல்லுகிறேன், பேசாமல் நம்முடைய ரஹ்மானுக்கே 'நிக்காஹ்' செய்து விடலாம் என்று."

"பீவி!" என்று அதிர்ந்தார் ஸலாம்.

"போதும் உங்கள் கூச்சல்! அந்தப் பெண் தண்ணீர் எடுக்கப் போனவள் வந்துவிடுவாள். கொஞ்சம் வாயை மூடிக் கொண்டு போங்கள்" என்று கடிந்த பீவி, "நீங்களா இப்படிப் பேசுகிறீர்கள்! இரும்புக் கடை சாகிபின் பணம் அல்லவா இப்படிப் பேசச் சொல்லுகிறது!" என்று முனகினாள்.

"ஆமாம், பணம் என்றால் உனக்கு இளக்கம் தான். நானெக்கு வயதான காலத்திலே குடிக்கத் தண்ணீரும் குளிர்ந்த நிழலும் இல்லா விட்டால் அல்லவா அதன் அருமை தெரியும்!"— மனதுக்குள் நினைத்தார் ஸலாம். ஆனால் வாய் விட்டுச் சொல்லவில்லை.



அன்று இருபத்தேழாம் நோன்பு நாள். வெள்ளிக் கிழமையில் பார்த்து வந்திருந்தது. மேலப்பாளையம் பிரபல தொப்பி வியாபாரி பல்லவா ஸலாம்! காலையிலிருந்தே ஒவ்வொருவராக வந்த பக்கீர்களும் பெரியவர்களும் 'ஜக்காத்' வேண்டி மாடியிலே நிரம்பி இருந்தனர். வீட்டுக்கு முன்னாலோ ஒரே கூட்டம்.

ஒவ்வொருவருடைய தகுதிக்கும் தக்க வண்ணம் 'ஜக்காத்' பணம் கொடுத்து அனுப்பினார் ஸலாம். சில்லறையாக மாற்றி வைக்கப்பட்டிருந்த காக்கிப் பையின் கனம் குறையக் குறைய வாசலில் இரைந்து கொண்டிருந்த ஜனத் திரளும் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்து கொண்டு வந்தது. பொழுது நன்றாக மங்கினதும் வாசல் எல்லாம் வெறும் வாசல். 'இஷா' தொழுகையைப் பள்ளி வாசலில் முடித்து விட்டு வீட்டுக்கு வந்தார் அப்துல் ஸலாம். திண்ணையில் தூரத்தில் சூழும் இருளுக்கு மத்தியில் யாரோ நிற்பதைப் போலத் தெரிந்தது. யாராவது 'விடிந்து மிஞ்சியவன்' ஜக்காத் வாங்க நின்று கொண்டிருக்கலாம்.

"யார் அது! இந்நேரம் வரைக்கும் வரப்படாது ஜக்காத் வாங்க!" என்றார் ஸலாம்.

"வாப்பா!" — ரஹ்மான்தான் நின்று கொண்டிருந்தான். அவன் குரலில் தொனித்த குழைவு அவர் உள்ளத்தை நெகிழச் செய்தது.

"யார்! ரஹ்மானா! ஏன் இங்ஙனே நின்று கொண்டிருக்கிறாய். 'ஜக்காத்' கேட்கிறவனைப் போல!" என்று கேட்டார் கேலிச் சிரிப்பைச் சிந்தியபடியே.

"ஆமாம் வாப்பா! 'ஜக்காத்'துக்குத்தான் நிற்கிறேன். எனக்கு மட்டும் இல்லையா, வாப்பா!"

ஸலாம் தீயை மிதித்தவர் போல் துள்ளினார். பேசுவது ரஹ்மான்தானா அல்லது வேறு யாராவதா என்று பார்க்கக் கிட்ட வந்தார். மகனேதான்! கைகள் இரண்டையும் குவித்து யாசிப்பவனைப் போலத் தகப்பனிடம் கை யேந்தி நின்றான் அவன்.

"எவ்வளவு பணம் வேணும், வாப்பா!" என்று பரிவோடு கேட்டார். ஆனால் பணமா கேட்டு நின்றான் அவன்!



"பணம் எதுக்கு வாப்பா!"

"பின்னே!..."

"ஸாலிஹாவைத் தாருங்கள். 'ஜக்காத்'தாக இருக்கட்டும்!"

"ரஹ்மான்! என்ன பேச்சுப் பேசுகிறாய்! மரியாதையாக வீட்டுக்குள்ளே போகப் போகிறாயா, இல்லையா!" — திண்ணையில் நின்ற வண்ணம் கர்ஜனை செய்தார் ஸலாம். தலையைக் கிறக்கியது அவருக்கு. இருட்டே தெரியாமல் கண்கள் இருண்டன. உணர்வு வந்து பார்த்த பொழுது ரஹ்மானைக் காணவில்லை. இரண்டு முறை கூப்பிட்டுப் பார்த்தார். அந்தச் சத்தத்தில் வீட்டுக்குள்ளிருந்து பீவியும் ஸாலிஹாவும் வந்தார்கள். ஆனால் ரஹ்மானைக் காணவில்லை.

* * *

அன்று போனவன்தான் ரஹ்மான். எங்கே போனானோ! வருஷம் ஒன்றும் ஓடிப் போய் விட்டது. ஒரு இடத்திலிருந்தாவது தப்பு வரவேண்டுமே! ஊஹூம். ஸலாம் அவர்களின் மனம் பைத்தியம் பிடிக்காத தோஷம் தான். இவ்வளவு துக்கத்துக்கும் நிலைக்களனாக விளங்கிய, ஆனால் வீட்டில் சூன்யம் கால் வைக்க வொட்டாமல் காத்து நின்ற ஒரு ஜீவனும் அந்த வீட்டில் ஓடிக் கொண்டுதான் இருந்தது— ஸாலிஹா தான்! அல்லாவுக்காக அவள் எல்லாத் துன்பத்தையும் அடக்கிக் கொண்டாள். வெள்ளிக்கிழமை இரவைப் புனிதமான ஊதுவத்தியின் மணத்தோடு வரவேற்றாள். மேக மண்டலத்தைப் போல எழும்பும் சாம்பிராணியின் பரிமளப் புகையோடு தொழுகை ஒலியும் கலந்து ஒரு தெய்வீகக் கலை அந்த வீட்டுக்குள் மண்டியது. அந்த வாசனையை நுகர்ந்த பீவி அவர்களுக்கோ ஸாலிஹாவின் மேலுள்ள பாசம் நாளுக்கு நாள் பெருகியது. சுகந்த மண்டலத்துக்குள் சூழ்ந்த வண்ணம் சதா தொழுது கொண்டிருக்கும் ஸாலிஹாவைப் பார்த்தால் அவர்களுக்கு வளராமல் நின்று விட்ட 'ஷவ்வால்' மாதத்து மூன்றாம் பிறை தான் ஞாபகத்துக்கு வரும்!

ரொம்ப நாளைக்குப் பிறகு ஊர் நடுத் தெரு ஹஸ்ரத் அப்துல் ஸலாமைப் பார்ப்பதற்கு வந்திருந்தார். படுத்த படுக்கையில் ஏதேதோ பிதற்றிக் கொண்டிருந்தார் ஸலாம். மகனைப் பிரிந்த சோகம் அவர் உடலை அணு அணுவாகக் கரைத்துக் கொண்டிருந்தது.

"கவலைப்படாதீர்கள், ஸாஹேப்! ரஹ்மான் எப்படியும் வந்து விடுவான். அல்லாவுத்தாலா ரொம்பக் கருணை உள்ளவன்!" என்று ஆறுதலாக மொழிந்தார் ஹஸ்ரத்.

"ஹஸ்ரத்...வாப்பா வந்துடுவானா ஹஸ்ரத்! அல்லா..." என்று பிரலாபித்த வண்ணம் எழுந்து உட்கார முனைந்தார் ஸலாம். பக்கத்தில் நின்று கொண்டிருந்த ஹஸ்ரத் கைகொடுத்துத் தாங்கினார். ஸலாமை இருமல் அலைக்கழித்தது. உடல் அதிர இருமியவர் ஹஸ்ரத்தின் கரங்களைக் கெட்டியாகப் போய்ப் பற்றினார். அப்படிப் பற்றியதிலே ஹஸ்ரத் அவர்கள் கையிலிருந்த மாலை அறுந்து போய்விட்டது. வீட்டுக்குள் திக்குக்கு ஒன்றாகச் சிதறின 'தஸ்பீஹ்' மணிகள்!

"யா அல்லா! என்ன இது ஹஸ்ரத்!" கலங்கிய கண்களுடன் வினவினார் ஸலாம். சிதறிய மணிகளை ஒவ்வொன்றாகப் பொறுக்கி

எடுத்தார் ஹஸ்ரத். அவர் முகத்தில் எந்த விதச் சலனமோ, கலக்கமோ தென்படவில்லை.

"பரவாயில்லை, ஸாஹேப்! கோர்த்து விட்டால் போச்சு. நூல் மட்டும் புதிதாக வேண்டும்..." என்று சொல்லிக் கொண்டே தொள தொளவென்ற தம் ஜுங்கிப் பையிலே அவ்வளவையும் போட்டுக் கொண்டார். அவருடைய செய்கையை வியப்புடன் பார்த்தார் ஸலாம். என்ன நினைத்துக் கொண்டாரோ! 'ஹஸ்ரத்' என்று இழுத்தார்.

"சொல்லுங்கள், ஸாஹேப்!"

"இந்த வருஷம் என்னையும் ஹஜ்ஜுக்கு அழைத்தீர்கள் அல்லவா!"

"ஆமாம்."

"உடம்பு இப்படி இருக்கிறதே!"

"அதைப் பற்றி என்ன! மனசிலே திடம் இருந்தால் எல்லாம் சரியாகப் போய்விடும். இன்னும் மூன்று மாதங்கள் இருக்கின்றன."

"அப்படியானால் 'காபா'வைத் தரிசித்து விடலாம்; இல்லையா ஹஸ்ரத்!"

"நாயகம் ஸல் அவர்கள் துணை செய்வார்கள். கவலையை விடுங்கள். நான் வருகிறேன்."

ஹஸ்ரத் போன பிறகு, உதிர்ந்த தஸ்பீஹ் மணிகள் ஒவ்வொன்றாக ஸலாமின் மனக் கண் முன் சுழன்றன. அவைகளைப் பொறுக்கி வசமாகக் கோக்கத் தெரியாமல் திணறினார் அப்துல் ஸலாம் ஸாஹேப் அவர்கள்.

## 3

இவ்வாறு பழைய நினைவுகளோடு 'கண்ணா மூச்சி' விளையாடிய அப்துல் ஸலாம் ஒன்று விடாமல் தொட்டுப் பிடித்து விட்டுக் கண்களைத் திறந்தார். இன்னும் விடியவில்லை. கொஞ்ச நேரத்துக்கு முன்னால் கண்ட பாலைவனக் கனவு அவர் மன நம்பிக்கையைக் குலைத்தது. இதயத்திலே கனல் பறப்பதைப் போல ஒரு வேதனை. கண்களைச் சிக்கென்று மூடிக் கொண்டார். அவர் உதடுகள் 'ரஹ்மான், ரஹ்மான்' என்று முணுமுணுத்தன. ஒரு கணம் மனக்கண் முன் ரஹ்மானே தோன்றினான். என்ன ஆச்சரியம்! கூட ஸுலைஹாவையும் அழைத்துக் கொண்டு 'துலா'க் கோலத்தில் அல்லவா நிற்கிறான்! அந்தக் காட்சியில் தம்மையே மறந்தார் ஸலாம். அவர் முகத்திலே வேதனை மறைந்து புன்னகை மலர்ந்து கொண்டிருந்தது. விட்ட இடத்திலிருந்து மீண்டும் கனவு தொடர்ந்தது:

எங்கும் ஒரே குளிர்ச்சி. ஜிலுஜிலு என்ற சுகமான காற்றின் சலசலப்புக் கேட்டது. மெல்லப் புரண்டு படுத்தார் ஸலாம். நீர்ச்சுனையின் அருகே தாம் படுத்திருப்பதைப் போலிருந்தது. காற்றிலே மிதந்து வந்த மணத்தை நுகர்ந்தபடியே அண்ணாந்து பார்த்தார். பொன்னிற வண்ணத்தில் பேரீச்சங்குலைகள் இளங்காற்றில் அசைந்தன! பார்த்த பார்வையிலேயே பசியெல்லாம் பறந்தோடி விட்டது. எழுந்திருக்க முயன்றார். கானலில் அடிபட்ட களைப்பு ஆளை அமுக்கியது. எங்கிருந்தோ இரண்டு கரங்கள் அவரை அணைத்துத் தூக்கி விட்டன. வியப்புடன் திரும்பிப் பார்த்தார். பழுத்த பக்கீர் ஒருவர் நின்று கொண்டிருந்தார்.

"பாவா! நான் எப்படி இங்கே வந்தேன்!" என்றார் ஆச்சரியத்தோடு.

கனவிலே வந்த பக்கீர் சொன்னார்: "நீர் இருந்த இடத்திலேதான் இருக்கிறீர். ஆனால் வேறு உணர்வுடன்!"

"ஆமாம்" என்று சொல்ல வாயெடுத்தார் ஸலாம். அதற்குள் பக்கீரைக் காணவில்லை. ஏதோ ஒரு குரல் பேசியது:

"மனித உடம்புக்குள் ஒரு சிறிய சதைத் துண்டு இருக்கிறது. அது கொதித்தால் உலகம் பாலைவனமாகத் தோன்றும்; குளிர்ந்தாலோ எல்லாம் பசுஞ் சோலைதான்! அந்தத் துண்டுக்குப் பெயர்தான் 'இருதயம்' என்பது!"

## 4

"தடதட" வென்று யாரோ கதவைத் தட்டினார்கள். திடுக்கிட்டு எழுந்தார் அப்துல் ஸலாம். மனத்திலே குளிர்ந்த அமைதி மனவியாகுலத்தை எல்லாம் அடித்து விரட்டி இருந்தது. கண்களைத் துடைத்துக் கொள்வதற்குள் ரஹ்மானே முன்னால் வந்து நின்றான், தலையிலே மலாயாத் தொப்பியும் அரையிலே கைலியுமாக அணிந்து கொண்டு.

"வாப்பா! வந்து விட்டாயா! நல்ல வேளையில் வந்தாய்! ஹஜ்ஜுக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன். இல்லை, இல்லை. இப்போதுதான் போய்விட்டுத் திரும்பி வந்தேன்" —மகனைக் கண்ட பரவசத்தில் என்னென்னமோ பிதற்றினார் ஸலாம். ஹஸ்ரத் அவர்களும் வந்து சேர்ந்தார்.

"என்ன ஸாப்! மதியம் ஒரு மணிக்கெல்லாம் புறப்பட்டு விட வேண்டாமா!" என்றார். ரஹ்மானைப் பார்த்ததும் அவர் ஆனந்தம் பன்மடங்கு பெருகியது. கையிலிருந்த 'தஸ்பீஹ்' மணி மாலையைக் கண்களில் ஒற்றிக் கொண்டார்.

ஸலாம் மாலையை உற்றுப் பார்த்தார். அவர் கண்களிலே ஒரு பிரகாசம் பரவியது.

"அதே மணிகள்தான் ஸாஹேப். நூலை மட்டும் மாற்றினேன்; மாலையாகி விட்டது!" என்றார் ஹஸ்ரத்.

புதிய உணர்ச்சி பெற்ற அப்துல் ஸலாம் மகிழ்ச்சி பொங்கச் சொன்னார்:

"அடுத்த நோன்புக்கு முன்னால் ரஹ்மானுக்கும் ஸுலைஹாவுக்கும் நிக்காஹை நடத்தி விட வேண்டியதுதான்! அதற்குள்ளாக நாமும் ஹஜ்ஜை முடித்துக் கொண்டு வந்துவிடலாம்; இல்லையா, ஹஸ்ரத்!"

"ஏன் இப்படி மாறிவிட்டீர்கள் ஸாப்!" என்று கேட்டார் ஹஸ்ரத், புன்முறுவலுடன். ஸலாம் சொன்னார்: "இடை வழியில் பாலைவனத்தை எல்லாம் கடந்து போக வேண்டும் அல்லவா! அப்போது எனக்குத் தவித்தால் நீரும் தங்க நிழலும் தந்து உதவுவது ஏது தெரியுமா! இத்தனை நாளும் ஸுலைஹா தொழுது வந்தாளே தொழுகை, அதனுடைய பலன்தான்! அந்த நன்றிக்கு நான் ஏதாவது கைம்மாறு செய்ய வேண்டாமா!"

எல்லோரும் வியப்பும் மகிழ்வும் பொங்க அவரையே பார்த்துக் கொண்டு நின்றனர்!



# பாக் செய்யப்படாத வில்லைகளை வாங்குவதில் ஜாக்கிரதையாய் இருங்கள் !

பாக் செய்யப்படாத வில்லைகள் வயிற்றுக் கோளாறு செய்யும் அமிலப் பொருள்களை உண்டாக்கக்கூடியதால், புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகளை அசுசியினின்றும் நீர்த்திவலைகளினின்றும் பாதுகாக்கும் பொருட்டுத் தனித்தனியாக சீல் செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால் புதிய 'ஆஸ்ப்ரோ' அபாயமில்லாதது. இது இருதயத்தையோ, வயிற்றையோ பாதிக்காது. துர்ப்பழக்கம் ஏற்படுத்தக் கூடிய மருந்துகள் இதில் கிடையாது.

நவீன முறையில் சிறப்பாகத் தயாரிக்கப்பட்ட புதிய 'ஆஸ்ப்ரோ' துரிதமாக வேலை செய்கிறது. அதனால் தலைவலி, உடம்புவலி, ஜலதோஷம், ஜுரம் முதலியவைகளினின்றும் நிவாரணமளிக்க, சாப்பிட்ட மூன்று வினாடிகளில், அதனுடைய வேலையைத் துரிதமாக ஆரம்பிக்கிறது.

**அபாயமில்லாத துரித நிவாரணம் உங்களுக்குக் கிடைக்கும் —**

**புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லை**




'ஆஸ்ப்ரோ' ஸீல்டைட் துண்டுகளையே வாங்குங்கள்.

★ வயிற்றுக் கோளாறு உண்டாக்கும் அமிலப் பொருள்களிலிருந்து காப்பாற்றும்.

★ எப்பொழுதும், எந்த சமயத்திலும், எந்த இடத்திலும் எளிதாக உபயோகிக்க கையில் எடுத்துச் செல்லக் கூடியது.

★ துல்லியமான, ஆரோக்கியமுள்ள மூன்று வில்லைகளின் விலை இரண்டு அணாதான்.

278

கடைகளில் விற்கப்படும் எல்லா 'ஆஸ்ப்ரோ' வில்லைகளும் புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகளே.



**கீர்த்தனம் 23** — ராகம்: சங்கராபரணம் — சாபு தாளம்

## பல்லவி

மஹாலக்ஷ்மி ஜகன்
மாதா மனமிரங்கி வரமருள் (மஹாலக்ஷ்மி)

## அனுபல்லவி

மஹா விஷ்ணுவின் மார்பெனும் மணி
பீடமதனில் அமர்ந்திடும்
மன்மதனை ஈன்றருளும் தாயே
தயாநிதியே மஹாமாயே (மஹாலக்ஷ்மி)

## சரணம்

பாற்கடல் தரும் கிருபாகரி
பரிந்து வந்தெனை யாதரி
பங்கஜ மலர் வளர் அன்னையே கடைக்கண்
பார் — ராமதாஸன் பணியும் (மஹாலக்ஷ்மி)

29-வது மேளகர்த்தா ராகம் – ஸம்பூர்ண ராகம்.

## பல்லவி

| | | | |
|---|---|---|---|
| மா , கா , | மா ; பா ; | ; ; ; | ; ; ப த நீ |
| ம ஹா | ல - க்ஷ்மி - | - - - | - - ஜ - கன் |
| ஸா ; ; | ஸ் நி தா மா பா | ஸ் நி தபா, ப ப | ம க ஸா ரீ கா |
| மா - - | தா - - ம னம் | இ - ர ங் கி | வ - ர ம ருள் |
| மா , தபமகா , | மா ; ப த நி த | ரி ஸ் நி தா ப | ; ; ப த நீ |
| ம - - ஹா - | ல - க்ஷ்மி - - - | - - - - - - | - - ஜ - கன் |
| ஸா , நிஸ்ரிஸாரி | ஸ் நி தா மா பா | ஸ் நி தபா, ப ப | ம க ஸா ரீ கா |
| மா - - - - - - | தா - - ம னம் | இ - ர ங் கி- | வ - ர ம ருள் |
| மா , தபமகா , | மா ; ப த நி த | ரி ஸ் நி தா ப | ; ; ப த நீ |
| ம - - ஹா - - - | ல - க்ஷ்மி - - | - - - - - - | - - ஜ - - கன் |
| ஸ் ரி க் ம் க் ரி | ஸ் நி தா மா பா | க் ரி ஸ் நித ப | ம க ஸா ரீ கா |
| மா - - - - - - | தா - - ம னம் | இ - ர ங் கி - | வ - ர ம ருள் |

(மஹாலக்ஷ்மி)

## அனுபல்லவி

| | | | |
|---|---|---|---|
| ஸா பா ; | ப ப ம க மா பா | பா ஸ் த நீ | ஸா ; ஸா ஸா |
| ம ஹா - | வி - - - ஷ் ணுவின் | மா - - ர்பெ | னு ம் ம ணி |
| ஸ் க் ரீ ஸா | ஸா ஸா ஸா ஸ் ரி | ஸ் ஸா த நீ | ஸா ; ; ; |
| பீ - - ட | ம த னி ல - | ம ர் ந் தி | டும் - - - |
| த ஸ் நி தபா, ம | த ப ம க மா பா | பா ஸ் த நீ | ஸா ; ஸா ஸா |
| ம - - ஹா - | வி - - - ஷ் ணுவின் | மா - - ர்பெ | னு ம் ம ணி |
| ஸ் க் ரி ஸா | ஸா ஸா ஸா ஸ் ரி | ஸ் ஸா த நீ | ஸ நி ஸாரிஸ் நி தா ப |
| பீ - - ட | ம த னி ல - | ம ர் ந் தி | டும் - - - - - - - |
| ரி ஸ் நி தபா, ம | த ப ம க மா பா | த நி ஸ் ரி ஸ | ஸா ஸா ஸா ஸா |
| ம - - ஹா - | வி - - - ஷ் ணுவின் | மா - - - - | ர்பெ னும் ம ணி |
| ரி ப் ம் ம் க் ரி | ஸா ஸா ஸா ஸ் ரி | ஸ் ஸா த நீ | ஸா ; ; ; |
| பீ - - - - - | டம த னி ல - | ம ர் ந் தி | டு ம் - - |
| மா பா கா | ரி ஸா ரி ; | ஸ் நி தா பா | தா நீ ஸா ; |
| ம ன் ம | த னை ஈ - | ன்ற - ரு ளும் | தா - யே - |
| பா ஸா , ரி | ஸ் நி தா பா ; | ப ப ம கா ஸ | ஸா ரீ கா மா |
| த யா - - | நி - தி யே - | ம - ஹா - - | மா - யே - |

(மஹாலக்ஷ்மி)

சரணம்

| | | | |
|---|---|---|---|
| பா ; ஸா | ஸ ரி தா பா மா ‖ | பா ; மா | கா ; ; ; ‖ |
| பா ற் க | டல் த ரும் க்கு | பா - க | ரி - - - |
| மா கா ஸா | ஸா, ரி கா மா ‖ | த ப ம க மா | பா ; ; ; ‖ |
| ப ரி ந்து | வ ந் -தெ னை | யா - - - த | ரி - - - |
| ஸா , ரி ஸா | ரீ ரீ ஸா தா ‖ | ரீ பா தா | மா பா தா ரீ ‖ |
| ப ங் - க | ஜ ம லர் வ | ள ர ன்னை | யே க டைக்கண் |
| ஸா ; ; | ; ; மா பா ‖ | ஸ ரி தபா, ; | ம க ஸா ரி கா ‖ |
| பா - . | - ர் ரா - | ம - தா - | ஸ ன் ப ணி யும் |
| ஸா , ரி ஸா | ரீ க் ரீ ஸ ரி ரீ ஸ தா ‖ | ஸ ரி பா ரி த | மா பா தா ரீ ‖ |
| ப - ங் க | ஜ - - ம - ல ர் வ | ள - ர ன்னை - | யே க டைக் கண் |
| ஸ ரி ஸ ரீ ஸ | ; ; மா பா ‖ | ஸ ரி தபா, ; | ம க ஸா ரி கா ‖ |
| பா - - - - | - ர் ரா - | ம - தா - | ஸ ன் ப ணி யும் |

(மஹாலக்ஷ்மி)

# வட்டமேஜை

## சனநாயகமா? சர்வாதிகாரமா?

'முன்னே வந்த செவியைப் பின்னே வந்த கொம்பு மறைக்க முயன்றதாம்' எனப் பழமொழி ஒன்றுண்டு. அதேபோல் இராவணனில் இருந்து ஸ்ரீ விக்கிரமராஜ சிங்கன் வரை அதாவது இலங்கையின் சுதந்திரம் அஸ்தமித்துப் பிரிட்டிஷ்காரர்களின் ஆட்சி ஏற்படும் வரை அரசோச்சும் உரிமை படைத்திருந்த தமிழ் இனத்தை, அவர்கள் தாய் மொழியை விரட்டியடிக்க வெகு சமீபத்தில் இலங்கைக்கு வந்த விஜயனின் சந்ததியினர் முயற்சித்து வருவது விபரீதமான செயலாகும். இன்றுள்ள சனநாயக அரசியல் முறைப்படி சிங்களவர்கள் பெரும்பான்மையினர் என்பது தெளிவு. ஆனால் சனநாயகத்தில் சிறுபான்மையினர்களின் நல உரிமைகளும் பாதுகாக்கப்பட வேண்டியது இன்றியமையாதது. சனநாயகம் பெரும்பான்மையினர்களுக்கே முக்கியத்துவம் அளிப்பினும் சிறுபான்மையினர் நலங்கள் பாதுகாக்கப்படா விடின் ஆட்சி சர்வாதிகார நிலைக்குத் திரும்பும் அபாயம் சனநாயக அரசியல் அமைப்பில் உண்டு. சிங்கள மொழி சிங்கள சமூகம் ஒன்று மட்டுமே பேசும் மொழி. தமிழ் தமிழர் கிறிஸ்தவர், முஸ்லீம்கள் என ஒன்றுக்கு மேற்பட்ட இனமக்கள் பேசும் மொழி. எனவே சிங்களவர்கள் சன விகிதத்தில் பெரும்பான்மையினர் என்றால் தமிழர்கள் இன விகிதத்தில் பெரும்பான்மையினர் என்பது வெளிப்படை. ஆகவே இரு மொழிகளுக்கும் சம அந்தஸ்து கொடுக்க வேண்டும்.

தம்பலகமம்
20—2—56 தமிழ்ப் பித்தன்

★

## ராஜாஜியின் குட்டிக் கதைகள்

பனித்துளியில் பனைமரம் தெரிவது போல்—ஆழ்ந்த கருத்துக் கொண்டவை ராஜாஜியின் குட்டிக் கதைகள்.

"பட்டணம் போவோம்" கதையில் சக்கிலி கதா நாயக-நாயகி பாத்திரங்களாலும், கைத்தறித் தொழில் மில் தொழில் போட்டியில் நசித்து வருவதை மனத்தில் கொண்டு எழுந்ததாக இருக்கிறது. அதோடு நாகரிகம் என்று சொல்லிக் கொள்ளும் பட்டணங்களில் "எல்லாம் ஒட்டுக்க போட்டு ஒரே ஜலத்தில் அலம்பி ஒரே துணியால் எல்லாம் துடைத்து வைக்கும்" அநாகரிக ஸ்தலங்கள் மலிந்து கிடப்பதை நன்றாகச் சொல்லியுள்ளார். அதே போல் "கோழியின் விசாரம்" என்ற கதையில் "இலங்கையில் இந்தியரின் அவதி" ராஜாஜியின் மனத்தை எவ்வளவு சங்கடப்படுத்தி வருகிறது என்பது தெளிவு.

ஏழு வார்த்தைகளில் அடங்கும் ஒவ்வொரு குறளிலும் எவ்விதம் மனத்துக்கு எட்டாத பொருள் செறிந்திருக்கிறதோ, அதே போல் ராஜாஜியின் ஒவ்வொரு குட்டிக் கதையும் பொருள் செறிவுடன் விளங்குகிறது.

சென்னை
20—2—56 எஸ். கே. எஸ். ராகவன்

★

## இலட்சியக் கதை

சித்திரிகாவின் கனி நடனத்துடன் ஆரம்பித்த தொடர் கதை, நவ ரசங்களில் மிதந்து 'கல்கி' வாசகர்களின் இதய கமலங்களைத் தொட்டு ரவிசந்திரிகா ராக ஆலாபனையுடன் மங்களமாய் முடிகிறது. சொக்கி குடிமக்கள் முடிவில் ஆச்சரியத்தில் மூழ்கினர். மெய் மறந்தனர். இன்பப் போதை எய்தினர். பேரானந்த இலயத்தை அனுபவித்தனர். அவர்கள் மட்டுமா! இல்லை, கதாபாத்திரங்கள் அத்தனை பேருடன் 'கல்கி' வாசகர்களும் அதைக் கேட்டோர் அத்தனை பேருமே அதே உணர்ச்சி பரவசமாயினர் என்றால் மிகையாகாது.

கதை ஒரே விறுவிறுப்பு. ஆங்காங்கே இலட்சியப் புரட்சிகள். இடை இடையே மனத் தத்துவ வியப்பூட்டுகள். பலவகைச் சாதிசமயப் பண்பாடுகளை அதே பாஷை பேசும் அதே பாத்திரங்கள் மூலம் வெளியிட்டு இருந்தது மிக மிக அபாரம். மனோரம்மிய நாட்டு வாழ்க்கைச் சிறப்பின் படப் பிடிப்பில் தேசிய வைத்தியச் செல்வத்தின் மகத்துவத்தைப் புகுத்தியது, இலட்சியத்தின் உச்சநிலையை எட்டிப் பிடிக்கிறது கதையில்.

ஆசிரியர் சோமு அவர்களின் மகத்தான அடுத்த தொடர்கதையை வாசகர்கள் வெகு ஆவலுடன் எதிர்நோக்குகின்றனர்.

இலங்கை
20—2—56 வே. நடராசா

# மேலும் மலிவானது!

PROTEX All Purpose TOILET POWDER

## குடும்பம் முழுவதற்கும் ஒரே டால்க்

ரம்மிய மணம் கொண்ட ப்ரோடெக்ஸ் உயர்ந்தரக சர்வ பிரயோக வாசனைப் பௌடர்; மிக மிகக் குறைந்த விலையில் மிக மிகப் பெரிய டப்பா! இந்தியா வெங்கும் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் ப்ரோடெக்ஸ் டால்கம் பௌடரை விரும்புகின்றன—அதன் வசீகரமான வாசனையினாலும் எல்லாவற்றிற்கும் உபயோகப்படும் பரிமள டால்கம் பௌடர் என்பதனாலும்......

**இன்று ப்ரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?**

குணம் உத்தரவாதம் கால்கேட் பாமாலிவ் அளிக்கிறது




**ப்ரோடெக்ஸ்**

*சர்வப்பிரயோக*

**வாசனைப்பௌடர்**

# மூன்று உள்ளங்கள்

துரோணன்

அந்த அறைக்குள் வெளிச்சம் மிகவும் மங்கலாகப் பரவி யிருந்தது.

பார்வதி வெளிப்புறத்தை எட்டிப் பார்த்த வண்ணம் தன் கையிலிருந்த தகரப் பேழையைத் திறந்து, அதைத் தலைகீழாகக் கவிழ்த்தாள். அதிலிருந்து அரை ரூபாய் நாணயங்களும், கால் ரூபாய் நாணயங்களும் 'கலகல' வென்ற இரைச்சலுடன் குப்பலாக விழுந்து சிதறின. அவள் அவைகளைப் பரபரப்புடன் தன்புறமாகக் குவித்துக் கொண்டு ரகவாரியாகப் பிரித்து எண்ணத் தொடங்கினாள். முழுசாக இருபது ரூபாய்கள் எண்ணிய பின்பும், கீழே சில்லறைகள் எஞ்சியிருந்தன. திடீரென எழுந்த இளம் குரல், அவளைத் தூக்கி யெறிந்தது போன்றிருந்தது!

"ஏது அம்மா இவ்வளவு ரூபாய்! இன்றைக்குக் காலையில் அப்பாவிடம் காசே இல்லை என்றாயே!"—இது குழந்தை சீதாவின் குரல்.

அடுத்த கணம் பார்வதியின் விழிகள் வெருண்டன! நடுக்கட்டுக் கூடத்திலிருந்த சோபாவில் அயர்ந்து நித்திரை செய்து கொண்டிருந்த சீதாவை இத்தகைய நிலையில் அவள் சற்றும் எதிர்பார்க்கவில்லை. தன் குழந்தையின் மழலைக் கேள்வியில் மகிழ்ச்சி கொள்வதற்குப் பதிலாக அவள் பயப் பிராந்தியே அடைந்தாள். சீதாவுக்கு நான்கு பிராயம் இன்னும் முடியவில்லை. இருந்தும், இத்தகைய ஆராய்ச்சிக் கேள்வியை விடுப்பதற்கு மட்டிலும் அவளுக்கு எப்படித்தான் தெரிந்ததோ!

பார்வதி பரபரப்புடன் திரும்பி நாணயங்களை மறைத்தவாறு, "அதிருக்கட்டும். உள்ளே உனக்குப் பட்சணம் வைத்திருக்கிறேனே, தின்றாயோ!" என்று பரிவுடன் கேட்டாள்.

குழந்தை சீதா ஏமாந்தாள்! "இல்லையே!" என்றாள் கையை ஆட்டியபடி. பார்வதி சட்டென எழுந்து அவளைத் தூக்கி இடுப்பில் வைத்துக் கொண்டு அடுக்களைக்குள் நுழைந்தாள். பேச்சின் போக்கை எங்கெங்கோ செலுத்திய வண்ணம் உறியிலிருந்த பாத்திரத்தைத் திறந்து அதிலிருந்து ஒரு லட்டு உருண்டையை எடுத்துக் குழந்தை சீதாவின் கையில் கொடுத்தாள். பிறகு, "சீதா, நீ இங்கேயே உட்கார்ந்திருக்கிறாயா! நான் போய்ப் பொம்மைகளை எடுத்துக் கொண்டு வருகிறேன்!" என்று சொல்லிவிட்டு முன்பக்கத்து அறைக்கு ஓடினாள். கீழே கிடந்த நாணயங்களை அள்ளி டப்பாவுக்குள் போட்டு, அது குலுங்கா வண்ணம்சுற்றிலும் பஞ்சையும் வைத்து அடைத்தாள். பிறகு ஒரு இடுக்கில் செருகி வைத்தாள்.

"சித்தி, சித்தி!"

பார்வதி திரும்பிப் பார்த்தாள். குழந்தை சரசு நின்று கொண்டிருந்தாள்.

"என்ன!" என்று சிறிதும் தாட்சண்யமின்றி வெடுக்கென்று கேட்டாள் பார்வதி.

"சித்தி, வந்து, வந்து—" சரசு தன் வாயிலிருந்த எச்சிலைக்கூட்டி விழுங்கிக் கொண்டு, "சித்தப்பா இருக்கிறாரோ!" என்று கேட்டாள் பரிதாபமான குரலுடன்.

"ஏன்! சித்தப்பாவுக்கு என்ன கொண்டு வந்திருக்கிறாய்!" பார்வதியின் குரலில் கடுமை கர்ண கடூரமாக ஒலித்தது.

சரசு குழம்பினாள். வெய்யிலின் தகிப்பினால் அவளது கொவ்வை அதரங்கள் வறண்டிருந்தன. பாவம்! பிறரின் விருப்பையும், வெறுப்பையும் பாகுபடுத்திக் காணும் சக்தி அவ்விளம் பச்சை யுள்ளத்துக்கு ஏது! சீதாவைப் போன்று அவளுக்கும் ஏறக்குறைய நாலு, நாலரை வயதுதானே!

"அம்மாவுக்கு ராத்திரியிலிருந்து ஜுரம், அழுது கொண்டே படுத்துக் கொண்டிருக்கிறாள். உன்னைக் கேட்டு, இரண்டு ரூபாய் பணம் வாங்கிக் கொண்டு வரச்சொன்னாள்!" இச்செய்தியை மறக்காமல் கூற அக்குழந்தை எடுத்துக் கொண்ட பிரயாசைக்கு ஓர் எல்லையில்லை.

"ஊம்! இதுக்காக உன் அம்மா உன்னை அனுப்பிச்சாளோ!" என்றாள்.

சரசுவுக்குப் பதில் கூறத் தெரியவில்லை. அவளது மலர் விழிகள் குறுக்கும் நெடுக்குமாக உலாவின. ஆனால், அவள் எதையோ திடீரென்று நினைத்துக் கொண்டவள் போல், "ஊம்...நாளைக்கு மாமா பணம் அனுப்பிச்சதும், அம்மா கொடுத்து விடுவேன்னு!" என்று தட்டுத் தடுமாறிக் கூறினாள்.

பார்வதி தலையை யாட்டி "உம்!" என்றாள். அதில் ஏளனம் மிகைப்பட்டிருந்தது. ஆனால், இச்சாத்வீகத் தாக்குதலின் பொருளறியாத, சரசு உவகை கொண்டு, "சித்தி, நான் கெட்டியாக மூடிக்கொண்டு ஓடியே போய்த் தொலைக்காம கொடுத்துடுவேனே!" என்றாள்.

பார்வதி மீண்டுமொரு முறை பெருமூச்சை விடுத்த வண்ணம், "சரசு, சித்தப்பா ஆபீசுக்குப் போயிட்டார்; என்கிட்டே பணமே இல்லையாம்னு அம்மாகிட்டே சொல்றயா!" என்றாள் கொஞ்சலான உச்சரிப்பில்.

சரசு தலையை யாட்டியபடியே பரிதாபத்துடன் அவளது முகத்தைப் பார்த்தாள். பாவம், அவ்விளம் முகத்தில் ஏமாற்றத்தின் சின்னம் கருமையாகச் சூழ்ந்திருந்தது.

இவ்வளவு நேரமாக நடந்து கொண்டிருந்த நாடகத்தைக் குழந்தை சீதாவும் பார்த்துக் கொண்டு தானிருந்தாள். அச்சம்பாஷணையின் முழுப் பொருள்தான் அவளுக்குச் சரியாக விளங்கவில்லை. ஆனாலும், அவளது இளம் நெஞ்சில் பதிந்திருந்த ஒரு பொருள் மட்டிலும், சமயம் நேரிட்டவுடன் பளிச்சிட்டது!

"ஏம்மா, நீதான் அந்த உள்ளுக்குள்ளே..."

அம்மாவின் ஞாபக மறதிக்கு ஒரு அசட்டுப் பட்டம் சூட்டுவதாகவே குழந்தை யுள்ளம் எண்ணியது! ஆனால், அவள் வாயைத் திறக்கும் முன்னரே பார்வதி விழிப்படைந்து விட்டாள். சீதாவின் செய்தியை முடிவுபெறச் செய்யாமல், அவளது கண்டத்தினின்றும் கிளம்பிய அதட்டல் குரல் அணைகோலி விட்டது.

சரசு தெருப்பக்கம் திரும்பினாள். ஆனால், குழந்தைப் பாசம் மிகுந்த சீதாவின் அழைப்பு அவளை மீண்டும் திரும்பச் செய்தது.

"சரசு, இந்தா-உனக்குப் பாதி; எனக்குப் பாதி-ஊம்!" என்று கூறிய வண்ணம் சீதா தன் கையிலிருந்த லட்டு உருண்டையில் பாதியை விண்டாள். அச்சிறு விழிகளும், கரங்களும் உறவாடின!

சரசு மிரட்சியுடன் தன் சித்தியை நோக்கினாள். அடுத்த இமைப் பொழுதுக்குள்ளாகவே சரசுவின் கால்கள் வீட்டின் எல்லையைக் கடந்து விட்டன. ஆனாலும் வரும்போது அச்சிறு கால்களுக்கு இருந்த உற்சாகத்தின் வேகம் இப்பொழுதில்லை. ஆடியசைந்தபடியே அவளது சிறு உருவம் தெருவின் திருப்பத்தைக் கடந்தது. அதுவரையில் பார்வதியின் விழிகள் அதே திசையில் இருந்தன.

பார்வதி வாசற் கதவைத் தாளிட்டுக் கொண்டு உட்புறம் வந்தாள். சீதாவின் கையிலிருந்த பாதி உருண்டை இன்னமும் அப்படியேதானிருந்தது. அவளது மழலை நிறைந்த கேள்விகள் அப்பொழுது பார்வதியின் பசையற்ற உள்ளத்திற்குள் வெறுப்பையே குவித்தன!




## 2

இரண்டு தினங்கள் சென்று விட்டன.

பார்வதி சமையற் கட்டினுள் ஏதோவொரு மும்முரமான காரியத்தைச் செய்து கொண்டிருந்தாள். பாங்கியிலிருந்து வெகு சீக்கிரமாகவே திரும்பியிருந்த நடராஜன், சட்டையைக் கூடக் கழற்றாமல், சோர்வுடன் பெஞ்சியில் படுத்தான். வழக்கம்போல் தந்தையின் வருகையைப் பார்வதிக்கு அறிவிப்பதற்குச் சீதாவும் அங்கில்லை.

நடராஜனின் சிந்தனைப் படகு, அவனது வாழ்க்கைக் கடலின் முதல் அலையை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

தியாகுவும் நடராஜனும் போன வருஷம் வரையில் இணையற்ற சகோதரர்கள்தாம். கால தேவனின் கபடச் செய்கை தியாகுவின் உயிரைக் கொண்டு செல்லாமலிருந்தால் அவர்கள் எக்காலமும் மாசற்ற சகோதரர்களாகவே தானிருப்பார்கள்.

நடராஜனுக்கு எட்டு வயது மூத்தவனாக இருந்த தியாகு, தன் உழைப்பின் மூலமே முன்னுக்கு வந்தவன். அவர்களது பெற்றோர்கள் இறந்தபொழுது, நடராஜனுக்குப் பதின்மூன்றே வயதாகி யிருந்தது. தியாகு, நடராஜனை அநேகம் நோய்களினின்றும் காப்பாற்றி, இண்டர்மீடியட் வரையிலும் படிக்க வைப்பதற்கு அரும்பாடுபட்டான். இதற்கிடையில்தான், ஒரு சாதாரண குடும்பத்திலிருந்த மீனா அவனுக்கு வாழ்க்கைத் துணைவியானாள்.

தியாகுவின் இல்லற வாழ்க்கை ஆரம்ப காலத்தில் பீதியுடனேயே துவங்கிற்று. ஆனால், சிறிது காலத்துக்குப் பின்னர், தன் மனைவியின் உத்தமமான குணத்தையும் தாராள மனப் பான்மையையும் கண்டு, தியாகு உள்ளம் பூரித்தான். அவள் தன்னனிடம் மட்டுமின்றி, தன் சகோதரனிடமும் எல்லையற்ற பாசமும், மரியாதையும் வைத்திருப்பதை, அவன் கண்கூடாகக் கண்டான். அம்மூவரின் வாழ்க்கையும் ஏறக்குறைய ஆறு ஆண்டுகள் வரையில் எவ்விதச் சறுக்கலுமின்றிக் கழிந்தது. அதன் பின்னர்தான், நடராஜனுக்கு ஒரு சோதனை மிகுந்த கட்டம் நேர்ந்திருந்தது. அதுதான்—அவனது காதல்!

நடராஜனின் இருபத்தோராம் ஆண்டில், அவனது கல்லூரிப் படிப்பின் இரண்டாம் ஆண்டு துவங்கிற்று. அவ்வருஷம்தான் பார்வதி கல்லூரியில் சேர்ந்தாள். அவளுடன் ஆரம்பித்த பழக்கம் ஆழ்ந்த பிரேமையில் முடிந்தது.

பார்வதியின் மண விஷயத்தில் அவளது தந்தையானரிடையர்டு தாசில்தார் கொண்

டிருந்த சில சில கண்டிப்பான நிபந்தனைகள் நடராஜனை ஏமாற்றமுறச் செய்தன. அவர், பார்வதியின் சம்மதத்தை மட்டிலும் கோருபவராக இல்லை. அவளைக் கைப்பற்றுபவன், தகுந்த உத்தியோகத்திலிருக்க வேண்டுமெனவும், குறைந்த பட்சமாக, அவளுக்கு ஆயிரம் ரூபாய்க்காவது நகைகள் அணிவிக்க வேண்டுமெனவும் அறிவித்திருந்தார்.

எளிய குடும்பத்தில் பிறந்த நடராஜன் இதற்கெல்லாம் எங்கே போவான்! ஓரேயடியாக மனம் ஒடிந்து போய் விட்டான்.

ஆனால் நடராஜனின் காதல் நோயைப் பற்றிய செய்திகள் மீனுவின் செவிகளில் விழுந்தபின் நடந்த சம்பவங்கள், தியாகுவையும், நடராஜனையும் வியப்பில் ஆழ்த்தின. மீனுவின் ஓரே தியாகச் செயலின் மூலம், அக்குடும்பத்தின் பல பிரச்னைகளும் தீர்ந்து விட்டன. அவளது பெற்றோர் அளித்த நகைகள் யாவும், இரண்டாயிரம் ரூபாய்க்குக் கரன்சி நோட்டுக்களாக மாறி, நடராஜனுக்கு பாங்கியில் ஒரு பொக்கிஷதாரர் வேலையையும், அவனது காதல் கன்னியான பார்வதியையும் வலியக் கொடுத்து விட்டன.

ஏறக்குறைய இரண்டு ஆண்டுகள் வரை அவர்களது குடும்பம் மிக அன்யோன்யத்துடனேயே கழிந்தது. இதற்கிடையில்தான், மீனுவுக்குச் சரசுவும், பார்வதிக்குச் சீதாவும் ஓரே வருஷத்தில் பிறந்தார்கள். அதன் பின்னர் பார்வதியின் பணச்செருக்கு குடும்பத்தில் அதிருப்தியை விளைவித்தது. அதைத் தொடர்ந்து, பார்வதியின் தகப்பனார் விளையாட்டுப் போல் செய்த ஒரு செயல், அக்குடும்பத்தை இரு கூறுகளாகப் பிரித்தது. மேலும் இடி விழுந்ததுபோல, இரண்டாண்டுகளுக்குப் பின் தியாகு விஷ ஜுரத்துக்கு இரையானான்.

இச் செய்திகளெல்லாம் பழமையாகி விட்டன. தியாகுவின் மறைவுக்குப் பின், இன்று பதினொரு மாதங்கள் சென்று விட்டன. நடராஜன் மீனுவைத் தன்னுடனேயே வந்து இருந்து விடும்படி எவ்வளவோ கேட்டுக் கொண்டும் அவள் மறுத்து விட்டாள். ஏழைமைக்கும் கொஞ்சம் சுயகௌரவம் இருக்கத்தானே செய்யும்!

## 3

நடராஜனின் சிந்தனைப் படகு, அவனது வாழ்க்கைக் கடலின் முதல் அலையில் தொடங்கி, ஐந்தாம் அலையான கடுக்கடலின் புயலில் வந்து தடைபெற்றது. அவன் வெகுண்டவாறு கண் விழித்தான். காலை மாட்டில் கையில் காப்பியுடன் வந்து நின்றுகொண்டிருந்த பார்வதியின் கூப்பாடுகள்தான் அவனை அவ்வாறு எழுப்பின. அவன் அவளிடமிருந்த காப்பியை வாங்கிக் குடித்து விட்டு, வேகத்துடன் எழுந்தான்.

பார்வதி திடுக்குற்றவாறு, "இன்னும் எங்கே கிளம்புகிறீர்கள்!—" என்றாள்.

நடராஜன் விபரத்தை வெளியிட்டான்.

அன்று காலை அவன் பாங்கிற்குச் செல்லுகையில், அப்படியே தன் மதனியையும் பார்க்கச் சென்றிருந்தான். அவள் படுத்த படுக்கையாகக் கிடந்தாள். அவளது சமீபமாக, பரிதாபமான முகத்துடன் குழந்தை சரசு உட்கார்ந்திருந்தாள். மாதக் கடைசியான அத்தருணத்தில் அவனிடம் ஒரு செப்புக் காசு இல்லை. ஆகவே, உடைந்த மனத்துடன், அவன் வெகு சீக்கிரமாகவே வீட்டுக்குத் திரும்பி யிருந்தான்.

பார்வதி ஏதோ யோசிப்பவள் போல் சற்று நின்றாள். பின்னர், "உள்ளே எங்கேயோ இரண்டு ரூபாய் வைத்திருப்பதாக ஞாபகம்" என்று கூறிக் கொண்டே தாழ்வாரத்தின் அறைக்குள் நுழைந்தாள்.

அறைக்குள் நுழைந்த பார்வதி நாலா புறங்களிலுமிருந்த மாடப் பிறைகளுக்குள் கையை விட்டுத் துழாவினாள். ஆனால் 'சுர்' என்ற ஏமாற்றந்தான் அவளது இதயத்தைச்சுட்டது. அவளது சேமிப்புப் பொக்கிஷமும் எங்குமே காணப்பட வில்லை.

பார்வதி பரபரப்புடன் சமையற்கட்டை நோக்கி ஓடி வந்தாள்.

"சீதா, அந்த உள்ளுக்குள்ளே ஒரு செப்பு டப்பா வைச்சிருந்தேனே, அது எங்கே!" பார்வதியின் குரலில் கண்டிப்பின் அழுத்தம் பிரதிபலித்தது.

சீதா மருண்ட விழிகளுடன் நின்றாள்.

பார்வதி மீண்டும் தன் கேள்வியைச் சற்றே உரக்கக் கேட்கவும், சீதா, "வந்து—வந்து...... நீ கூட என் மூஞ்சிக்காகப் பவுடர் வைத்திருக்கியே, அது தானே...!" என்றாள்.

பார்வதியின் உத்வேகம் உச்ச நிலையை அடைந்தது. அவள், "ஹாம், அது தான்!" என்றாள் அழுத்தத்துடன்.



அடுத்த கணம் சீதா, "ஓ! நான் தான் அதை எடுத்தேன்" என்றாள் சாவதானத்துடன்.

பார்வதி பொருமியபடியே தலையில் அடித்துக் கொண்டாள். "நீ ஏன் அதை எடுத்தே!" கேள்வியில் ஆவேசம் பிரதிபலித்தது.

"இல்லேம்மா, நம்ம சரசு இருக்கா பாரு..." என்று தொடர்ந்தவள், பார்வதியின் விழிகளைக் கண்டதும் நிறுத்தி விட்டாள்.

பார்வதி அவசரமாக, "உம், சொல்லு! என்ன நிறுத்தி விட்டாய்!" என்றாள்.

"பாவம்! சரசுவுக்குப் பவுடரே இல்லையாம். அவப்பாதான் செத்துப் போயிட்டாரே! நான்தான் அதை அவளுக்குக் கொடுத்தேம்மா" என்ற செய்திகளில் வெள்ளையுள்ளம் பிரகாசித்தது.

"ஏண்டி, அவள் எப்போ இங்கே வந்தாள்!"

"நீ மத்தியானம் இந்த உள்ளே தூங்கிக் கொண்டிருந்தாயே, அப்போ!" என்றாள்.

பார்வதி காளியின் சொரூபமாக மாறி விட்டாள். ஆனால் அவளது சக்தியின் கொடுமை பிரதிபலிப்பதற்குத் தடையாக நடராஜன் அங்கு தோன்றினான். இவ்வளவு நேரமாக நடந்திருந்த சம்பாஷணைகளின் மூலம் அவன் விஷயங்களை ஒருவாறு அறிந்தான்.

நடராஜன் சீதாவை அணைத்தபடியே, "ஏன் பதறுகிறாய்! இப்பொழுது என்ன நடந்து விட்டது!" என்றான் பார்வதியை நோக்கி.

பார்வதியின் விழிகள் நீரருவியாகி விட்டன. இனி ஒளிப்பதிலும் மறைப்பதிலும் என்ன பயன்! நெடுங் குரலுடன் நடந்தவற்றை அவள் பொரிந்து தள்ளினாள்.

நடராஜன் அலட்சியத்துடன் அவளை நோக்கி, "முப்பது ரூபாய் தானே இருந்தது! இதற்கா இவ்வளவு பிரமாதம்! ஹும்! என் மதனியின் குணத்துக்கு முப்பதென்ன! முப்பது லட்சம் கொடுத்தாலும் ஈடாகாது!" என்றான்.

"ஆமாம்! அதையும் கொடுக்கலாம்! அவள் பெற்ற பெண்ணின் திருட்டுக் குணத்துக்கு அறுபது லட்சமும் கொடுக்கலாம்!"

"ஏன், அந்தக் குழந்தையின் மீது என்ன பிசகாம்! உன் பெண் எடுத்துக் கொடுத்த பின்னர்தானே அவளும் வாங்கிக் கொண்டு சென்றாள்!"

அவள் இடைமறித்தாள்: "போதும் நிறுத்துங்கள்! அது மகா நீசம்!"

நடராஜன் தன் விழிகளின் மூலம் கனலை உதிர்த்து விட்டு, சீதாவைத் தூக்கிக்கொண்டு முன்கட்டுக்கு நடந்தான். பார்வதியும் அவனைத் தொடர்ந்து வந்தாள்.

**வா**சற்புறத்தின் கதவு ஓசைப்பட்டது. "சித்தி, சித்தி!" இவ்வாறு கூறிய படியே சரசு ஓடி வந்து கொண்டிருந்தாள். "சித்தி, இதோ பாரு, சித்தி! இந்த டப்பியை யெடுத்து சீதா என் கிட்டே கொடுத்தாள். இதுலே பவுடரில்லியே, நிறையப் பணம்னா இருக்கு. இதோ பாரு!" என்று சொல்லிக் கொண்டே சரசு தன் கையிலிருந்த சிவப்பு டப்பியை அவளிடம் நீட்டினாள்.

இமைப்பொழுதில் பார்வதி தன் விழிகளையும், செவிகளையும் நம்பாமல் பிரமித்தாள். நடராஜனோ, ஓடிச் சரசுவைத் தூக்கி மார்புற அணைத்துக் கொண்டான்.

**மா**லையில் பவுடர் டப்பியுடன் வீட்டையடைந்த சரசுவின் உள்ளம் அளப்பரிய பெருமையைக் கொண்டிருந்தது. ஆனால், தாயின் கோபத்துக்கு அஞ்சியே, அவள் அதை ஒரு மறைவான இடத்தில் பதுக்கி வைத்திருந்தாள். வெகு நேரத்துக்குப் பின், அதைத் திறந்து அதனுள்ளிருக்கும் மணம் நிறைந்த மாவைப் பூசிக்கொள்ள வேண்டுமென்ற அவா அவள் மனத்தைத் தூண்டிற்று. எவ்வளவோ முயன்றும் அச்சிறு கரங்களினால், அதைத் திறக்கவே முடியவில்லை. கடைசி முயற்சியாக அவள் அதை ஒரு கல்லின்மீது வைத்துத் தட்டினாள். அதன் பின்னரே, அதன் பிணைப்பு விடுபட்டு, அதிலிருந்த நாணயங்கள் மேலிருந்த பஞ்சையும் நீக்கிக்கொண்டு கீழே கொட்டின.

சரசு திடுக்குற்று நின்றாள். அவள் கண்டறிந்திராத அவ்வளவு நாணயங்களும் அக்குழந்தையுள்ளத்திலும் எத்தகைய பயங்கரத்தை யளித்தனவோ! நல்ல வேளையாக, இவையெல்லாம், கூடத்தில் படுத்திருந்த அவளது தாய்க்குத் தெரியாது. சரசு மீண்டும் அவற்றைப் பொறுக்கி டப்பியினுள்ளேயே போட்டு எடுத்துக் கொண்டு ஓடி வந்தாள்.

நடராஜன் சரசுவின் முதுகை வருடிய படியே, "சரசு, நீ அந்தப் பணத்தை யெல்லாம் அம்மாகிட்டேயே கொடுக்கிறதுக்கு என்ன!" என்றான் இளகிய உள்ளத்துடன். அவனது பரிவு குழந்தையின் உள்ளத்துக்குப் பரீட்சை நடத்துவதாகவே யிருந்தது!

சரசு அவனது பிணைப்பினின்றும் திடுக்குற்றபடி யெழுந்து, "ஐயையோ! அம்மா அடிச்சுப் பிடுவளே! பணத்தை யெல்லாம் எடுத்தால் சுவாமி கண்ணைக் குத்திப்பிடுவர்னு அம்மா சொல்லி யிருக்காளே!" என்றாள். அவளது குரலொலியும், சிறு விழிகளும் அத்தண்டனையின் பயங்கரத்தை அறிவுறுத்தின!

அடுத்த கணம், நடராஜன் தன் கண்களில் சேர்ந்த ஆனந்த பாஷ்பத்தைக் குழந்தையின் முகத்தில் உதிர்த்தான்.

"சரசு, சரசு! இங்கே வா!" என்ற பரபரப்பான குரலை விடுத்த வண்ணம் தன் இரு கரங்களையும் நீட்டினாள் பார்வதி.

சரசு களங்கமற்றுச் சித்தியினிடம் ஓடி வந்தாள். பார்வதி அவளைத் தன் உடலும், உள்ளமும் உருகத் தழுவிக் கண்ணீர் சொரிந்தாள். அவளது ஒரே நிமிஷச் சிந்தனை, அவளது அகந்தை யுள்ளத்துக்கும் அவ்விரு குழந்தைகளின் மாசற்ற உள்ளங்களுக்கும் இடையே உள்ள தாரதம்மியங்களை எடை போட்டு விளக்கி விட்டது.

பார்வதி சரசுவை இடுப்பிலேற்றிக் கொண்டு, ஆவேசம் கொண்டவள் போல் எழுந்தாள். "போய் வண்டி கொண்டு வாருங்கள், நான் மதனியை இங்கு அழைத்து வரவேண்டும்!" என்றாள். அவளது குரல் கணவனுக்கு ஆக்ஞை விடுவது போன்றிருந்தது. ஆனால் மூன்றாண்டுகளாக அவள் உள்ளத்தில் குடியிருந்த அழுக்காறு வெளியேறி, தூய்மை நிறைந்திருந்தது!




'அழுகை... நிம்மதியின்மை... சந்தோஷமற்ற குழந்தை! அவனைத் தேற்றுவதில் அவன் தாய் களைத்து இளைத்தாள் — இரவில் அவளுக்கு தூக்கமேயில்லை — பகலில் ஓய்வு இல்லை.





கடைசியாக சந்தோஷத்துடனும் ஆரோக்கியமாயுமிருக்கும் சில குழந்தைகளின் தாய்மார்களாகிய தன் சிநேகிதிகளின் யோசனையைக் கேட்டாள். அவர்கள் யாவரும் ஒரே முகமாக 'க்ளாக்ஸோ'வையே தான் சிபாரிசு செய்தார்கள்.

குழந்தைகளின் எலும்பும் பற்களும் உறுதியாய் வளர 'விடமின் டி'யும், ரத்தம் வளம் பெற இரும்பு சத்தும் கலக்கப்பட்ட சுத்தமான புஷ்டியூட்டும் பால்-உணவு ஆகிய 'க்ளாக்ஸோ'வை தன் குழந்தைக்கும் கொடுக்க ஆரம்பித்தாள்.






இப்பொழுது அவனைப் பாருங்கள்! அவனுக்கு ஒரே ஆனந்தம்! அவனுடைய சந்தோஷத்துக்கு காரணம் அவன் தேக ஆரோக்கியம், தவிர ஆகாரம் நன்கு ஊட்டப்பட்டிருப்பதே-'க்ளாக்ஸோ'வுக்கு நன்றி.

**Glaxo**

'க்ளாக்ஸோ'-குழந்தைகளின் மிகச் சுத்தமான பால்-உணவு

D-27

# சுபிட்சப் பாதையில்



கோவை ஜில்லா சமுதாய நல அபிவிருத்திப் பிரதேசங்களுக்கு நல்வளம் நல்கும் கீழ்பவானியின் முக்கியக் கால்வாய்.

என் பிள்ளைப் பிராயத்தில் எனக்குக் கிராமங்களைப் பற்றி எதுவுமே தெரியாது. நெல் பயிரையே பார்த்ததில்லை. முதன் முதலில் என் தகப்பனாருடன் கிராமத்துக்குப் போய், பொன்னிறமாகத் தலைசாய்ந்து அறுவடைக்குத் தயாராக இருந்த நெற்கதிர்களைக் கண்டதும், "அப்பா! இதெல்லாம் என்ன, அப்பா!" என்று கேட்டேன் நான்.

என் தகப்பனார், "இதுதான் நெற்பயிர். நெல்லிலிருந்துதான் நமக்கு அரிசி கிடைக்கிறது" என்று விளக்கினார்.

உடனே நான், "ஏன் அப்பா, இவ்வளவு சிரமப்பட்டுப் பயிர் செய்து இவர்கள் அவதிப்படுகிறார்கள்! அரிசி வேண்டுமானால் மூட்டை மூட்டையாகக் கடையில் வாங்கிக் கொள்ளலாமே!" என்றேன் நான்.

என் தகப்பனார் என் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல் விழித்தார்.

எனக்கு வயது வந்து விவரம் தெரிந்த பின்பும்கூடக் கிராம வாழ்க்கையைப் பற்றியும், கிராமவாசிகளைப் பற்றியும் தெரிந்து கொள்ள இதுவரையில் எனக்குச் சந்தர்ப்பமே கிட்டவில்லை. நான் பட்டணத்திலேயே பிறந்து பட்டணத்திலேயே வாழ்ந்தவன்.

**சோமாஸ்**

பட்டணத்துப் பிரகிருதிகளைப் பற்றிச் சொல்ல வேண்டுமானால் எத்தனையோ சொல்லலாம். அதில் முக்கியமாக ஒன்று கூற வேண்டும். பத்துப் பதினைந்து வருஷ காலமாக ஒரு பேட்டையில் வசித்து வருபவர் தம் பக்கத்து வீட்டில் குடியிருப்பவர் யார், அவருக்கு என்ன வேலை என்பதைப் பற்றியெல்லாம் தெரிந்து கொள்ள விரும்புவதே கிடையாது. அவரவர் பாடு அவரவருக்கு என்கிற மாதிரியில் எல்லாக் காரியங்களும் நடக்கின்றன. கிராமங்களில் அப்படியில்லை. ஒருவரை யொருவர் தெரிந்து கொண்டு ஒருவருக்கொருவர் ஆதரவாயிருக்கும் நல்ல பண்பு அங்கு உருவாக இடம் இருக்கிறது.

கிராமங்கள் சுபிட்சமாய் இருந்தால்தான் நகரங்கள் சுபிட்சமாயிருக்க முடியும். கிராமங்களைப் புறக்கணித்து விட்டு, கிராம மக்களின் நல் வாழ்வை அலட்சியம் செய்து நகரங்களைப் பற்றியே நினைவில் கொண்டு செய்யப்படும் எந்த அபிவிருத்தி முயற்சியும் பலன் தராது. கிராமங்களில் சுபிட்சம் ஏற்படுவதற்கு, விவசாயத்தை வளர்த்தால் மட்டும் போதாது. கிராமக் கைத் தொழில்களுக்கு ஆதரவு அளிக்க முன் வரவேண்டும்.

மேற் கூறியவைகளை யெல்லாம் நான் புத்தகங்களில் படித்திருக்கிறேன்; மேடைப் பிரசங்கங்களில் கேட்டிருக்கிறேன். ஆனால் நேருக்கு நேர் கிராமங்களுக்குச் சென்று பார்வையிடும் வாய்ப்பு எனக்கு இது வரையில் கிட்டியதில்லை. கிராமப் புனருத்தாரணம் என்னும் வார்த்தையைப் பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். மேற்படி புனருத்தாரணத்தைப் பற்றி எனக்கு வெகு நாட்கள் வரையில் எதுவும் தெரியாது.

ஆனால் ஒன்று மாத்திரம் தெரியும். 'கிராமங்களிலும் மின்சாரம், கிராமங்களிலும் நல்ல சாலைகள், கிராமங்களிலும் உயர்நிலைப் பள்ளிகள், கிராமங்களிலும் ஆஸ்பத்திரிகள், கிராம வாசிகளுக்கும் பாங்கி வசதிகள் இப்படி யெல்லாம் ஏற்பட்டு விடுமானால் பிறகு கிராமங்களுக்கும் பட்டணங்களுக்கும் வித்தியாசம் என்ன இருக்கிறது!' என்று பல முறை எண்ணியிருக்கிறேன். இந்த மாதிரி அடிப்படை எண்ணங்களுடன் நான் சில சமயங்களில் கிராமத்துக்குப் போயிருக்கிறேன். என்னால் கிராமவாசியின் வாழ்க்கைத் தேவைகளை எப்படிப் புரிந்து கொள்ள முடியும்!



மாலம்புழை நீர்த்தேக்கத்தின் மேல் ஜான்ஸி ராணியின் சிலைக்கு அருகில் நிற்கும் சென்னைப் பத்திரிகையாளர் குழுவின் குதூகலம்.

இந்த நிலையில், கிராமங்களைப் பற்றி நன்றாய் அறிந்து கொள்ள எனக்கு ஓர் அரிய வாய்ப்புக் கிடைத்தால் எனக்குச் சந்தோஷமாயிருக்காதா! சென்னை சர்க்கார் செய்தி, விளம்பர இலாகா ஏற்பாடு செய்திருந்த பத்திரிகையாளர் சுற்றுப் பிரயாணக் கோஷ்டியைப் பற்றி ஆசிரியர் திரு சோமு அவர்கள் என்னிடம் சொன்னதும் இந்த வாய்ப்பு எதிர்பாராத விதமாகக் கிடைத்ததை எண்ணி மகிழ்ச்சி அடைந்தேன். சென்னை சர்க்கார், வெளி ஜில்லாக்களில், முக்கியமாக, கிராமப் பகுதிகளில் சமுதாய நலத் திட்டங்களை எவ்வாறு நிறைவேற்றியிருக்கிறார்கள் என்பதைப் பார்வையிடப் பத்திரிகையாளர்களை அழைத்திருந்தார்கள்.

எங்கள் பிரயாணம் 3-2-56 அன்று நீலகிரி எக்ஸ்பிரஸில் துவங்கியது.

ரயில் ஈரோடு ஜங்ஷனில் நின்றதும் சர்க்கார் அதிகாரிகள் எங்களுக்கு நல்வரவு கூறித் தயாரா யிருந்த ராணுவ ஜீப் கார்களில் எங்களை ஏற்றி ப்ராஜெக்ட் ஹவுஸுக்கு அழைத்துச் சென்றார்கள். அது சகல நவீன வசதிகளோடும் கூடிய விருந்தினர் இல்லம். அதில் தங்கிக் காப்பி பருகி இளைப்பாறிய பிறகு, நாங்கள் கிராமப் பிரவேசம் துவங்கினோம். கிராமப் பிரதேசங்களில் புகுந்த பிறகுதான், கிராமச் சூழ்நிலையை என்னால் உணர முடிந்தது. பட்டணத்து மனிதர்களால் பகுத்து உணர முடியாத பல தொழில்கள் கிராமங்களில் இருக்கின்றன. அவற்றை அழிய விடாமல் புத்துயிர் ஊட்டுவது நம் கடமை என்பதும் என் உள்ளத்தில் வேரூன்றலாயிற்று. கிராமத்தில் உள்ள ஒவ்வொன்றும் ஆச்சரியமான எளிய சாதனம். மண் பாண்டம், அதைத் தயார் செய்யும் சக்கரம், கொல்லர் உலை, துருத்தி, எண்ணெய் ஆட்டும் செக்கு, அதைச் சுற்றி வரும் மாடுகள், கவலை ஏற்றம் இழுக்கும் மாடுகள், உணவுக்கு அடுத்தபடி மனிதனுக்கு இன்றியமையாத பொருளான உடையைத் தயாரித்துத் தரும் கைத்தறி—ஆகியவைகள் யாவும் நமது கிராமக் கைத்தொழில் சாதனங்கள். நவீன முறையில் இவற்றின் சக்தியைப் பெருக்கிக் கிராமங்களில் தொழில் வளம் பெருகச் செய்வது ஒவ்வொருவருடைய கடமையு மாகும். கிராமம் அழிந்து போனால் நகரம் அழிந்தமாதிரிதான். நகரவாசிகளாகிய நம்முடைய சுகவாழ்வுக்காகக் கிராமவாசிகள் உழைக்கும் உழைப்பைப் பார்த்தால் எப்பேர்ப்பட்டவனுடைய மனமும் உருகாமலிராது.

ஈரோடு, கோபி தாலுக்காக்களில் நான் பார்வையிட்ட சமுதாய நல அபிவிருத்தித் திட்டங்களைப் பற்றிக் கூறுவதற்கு முன் மேற்படி திட்டத்தை விளக்க வேண்டியது அவசியம்.

நாங்கள் சென்னையில் ஏறிய நீலகிரி எக்ஸ்பிரஸ் வண்டியில் ஒரு முதல் வகுப்புப் பெட்டி முழுவதும் எங்களுக்காக ரிஸர்வ் செய்யப்பட்டிருந்தது. 'ப்ரெஸ் பார்ட்டி, கம்யூனிட்டி ப்ராஜெக்ட் டூர்' என்று எழுதியிருந்தது. அதைக் கூர்ந்து பார்த்த ஒருவர் என்னிடம் வந்து, "ஏன் ஸார்! நீங்கள் கம்யூனிஸ்ட் பார்ட்டியைச் சேர்ந்தவரா! உங்களையெல்லாம் எந்த ஊருக்குக் கொண்டுபோகிறீர்கள்!" என்று அதிசயத்தோடு கேட்டார். வண்டி புறப்படும் தருணமாகி விட்டபடியினால் நான் அவருடைய தவற்றைத் திருத்தி விளக்க அவகாசம் இல்லை. ஆனால் அவர் கேட்டதில் தவறொன்றும் இல்லை. கிரிக்கெட் மாட்சைப் பற்றி ஒன்றுமே தெரியாதவர்கள்கூட எல்லாம் தெரிந்தவர் மாதிரி நடக்க விரும்பும் பொழுது, அவர் கேட்டதில் தவறென்ன இருக்கிறது!

சமுதாய நலத்திட்டம் (Community Project) என்றால் என்ன என்று பார்ப்போம்.

கிராமவாசிகளிடையே ஒரு புதிய கருத்தும் நாட்டமும் ஏற்படச் செய்து அதன் பயனாக அவர்கள் தங்கள் சொந்த முயற்சியினாலும், அரசாங்க உதவியினாலும் தங்கள் வாழ்க்கை நிலைமைகளை அபிவிருத்தி செய்யக் கூடிய சூழ்நிலைகளை உண்டாக்கச் செய்வதுதான் சமுதாய நலத் திட்டம். விவசாயம், பிராணி வளர்ப்பு, நிலச் சீர்திருத்தம், நீர்ப்பாசனம், கல்வி, கலைகள், தொழில்கள், குடிசைத் தொழில்கள், கூட்டுறவு இயக்கம், போக்கு வரவு வசதி முதலிய எல்லா அம்சங்களிலும் அபிவிருத்தி ஏற்பட வேண்டும். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால், சமுதாய நலத்திட்டம் பொது மக்களுக்காக, பொது மக்களைக் கொண்டு நடத்தப்படும் பொது மக்களின் திட்டம். பொருள் கொடுக்க இயலாதவர்கள் தங்கள் உடல் உழைப்பைக் கொடுக்கலாம். அதாவது 'சிரமதானம்' செய்யலாம். நாங்கள் எங்கள் பிரயாணத்தில் கண்ட சில இடங்களில் சர்க்கார் மக்களின் உடல் உழைப்பை அபிவிருத்தி வேலைகளுக்குப் பயன்படுத்திக் கொண்டு அதற்குக் கூலியும் கொடுத்து உதவி யிருக்கின்றனர்.



PLATO
REGD
உறுதி அவசியம்
கவர்ச்சியும், உறுதியும் அவசியமான தோற்றமாகும். ப்ளாடோ 66-ல் இந்த இரண்டு குணங்களும் உள்ளன. அதன் அமைப்பு கவர்ச்சியையும், அதன் நீடிக்ககூடிய குணங்கள் திருப்தியையும் அளிக்கின்றன.
வெவ்வேறு விதமாக மை நிரப்பும் விசைகளுடன் கிடைக்கிறது. ரெகுலர், ஸெல்ப் ஓடோமாடிக்
Plato 66
இன்றே ஒரு ப்ளாட்டோவை வாங்குங்கள்.
ரு. 4 தான்.
ஒரு மாத்ரே தயாரிப்பு
ஏக விநியோகஸ்தர்கள்:
தி பௌன்ட் பவுன்டன் பேன் டிப்போ.
79, தேவ்கரன் மான்ஷன்
பிரின்ஸஸ் ஸ்ட்ரீட்
பம்பாய்-2
SHILPI-MP-316 TAM.

"நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர்
நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்
அதுவும் அற்றவர் வாய்ச்சொல் அருளீர்
ஆண்மையாளர் உழைப்பினை நல்கீர்
... ... ... ... ... ... ... ...
எதுவும் நல்கியிங் கெவ்வகை யானும்
இப்பெருந்தொழில் நாட்டுவம் வாரீர்"

என்ற மகாகவி பாரதியின் கவிதையை நினைவு படுத்திக் கொண்டால் சமுதாய நலத் திட்டத்தின் தத்துவம் நன்கு விளங்கும்.

இவ்வாறு உயர்ந்த நோக்கத்துடன் திட்டமிடப்பட்டிருக்கும் சமுதாய நல அபிவிருத்தி விவரங்களைக் கொஞ்சம் பார்வையிடுவோம். உங்களுக்கும் தமிழகத்தின் அபிவிருத்தித் திட்டங்களைக் காண ஆவல் இருக்கும் என்று நம்புகிறேன். சரி, இனிப் பிரயாணத்தைத் தொடங்குவோம்.

ஈரோடு தாலுகாவில் கவுந்தப்பாடி கிராமத்தில் நடைபெற்றிருக்கும் அபிவிருத்திகளைப் பார்வையிடுவோம்.

மிருக வைத்தியசாலை இங்கே கட்டப்பட்டிருக்கிறது. வைத்தியசாலைக் கட்டடத்துக்கு பூமிதானம் செய்தவர் கவுந்தப்பாடி பஞ்சாயத்து போர்டு தலைவர் ஸ்ரீ வி. என். பழனிசாமிக் கௌண்டர். பொது மக்கள் ரூ. 7,500 கொடுத்துக் கட்டடம் எழுப்புவதற்கு உதவி செய்திருக்கின்றனர்.

கிராம மக்கள் தங்கள் பணத்தையும் உழைப்பையும் கொடுத்துத் தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுவதால் அவர்களுக்கு, மேற்கூறிய அபிவிருத்திகள் தங்களுக்கே உரியவை என்ற எண்ணம் ஏற்பட்டு, கிராமப் பொது நலனில் அக்கறையும் ஆர்வமும் அதிகமாகின்றன.

கவுந்தப்பாடியில் பசுக்களைச் செயற்கை முறையில் கருத்தரிக்கச் செய்யும் சாதனங்களும் இடம் பெற்றிருக்கின்றன. இரண்டு பஞ்சாப் எருமைக் கடாக்களும், இரண்டு காங்கேயம் காளைகளும் மேற்படி சேவையில் ஈடுபடுத்தப்படுகின்றன!

விவசாயிகளுக்கு வெள்ளாடுகள் வழங்கப்படுகின்றன.

இங்கு நல்ல முறையில் கோழிப் பண்ணையொன்று திறக்கப்பட்டிருக்கிறது. 'ரோட் ஐலண்டு சிவப்புக் கோழி' என்ற சிறப்பு வாய்ந்த கோழியினம் முட்டை உற்பத்திக்கும், உயர் சாதிக் கோழிகளின் இனப் பெருக்கத்துக்கும் பெரிதும் உபயோகமா யிருக்கின்றன. மேற்படி உயர்குலக் கோழிகள் பத்து இருக்கின்றன. கோழிகள் ஈன்ற முட்டைகளைச் செயற்கை முறையில் அடைகாக்கும் சாதனமும் (Incubator) இருக்கின்றது. இந்தச் செயற்கை முறையின் உபயோகம் என்னவென்றால், இயற்கை முறையை விட அதிக பட்ச முட்டைகளைப் பொரிக்கலாம் என்பதுடன், எல்லா முட்டைகளையும் வீணாகாமல் பொரிக்கலாம் என்பதுதான்.

ஆனால் செயற்கை எத்தனை பலத்தோடு இயற்கையுடன் போட்டி யிட்டாலும், முக்கியமான விஷயங்களில் இயற்கைக்கு அது அடி



பவானி சாகரத்துக்கு அருகில் புதுப்பீர்க்கடவு என்னும் கிராமத்தில் குடிநீர் வசதி செய்து தரப்படுகிறது. கிராம மக்கள் குழாய் போடும் வேலையில் ஈடுபட்டிருக்கின்றனர்.

பணிய வேண்டி யிருக்கிறது.[2] ஒரே அளவிலே உஷ்ணத்தைக் கட்டுப்படுத்தி யிருக்கிறார்கள், அந்த நவீன யந்திரத்தில். நூற்றிருபத்தொரு முட்டைகளை ஒரே சமயத்தில் அதில் குஞ்சு பொரிக்கலாம். ஆனால் இயற்கையாகக் கோழி அடை காக்கும் அவ்வளவு நேரம் யந்திரமும் அடை காத்தாக வேண்டும். அதாவது இருபத்தொரு நாட்கள், இடையறாத ஒரே மாதிரி உஷ்ணத்தில் இருந்தால்தான் முட்டைகள் பொரிகின்றன.

## தீமையில் நன்மை

கவுந்தப்பாடி வேலைத் திட்டங்களைப் பார்வையிட்டதும் நாங்கள் ஆவாரங் காட்டூர் என்னும் கிராமத்துக்குச் சென்றோம்.

தீமையிலிருந்தும் நன்மை விளைவதுண்டு என்பதற்கு அந்தக் கிராமத்தில் நிதரிசனமான உதாரணம் பார்த்தேன்.

**ப**ல்லாயிரக் கணக்கான தரிசு நிலங்களைப் பண்படுத்திப் பயிரிடுவதற்கு வகை தேடிக் கொடுத்த பவானி சாகரத்தின் கால்வாய்களிலிருந்து பெருகும் கசிவு நீரினால் ஆவாரங்காட்டூர்ச் சேரியிலுள்ள வீடுகள் அழிந்து விட்டன. அந்தச் சேரியில் வாழ்ந்த ஹரிஜன மக்கள் வீடு வாசல்களை விட்டு வேறிடத்துக்கு ஓடிக் குடி புகுந்தனர். அவர்கள் குடி புகுந்திருக்கும் வீடுகளை வீடுகள் என்று குறிப்பிடுவது தவறு. பொந்துகள் அல்லது புற்றுக்கள் என்றுதான் குறிப்பிட வேண்டும். ஒரு சிறிய வீட்டுக்குள் எட்டுப் பேர்கள், பத்துப் பேர்கள் பதுங்கி வாழும் நிலையைக் கண்கொண்டு பார்க்க முடிய வில்லை.

சர்க்கார் அவர்களுக்கு நல்ல உதவியைச் செய்திருக்கிறது. மேற்படி வாய்க்கால் கசிவு நீரினால் வீடிழந்த நாற்பத்தாறு ஹரிஜனக் குடும்பங்களுக்குப் புது இல்லங்கள் அமைத்துத் தர முன் வந்து ஆறு ஏக்கரா நிலம் வழங்கி யிருக்கிறது. அந்த இடத்தில் புது இல்லங்கள் கட்டப்பட்டு வருகின்றன. ஒவ்வொரு வீட்டுக்கும் சமுதாய நலத்திட்ட நிதியிலிருந்து ரூ. 250 கடனாக வழங்கப்படுகிறது; சர்க்கார் ஒவ்வொரு வீட்டுக்கும் சகாய நிதியாக ரூ. 100 வழங்குகிறது. இந்தத் தொகைக்கு மேல் தேவைப்படும் பணத்துக்கு, கிராம மக்கள் வீடு கட்டத் தேவைப்படும்



ஒரு காலத்தில் வறண்டு கிடந்த இடம் பவானி சாகரத்தின் நீர்வளத்தால் இன்று செழிப்பான புகையிலையைத் தருகிறது.

பொருள்களாகவும், பணமாகவும் கொடுத்து உதவி யிருக்கின்றனர்.

மேற்படி கீழ் பவானி வாய்க்கால்களில், கசிவு நீர் சிறு வாய்க்கால்களாகப் பெருகிச் சேரிகளை அழிக்கவில்லையென்றால், சேரிவாழ் மக்களுக்குச் சர்க்கார் புது வீடுகள் கட்டித்தர எக்காலும் முன் வந்திருக்கப் போவதில்லை. ஆகவே, கசிவு நீர்ப் பெருக்கத்தினால் ஏற்பட்ட நாச வேலைகளைக் கண்டு மனங் கசிவதைவிட, அதை வாழ்த்துவதுதான் நியாயம் என்று எனக்குத் தோன்றியது.

மந்தரை, கைகேயியின் மனத்தைக் கலைக்கவில்லையென்றால், ஸ்ரீராமன் காட்டுக்குப் போயிருக்க மாட்டார்; ஸ்ரீராமன் காட்டுக்குப் போகவில்லையென்றால், அவருடைய பெரும் புகழுக்கு ஏதுவான வீரமும் தீரமும் மக்களுக்குத் தெரிந்திருக்க வழியேயில்லை.

ஆவாரங்காட்டூர் ஹரிஜனங்கள் எங்களையெல்லாம் கண்டதும் தங்கள் கஷ்டங்களையெல்லாம் கூறி, பாழடைந்த வீடுகளைக் காட்டிக் கண்ணீர் உகுத்தனர். அவர்களுக்காகக் கட்டப்பட்டு வரும் புது வீடுகளையும் பார்வையிட்டு விட்டு, அங்கிருந்து புறப்பட்டோம். கருமாண்டி செல்லி பாளையம், சாமி கௌண்டன் பாளையம், நசியனூர் முதலிய கிராமங்களுக்குப் போனோம். கருமாண்டி செல்லிப் பாளையத்தில் பள்ளிக்கூடம், ரேடியோ, விளையாடும் இடம், நூல்நிலையம் முதலியன சமூதாய நலத்திட்ட நிதியின் உதவியினாலும், பொது மக்களின் உதவியினாலும் கட்டப்பட்டிருக்கின்றன. சாமி கௌண்டன் பாளையத்தில் ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. ஜனங்களின் ஒத்துழைப்பும், சமூதாய நலத்தின் ஒத்துழைப்பும் சேர்ந்திருக்கின்றன என்பது தான் இதில் குறிப்பிடத் தக்கது.

நசியனூர் கிராமத்தில், முன்னூற்று அறுபத்தாறு கெஜ தூரத்துக்குச் சிமெண்டில் சாக்கடைகள் கட்டப்பட்டிருக்கின்றன. மருத்துவ நிலையம் கட்டப்பட்டிருக்கிறது. விளையாடும் இடம் அமைக்கப்பட்டிருக்கிறது. உயர்தர ஆரம்பப் பள்ளிக்கூடம் ரூ. 14,000 செலவில் கட்டப்பட்டு வருகிறது. மாதர் சங்கத்தின் கட்டடம் உருவாகி வருகிறது. மேற்படி கட்டடங்களின் செலவுத் தொகையில் பாதியைக் கிராம மக்கள் மனமுவந்து கொடுத்திருக்கின்றனர் என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம். நசியனூர் கிராமத்தைச் சிறந்த கிராமமாக மதித்துச் சர்க்கார் ரூ. 1000 பரிசு கொடுத்திருக்கின்றனர்.

பவானிக்கு அருகில் கிராம சேவகர்களின் பயிற்சி முகாம் நிறுவப்பட்டிருக்கிறது. அங்கு நூற்றுக்கு மேற்பட்ட மாணவர்கள் பயிற்சி பெறுகின்றனர். மேற்படி பயிற்சி முகாமின் தலைவர் திரு ரமணியும், ஆசிரியர் திரு மெய்கண்டாரும் எங்களை வரவேற்று உபசரித்தனர். மாணவர்கள் தாங்கள் பெறும் பயிற்சி விவரங்களை விவரித்துப் பேசினர்.

பிறகு முருகன் ஸ்தலமாகிய சென்னி மலைக்குப் போனோம். பத்தாயிரம் ஜனத்தொகை கொண்ட அவ்வூரில், குடிதண்ணீர்க் கஷ்டம் தாங்க முடியாதது. ரூபாய் எழுபத்து நாலாயிரம் செலவில், 180 அடி ஆழம் வெட்டிக் கிணறு தோண்டி, ஜல விநியோகத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஜில்லா போர்டு நிதியிலிருந்தும் சமூதாய நலத்திட்ட நிதியிலிருந்தும் தாராளமாக இதற்கு நிதி வழங்கப்பட்டிருக்கிறது. ஜமக்காளம், துப்பட்டி முதலிய நெசவு வேலைகளுக்குச் சென்னிமலை பிரசித்தி பெற்ற ஊர்.

இப்படி நாங்கள் பார்வையிட்ட ஒவ்வொரு ஊரில் செய்யப்பட்டிருக்கும் அபிவிருத்தி வேலைகளையெல்லாம் சொல்லப் போகிறேனோ என்று பயப்பட வேண்டாம். ஜீப் காரில் ஏறிப் புழுதிப் புயலில் பிரயாணம் செய்து கொண்டு நாங்கள் பார்வையிட்ட பல கிராமங்களில் சிலவற்றையாவது நீங்கள் பார்க்க வேண்டாமா! அதற்காகவே சில கிராமங்களைப் பற்றிக் குறிப்பிட்டேன்.

ஈரோடு, கோபிசெட்டிப் பாளையம் தாலுகாக்களில் பல கிராமங்களைப் பார்வையிட்டோம். எல்லாக் கிராமங்களிலும் சமூதாய நலத் திட்ட அபிவிருத்திகளைக் கண்டோம். இந்த அபிவிருத்தித் திட்டத்தினால் ஏற்படும் முக்கிய நன்மை கிராமங்களில் பலருக்கு வேலை கிடைத்திருப்பதுதான். வேலையில்லாக் கொடுமை தலைவிரித்தாடும் இந்நாளில் பலருக்கு வேலை கிடைக்கிறது என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம் அல்லவா! பிராஜக்ட் ஆபீஸர்கள், பிளாக் அபிவிருத்தி ஆபீஸர்கள், சமூகக் கல்வி ஆர்கனைஸர்கள், உபாத்தியாயர்கள், விவசாய நிபுணர்கள், பிராணி வளர்ப்பு நிபுணர்கள், சுகாதார நிபுணர்கள், என்ஜினியரிங் நிபுணர்கள் இப்படிப் பல துறைகளில் பலருக்கு வேலை கிடைத்திருக்கிறது. சர்க்காரின் சமூதாய நலத் திட்ட அமைப்பைக் குறை கூற அதில் எவ்வளவோ தவறுகள் இருக்கலாம். ஆனால், அதில் மக்களுக்கும் சர்க்காருக்கும் சுமுகமான தொடர்பு ஏற்பட இடம் இருக்கிறது என்பதை யாரும் மறக்க முடியாது. கிராம மக்களுக்குப் பரஸ்பரம் நல்லெண்ணத்தையும் நல்லுறவையும் வளர்க்கும் ஒரு நல்ல திட்டம் என்பதையும் யாரும் மறுக்க மாட்டார்கள். ஆனால் அந்தத் திட்டம் சர்க்காரின் 'சிவப்பு நாடா' முறையில் சிக்கிப் பாழாகி விடாமல் காப்பது மக்கள் கடமை.

இதோ ஜீப் கார்கள் புழுதியைக் கிளப்பிக் கொண்டு பவானி சாகரத்தை நோக்கிப் புறப்பட்டு விட்டன.

(அடுத்த இதழில் முடியும்)

## இதுதான்

# காஸ்டரோமா

## ...ஒரு கூந்தல் டானிக்

## வேறு விதமானது....




காஸ்டரோமா வேறு விதமானது.. சம்பந்தம் வைத்துக்கொண்டிருக்கும் முன்னிலிருந்து விலகி நிற்கும் ரோஜா புஷ்பத்தைப்போல் இதர டானிக்குகளிடமிருந்து வேறுபட்டுள்ளது.

பகல், இரவு முழுவதிலும் தலையிலுள்ள கூந்தலை நறுமணத்தோடிருக்கச் செய்யும் பூவிதழ்-புதிய ப்ரெஞ்ச் வாசனைத் திரவியத்தை உடையதால் இது மற்றவைகளிடமிருந்து மாறுபட்டுள்ளது.

காஸ்டரோமா வெள்ளை எண்ணெய் கலப்பற்றது. வாசனை முற்றிலும் நன்கு அகற்றப்பட்டதும், கறைகளையோ அல்லது அழுக்கையோ ஏற்படுத்தாததும், எளிதில் கழுவி அகற்றக்கூடியதுமான ஆமணக்கெண்ணெய் தான் உபயோகிக்கப்பட்டிருக்கிறது.

காஸ்டரோமா கூந்தலை நீளமாகவும், பளபளப்பாகவும் வளர்க்கிறது.. பொடுகை அகற்றி கூந்தலை முற்றிலும் ஆரோக்யமாக இருக்கச் செய்கிறது.




தயாரிப்பவர்கள் :

**பஞ்நகர் ஆயில் அண்டு கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்,**

**தபால் பெட்டி 1611 - பம்பாய் 1.**

டிஸ்ட்ரிபியூட்டர்கள் :

ஸ்ரீ எஸ். தர்மராஜன், 40, காய்க்கர் புது தெரு, மதுரை
மெஸர்ஸ். கேனடர்ஸ், அவிநாசி, கோயமுத்தூர்
மாதவன் மெடிகல் ஸ்டோர்ஸ், செந்திட்டை, திருவனந்தபுரம்

# ஒரு தவளைக் கதை

வயலில் வரப்பின் பேரில் ஒரு தவளை தன் பாட்டுக்கு எதையும் பாராமல் சுகமாக யோசனை செய்து கொண்டிருந்தது. ஒரு பாம்பு அதன் பின்னால் வந்து அதை விழுங்கி விட்டது.

செத்துப் போன தவளை பிரம்மனிடம் சென்றது. அது ஒரு பாவமும் செய்யாத படியால் பிரம்மா அதை சந்தோஷமாக, "வா! குழந்தாய்!" என்று வரவேற்றான். "உனக்கு என்ன வேண்டும்? மறுபடி தவளையாகப் பிறக்க வேண்டுமா, அல்லது மனிதனாகப் பிறக்க விரும்புகிறாயா?" என்று கேட்டான்.

"பகவானே! நான் பாம்பாகப் பிறக்க விரும்புகிறேன்!" என்றது தவளை.

"சரி! போ! நல்ல புத்தி வந்ததும் திரும்பி வா!" என்றான் பிரம்மன்.

பாம்பின் மேல் அதற்குள்ள பயத்தினால், பாம்பாகி விட்டால் பிறகு பயமில்லை என்று நினைத்தது தவளை. இப்படி வரம் கேட்டுப் பெற்று மறுபடி வயலில் பாம்பாகி வந்து சேர்ந்தது.

ஒரு நாள் குடியானவனும் அவன் மகனும் கிராமத்திலிருந்து வயலுக்கு வந்து கொண்டிருந்தார்கள். பையன் பின்னால் வந்தான். தகப்பன் முன்னால் ஒரு தடி வைத்துக் கொண்டு நடந்தான்.

பாம்பைப் பார்த்ததும், "நில், முத்து சாமி!" என்று மகனுக்குச் சொல்லி விட்டு, பாம்பின் மேல் தடியால் ஒரு நல்ல அடி போட்டான். அது துள்ளிச் சுருண்டு புரண்டது. அடிமேல் அடி போட்டுக் கொன்றான்.

"நான் ஒன்றும் செய்ய வில்லை, என்பாட்டுக்கு மாலை வெய்யில் அனுபவித்துக் கொண்டிருந்தேன். என்னை அந்த மனிதன் அடித்து நசுக்கி இம்சை செய்து கொன்றான்" என்றது பாம்பு பிரம்மனிடம்.





"நீ தவளையாக இருந்தபோது பாம்பாக வேண்டும் என்றாய். இப்போது என்ன வேண்டுகிறாய்? நீ ஒரு பாவமும் செய்யவில்லை. கேள்!" என்றான் பிரம்மன்.

"நான் தடியாக வேண்டும். அதைத்தான் விரும்புகிறேன். அந்த மனிதனை அடித்துக் கொல்ல வேண்டும்" என்றது.

"குழந்தாய்! முதலில் மரமாகிப் பிறகு தடியாக வேண்டும். தடியாகவே பிறக்க முடியாது" என்றான் பிரம்மன்.

"சரி நான் வேப்ப மரமாக விரும்புகிறேன்" என்றது பாம்பு.

"நீ கேட்டது சரி. ஒரு தீமையும் செய்யாத வேப்ப மரமாவாய். போ" என்றான் பிரம்மன்.

வேப்பமரம் வளர்ந்தது. நன்றாக வளர்ந்தது. பூ கம கம வென்று பூத்தது. பிறகு நிறையக் காய்த்தது. ஊரில் சிறுமிகள் பழத்தைப் பொறுக்கி எடுத்துக் கொட்டையைச் செக்கில் போட்டு எண்ணெய் எடுக்கக் கொடுத்தார்கள்.

"ஐயோ! என் குழந்தைகளை இப்படிச் செக்கில் போட்டு இம்சிக்கிறார்களே" என்று அழுதது மரம். பிறகு துயரத்தை மறந்து மறுபடி பூத்தது. மறுபடி காய்த்தது. அந்தவருஷமும் கொட்டையை எடுத்துச் செக்கில் போட்டு ஆட்டினார்கள். மரம் கண்ணீர் விட்டு அழுதது.

இப்படியே பல ஆண்டுகள் வேப்பமரம் துயரத்தில் கழித்தது. பிறகு ஒரு நாள் குடியானவன் கோடாலி எடுத்துக் கொண்டு வந்தான். மரத்தை வெட்டித் தள்ளினான். அந்த இடத்தில் சோளம் விதைத்துப் பயிர் செய்யலாம் என்று குடியானவன் மரத்தை வெட்டிப் போட்டான். விறகுக்கும் குடிசை கட்டுவதற்கும் போக, ஒரு தடியும் செதுக்கி எடுத்துக் கொண்டான்.

தடி எடுத்துக் கொண்டு குடியானவன்—அவன் கொஞ்சம் முரடன்—எல்லாரையும் விரட்டிக் கொண்டிருந்தான்.

ஒரு நாள் ஒரு சண்டையில் தடியைக் கொண்டு ஒருவனை அடித்தான். அவன் பெரிய காயமடைந்து கச்சேரியில் வழக்குச் செய்தான். குடியானவனைத் தண்டித்து விட்டு சண்டையில் உபயோகித்த தடியைக் கொளுத்தி விட வேண்டும் என்று நீதிபதி உத்தரவிட்டார். தடி எரிந்து சாம்பலாய்ப் போய் விட்டது.

"எனக்கு மறு பிறப்பு வேண்டாம்!" என்றது தடி பிரம்மனிடம்.



ராஜாஜி

# கவர்ச்சியான போனஸ் விவரங்கள்:

வருஷம் ஒன்றுக்கு இன்ஷ்யூர் செய்யப்பட்ட ரூ. 1000/க்கு
முழு ஆயுள் ரூ. 18
எண்டோமெண்ட் ரூ. 16

மேலே குறிப்பிடப்பட்டுள்ள மிக கூடுதலான போனஸ் விவரங்கள்
கடந்த 31-12-54ல் முடிவடைந்த மூன்று வருஷங்களுக்கு வெளியிடப்பட்டவை

குறைவான பிரீமியங்கள்

கூடுதலான போனஸ் - பரிபூரண பாதுகாப்பு

உங்களது சகலவிதமான இன்ஷ்யூரன்ஸ் தேவைகளுக்கு:
ஆயுள், நெருப்பு, கப்பல், மோட்டார் மற்றும் இதர இன்ஷ்யூரன்ஸ் அலுவல்களுக்கு தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்:

## இந்தியன் மெர்க்கண்டைல்
### இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி, லிமிடெட்

14, நிக்கோல் ரோடு : பல்லார்ட் எஸ்டேட் : பம்பாய்-1

கிளை ஆபீஸ்கள்

| | | |
|---|---|---|
| 327, தம்பு செட்டித்தெரு<br>சென்னை | 15/57, பெரிய கடைத் தெரு<br>கோயமுத்தூர் | ஸ்ரீ கிருஷ்ண பில்டிங்<br>பந்தர், மங்களூர் |

---

# 'பிராங்கைடிஸினால் என் சுவாசப்பைகள் நெருப்பைப்போல் தகித்தன'

ஆனால் **பெப்ஸ்**

## அடைப்பைப்போக்கி, எரிச்சலையும் உடனே தணித்தது.






பெப்ஸ் தொண்டை மற்றும் மார்புவலி நிவாரண மாத்திரைகளில் சமன கூட்டி குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை சுவைக்கும் போதே, இந்த ரசங்கள் ஆவியாக மாறி, உங்கள் சுவாசத்துடன் தொண்டை, சுவாசக் குழாய் மூலமாக சுவாசப்பைகளுக்குச் செல்லும். ஆகவே கோளாறின் ஆரம்பஸ்தானத்திற்கே சென்று வேலை செய்கின்றன. அதனால்தான் பெப்ஸ் கைகண்ட ஔஷதமாயும், உலக பிரசித்தி பெற்றும் விளங்குகிறது. பெப்ஸ் இருமலை நிறுத்தி தொண்டை ரணத்தை சமனமாக்கி, கபத்தை உடைத்து, அடைப்பை நீக்குவதுடன் இன்புளூயன்ஸா மற்றும் பிராங்கைடிஸ் சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.

பெப்ஸ் தொண்டை, மார்பு வலி நிவாரண மாத்திரைகள் எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

**PEPS**

FPY-28-TAM

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்




## 34. ரமணி எங்கே?

அன்று அக்டோபர் இரண்டாம் தேதி. உலகமெங்கும் காந்தி ஜயந்தி கொண்டாடும் முக்கியமான தினம். பர்மாவிலும் பல இடங்களில் விசேஷமாகக் கொண்டாட ஏற்பாடு செய்திருந்தார்கள். தங்கள் வீட்டிலும் குழந்தைகளுடன் சேர்ந்து குதூகலமாகக் கொண்டாட ரமணி விரும்பினான்.

முதல்நாளே காமாட்சி அம்மாளிடம், "அம்மா, நாளைக்குச் சாயங்காலம் நான் குழந்தைகளுக்கெல்லாம் காந்திஜியின் வாழ்க்கையில் நடந்த நல்ல நல்ல சம்பவங்களையெல்லாம் எடுத்துச் சொல்லப் போகிறேன்" என்றான்.

அதற்குக் காமாட்சி அம்மாள், "ஆமாம், அப்படியே செய். நானும் கதை கேட்க வரும் குழந்தைகளுக்கு நல்ல நல்ல பட்சணங்களெல்லாம் செய்து கொடுக்கிறேன்" என்று சொல்லியிருந்தாள்.

காந்தி ஜயந்தியன்று மாலை குழந்தைகள் கூட்டம் கூட்டமாகக் கதை கேட்க வந்தார்கள். சில சிறு குழந்தைகள் தங்கள் பெற்றோர்களையும் துணைக்காக அழைத்து வந்திருந்தார்கள். மாலதியும் ரமணியும் முதலில் பட்சணங்களை வந்திருந்தவர்களுக்குக் கொடுத்தார்கள். பிறகு ரமணி, காந்தி கதையைக் கூற ஆரம்பித்தான். குழந்தைகள் அந்தக் கதைகளைக் கேட்டுப் பல நல்ல விஷயங்களைத் தெரிந்துகொண்டார்கள். பெரியவர்கள், "அடடா, எவ்வளவு அற்புதமாக இந்தப் பையன் எடுத்துச் சொல்கிறான்!" என்று ஆச்சரியப்பட்டார்கள்.

காந்தி கதை முடிந்ததும், 'கோமாளிக் குப்பன்' என்ற கதையைக் கடைசியாக ரமணி சொன்னான். அது அவனாகவே கற்பனை செய்த கதை. மிகவும் வேடிக்கையாக இருக்கும். அதைக் கேட்டு எல்லோரும் வயிறு குலுங்கச் சிரித்தார்கள்.

கதை முடிந்ததும் ஒரு பெரியவர், சிற்சபேசனைப் பார்த்து, "சார், உங்கள் பையன் அற்புதமாகக் கதை சொல்கிறான். 'கோமாளிக் குப்பன்' கதை அபாரம்! அதை எழுதி ஏதாவது ஒரு பத்திரிகைக்கு அனுப்பினால், நிச்சயம் வெளியிடுவார்கள். பல்லாயிரக் கணக்கான குழந்தைகள் படித்து ஆனந்தமடைவார்கள்" என்று கூறிவிட்டு, ரமணியிடம், "என்ன தம்பி, எழுதி அனுப்புகிறாயா?" என்று கேட்டார்.

"ஏதோ எழுதிப்பார்க்கிறேன்" என்று அடக்கமாகப் பதிலளித்தான் ரமணி.

அன்று இரவு சாப்பாட்டுக்குப் பிறகு ரமணியுடன் காமாட்சி அம்மாள் பேசிக் கொண்டிருந்தாள். அப்போது, "ரமணி! நீ சொல்லுகிற கதையெல்லாமே நன்றாக இருக்கிறதென்று எல்லோருமே சொல்லுகிறார்கள்" என்றான் காமாட்சி அம்மாள். அதற்கு ரமணி, "என் கதையைக் காட்டிலும் நீங்கள் செய்து கொடுத்த பட்சணங்கள்தான் பிரமாதமாம்! எல்லோருமே அப்படித்தான் சொல்லுகிறார்கள்" என்றான்.

"இல்லை, இல்லை. பட்சணத்தைக் காட்டிலும் கதைதான் சுவையாயிருந்திருக்கும்" என்றான் காமாட்சி அம்மாள்.

"இருக்கவே இருக்காது. பட்சணம்தான் ரொம்பவும் சுவையாயிருந்திருக்கும்" என்றான் ரமணி.

இப்படியே அவர்கள் பேசிக் கொண்டிருக்கும்போது, திடீரென்று காமாட்சி அம்மாளின் முகத்தில் ஏதோ மாறுதல் தெரிந்தது. அப்படியே 'தொப்'பென்று தரையில் சாய்ந்து விட்டாள். முகம் வெளுத்து விட்டது; கண்கள் மூடிக் கொண்டன. பற்கள் கிட்டித்து விட்டன. இதைப் பக்கத்திலிருந்த ரமணி பார்த்ததும் திடுக்கிட்டான். "ஆ, அம்மா!" என்று கதறினான். சத்தத்தைக் கேட்டு மாடியிலிருந்த சிற்சபேசனும், மாலதியும் கீழே ஓடிவந்தார்கள்.

## ஊரைக் கண்டு பிடியுங்கள் !



























"ரகமி"

[விடை 86ம் பக்கம் பார்க்கவும்]

"ஐயோ! இது என்ன! அம்மா இப்படி விழுந்து விட்டார்களே!" என்று ரமணி கையைக் கசக்கினான். அவன் கண்களும் கலங்கின.

மாலதி அம்மா பக்கத்திலே ஓடிவந்து பார்த்ததும், "அம்மா! அம்மா!" என்று கலக்கத்தோடு கூவினாள். உடனே சிற்சபேசன், "ரமணி, மாலதி, கொஞ்சம் தள்ளியிருங்கள். காற்று நன்றாக வரட்டும்" என்றார்.

உடனே ரமணி விலகி நின்று கொண்டு, "நான் ஓடிப்போய் டாக்டரை அழைத்துக் கொண்டு வரட்டுமா?" என்றான்.

"வேண்டாம். இரண்டொரு நிமிஷத்துக்கு இப்படித்தான் இருக்கும். அப்புறம், தானாக எழுந்து விடுவாள். நீ விசிறி 'சுவிட்'சைப் போட்டுவிட்டு, செம்பிலே தண்ணீர் கொண்டுவா" என்றார்.

உடனே ரமணி சுவிட்சைப் போட்டு விட்டு, ஒரு நொடியில் செம்பு நிறையத் தண்ணீர் கொண்டு வந்தான். தண்ணீரைக் காமாட்சி அம்மாள் முகத்திலே தெளித்தார் சிற்சபேசன். ஒரு நிமிஷம் ஆகி, இரண்டு நிமிஷங்களும் ஆகிவிட்டன. அதற்கு மேலும் ஒரு நிமிஷம் ஆகி விட்டது. ஆனாலும், காமாட்சியம்மாள் எழுந்திருக்கவில்லை. அதுவரை கவலைப்படாமல் இருந்த சிற்சபேசன் முகத்திலும் கவலை ஏற்பட்டது. ரமணிக்குத் திகில் மிகவும் அதிகமாகி விட்டது.

காமாட்சி அம்மாளுக்கு முன்பு இரண்டு மூன்று தடவைகள் பலவீனத்தால் இப்படி மயக்கம் வந்ததுண்டு. இது ரமணிக்குத் தெரியாது.

சற்று நேரத்தில் காமாட்சி அம்மாள் மெதுவாகக் கண்களைத் திறந்தாள். உடனே சிற்சபேசனின் முகம் மலர்ந்து விட்டது. "அம்மா!" என்று மாலதி ஆசையாகக் கூப்பிட்டாள். சிறிது நேரத்தில் காமாட்சி அம்மாள் எழுந்து உட்கார்ந்தாள். மறு நிமிஷம், "ரமணி எங்கே?" என்று கேட்டாள்.

உடனே மாலதி, "ரமணி அண்ணா! ரமணி அண்ணா! அம்மா எழுந்து விட்டாள்" என்று ஆனந்தமாகக் கூறிக் கொண்டே சுற்று முற்றும் பார்த்தாள். ரமணி அங்கே இல்லை! வாசல் பக்கத்திலும் காணோம். மாடியிலும் அவன் இல்லை.

(தொடரும்)

மனம்கவர் மணம்..








டிராலி
டால்க் பவுடர்



**கூந்தல் மற்றும் மூளை**
**அபிவிருத்திக்கான தைலம்**

செழுமையாகக் கூந்தல் வளர உதவுகிறது. வழுக்கையைத் தடுப்பதுடன் கேசம் உதிர்வதையும் நிறுத்துகிறது. ஞாபகசக்தியை அதிகரித்து ஆழ்ந்த நித்திரையை அளிக்கிறது. எல்லோருக்கும் எக்காலத்திலும் ஏற்றது.

பெரிய பாட்டில் ரூ. 3-8-0
சிறிய பாட்டில் ரூ. 2-0-0

எங்கும் கிடைக்கும்




**ராம்தீர்த் யோகாஷ்ரமம்**
பம்பாய்-14. (C. Rly.)

[illegible]

# பாங்க் ஆப் மதுரை லிமிடெட்

ஸ்தாபிதம்: 1943

தலைமை ஆபீஸ்: மதுரை

கிளைகள்:
புதுக்கோட்டை, கோயம்புத்தூர், சேலம்

★

## சேவிங்ஸ் பாங்க் கணக்குகள்

சேவிங்ஸ் பாங்க் கணக்குகள் ரூ. 5-ம் அதற்கு மேலும் வைத்துக் கொள்ளலாம். வருஷத்துக்கு 3% வட்டி கொடுக்கப்படுகிறது. பாங்கியிலிருந்து கொடுக்கப்படும் செக்குகள் மூலம் பணம் திரும்பப் பெற வசதி. வாரத்திற்கு அதிக பட்சம் ரூ. 1000/- பெற்றுக் கொள்ளலாம்.

பி. எஸ். விஸ்வநாதன்
காரியதரிசி

**உலக மார்க்**
**அசல் ஷண்முகம்**




MA

**ORIGINAL SHUNMUGAM SNUFF (ESTD-1839) CO.**
POST BOX 140 MADRAS-1




பாண்டியின் முழுப் பெயர் பாண்டியன். அவன் பிறந்து வளர்ந்ததெல்லாம் மதுரை நகரில்தான். அங்கு அவன் தந்தை ஒரு இரும்புப் பட்டறை வைத்து எளிய வியாபாரம் செய்து கொண்டிருந்தார். அவன் அவருக்கு ஒரே பிள்ளை யல்ல. அவனுடன் கூடப் பிறந்தவர்கள் ஐந்து சகோதரர்கள். இந்தப் பெரிய குடும்பம் முழுவதும் அந்தச் சிறு பட்டறையிலிருந்து வந்து கொண்டிருந்த சிறு வருமானத்தைக் கொண்டு வாழ்ந்து வந்தது. இதெல்லாம் பாண்டியன் சிறு குழந்தையாக இருந்தபோது நடந்த கதை. பாண்டி வாலிபப் பருவத்தை அடைந்த போது அவன் தந்தை இறந்து விட்டார். அந்தப் பட்டறைத் தொழிலைப் பாண்டியின் சகோதரர்களில் மூவர் தொடர்ந்து நடத்த முற்பட்டனர். நான்காவது சகோதரனுக்கோ இளம் பிள்ளை வாதம். அவனை வைத்து மற்றவர்கள் காப்பாற்ற வேண்டும்.

பாண்டி இஷ்டப்பட்டிருந்தால் அவனும் அந்தப் பட்டறைத் தொழிலை மேற்கொண்டிருக்கலாம். ஆனாலும் அவனுக்கென்னவோ தன் பிறந்த ஊரில் பிழைப்பைத் தேடிக் கொள்ள இஷ்டமேயில்லை. அக்கரைச் சீமையில் தளுக்காக வாழ்ந்தவனாயிற்றே! மதுரையிலேயே சிற்சில கடைகளில் வேலை செய்து பார்த்தான். ஒன்றும் திருப்தியளிக்காமற் போகவே ஒரு நாள் யாரிடமும் சொல்லிக் கொள்ளாது இந்திய ராணுவத்தில் சேர்ந்து விட்டான்.

பாண்டி சேர்ந்திருந்த சேனை இந்தியாவின் பற்பல முனைகளில் சென்று சேவை செய்தது. கடைசியாக 1953-ம் வருஷத்தில் அதற்கு ஒரு அபூர்வமான சந்தர்ப்பம் வாய்த்தது. வட கொரியா தென் கொரியா சமாதானத்தை முன்னிட்டு ஐ. நா. மேற்பார்வை யிட்ட சமயம் யுத்தக் கைதிகளை வைத்து 90 நாட்கள் பாதுகாக்கும் பொறுப்பை நம் தாய்நாடு பெருமிதமுடன் ஏற்றது அல்லவா! அந்த ராணுவத்தில் இருந்தான் பாண்டி. பாண்டி இப்பொழுது ஒரு சாதாரணச் சிப்பாய் அல்ல. தன் திறமை, உழைப்பு இவற்றைக் கொண்டு 'ஸ்டார்' வாங்கினது மன்றி, மேஜர் பாண்டி என்றும் அழைக்கப்பட்டான்.

பாண்டியின் பாதுகாப்பில் இருந்தவர்களுள் பாண்டியின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தவன் ஒரே ஒரு கைதியே. அவனுடைய நீண்ட பெயரைப் பாண்டிக்குச் சரியாக உச்சரிக்கக் கூட முடியவில்லை. பெயர் என்னவோ 'ஸிங்யூ' என்று முடியும். எனவே பாண்டியும் இதர இந்தியர்களும் அவனைச் 'ஸிங்யூ' என்றே அழைத்து வந்தனர். ஸிங்யூ மற்றக் கைதிகளைப் போலன்றி நன்கு படித்தவன். வயது இருபத்தைந்துக்கு மேல் இருக்காது. ஆனால் இந்த இளம் வயதிலேயே அவன் கண்களில் வைராக்கியம், பாசம், கருணை இவற்றின் அறிகுறிகள் தென்பட்டன. மற்ற எழுத்து வாசனையில்லாத கைதிகளைப் போலன்றி, சாந்தத்துடன் இருந்த ஸிங்யூவைக் கண்டால் மட்டும் பாண்டிக்கு ஒரு விசேஷ பிரீதி ஏற்பட்டது.

நாளடைவில் ஸிங்யூ, பாண்டியுடன் நன்றாகக் கலந்து பேசச் சந்தர்ப்பங்கள் வாய்க்கவே, அவர்கள் நல்ல நண்பர்களாயினர். ஸிங்யூவிடமிருந்து அவர்கள் பாஷையைக் கொஞ்சம் கொஞ்சம் பாண்டியும் கற்றுக் கொண்டான்.

இரவு எட்டு மணியிலிருந்து ஒன்பது மணி வரையில் பாண்டிக்கு ஓய்வு. சாப்பாட்டு வேளை. கைதிகள் முகாமிலிருந்து ஒரு பர்லாங் தூரத்தில் அவனுடைய கூடாரம் இருந்தது. நாடாவில் பின்னப்பட்ட கட்டிலில் உட்கார்ந்து தன் ரொட்டி, பழங்கள் இவற்றைத் தின்று விட்டுச் சற்று ஓய்வெடுத்துக் கொள்வான்.

அன்றும் அதேமாதிரிதான் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தான். அப்பொழுது அவன் கூடா



ரத்தின் மங்கலான விளக்கு வெளிச்சத்தின் மேல் ஒரு நிழல் படர்ந்தது. திடுக்கிட்டுத் தன் துப்பாக்கியை நீட்டியபடி, "யார் அங்கே!" என்று அதட்டினான்.

"உன்னைப் பார்க்க வேண்டும் ஐயா!" என்று தீனமான குரல் ஒன்று கேட்டது, கொரியர் பாஷையில்.

பாண்டி வெளியே வந்து பார்த்தான்.

'ஜிலு ஜிலு' வெனக் காற்று வீசும் வேளையில் தன் கழுத்து வரைக் கம்பிளியால் போர்த்திய படி ஒரு கிழவி நின்று கொண்டிருந்தாள்.

"வா, உள்ளே!" என்று அழைத்தான்.

"நீ, யாரம்மா! என்ன விஷயம்!" என்று வினவினான்.

கிழவியின் சுருங்கிய கண்களின் கோடியில் ஒரு கண்ணீர்த் துளி தேங்கி நின்றது. அந்த அறை விளக்கில் அது மங்கலாகப் பிரகாசித்தது. அதைத் துடைத்து விட்டுக் கொண்டபடி அவள் பேசினாள்: "அப்பா, உன் பாதுகாப்பில் வைத்திருக்கிறார்களாமே ஸிங்யூவை! அவன் சுகமாக இருக்கிறானா!" என்றாள்.

பாண்டி, "ஆமாம்! அவன் சுகமாயிருக்கிறான். அவனை உங்களுக்குத் தெரியுமா!" என்று கேட்டான்.

கிழவி சோகத்துடன், "அவன் என் பிள்ளையாயிற்றே!" என்றாள்.

"அப்படியா! ஸிங்யூ என் உற்ற நண்பனே. அவன் தாயைக் காண எனக்கு மிகவும் சந்தோஷம்!" என்றான்.

கிழவியின் கண்களில் ஒளி படர்ந்தது.

"உன் நண்பனா! சந்தோஷம்! என் ஸிங்யூவின் நல்ல குணத்துக்கு எந்த தேசத்தவரும், எந்த பாஷைக்காரர்களும் வசியமாவார்களே! எங்கள் கதையைச் சொல்கிறேன், கேள்! என் கணவர் இறந்த பொழுது ஸிங்யூவுக்கு வயது பன்னிரண்டு. அவனுக்குப் பின் ஒரு தம்பி மட்டும் பிறந்தான். எங்களுக்கு இருந்ததெல்லாம் எங்கள் கிராமத்தில் ஒரு சிறு வீடும், அதன் தோட்டமும்தான். எப்படியோ அவர்களை மனிதர்களாக்கி விட்டேன். என் இரண்டாவது மகன் மீயாங் எங்கள் கிராமத்தில் ஒரு சின்னப் பீங்கான் கடை வைத்திருக்கிறான்..." என்று சொல்லி நிறுத்தினாள்.

பாண்டி, "ஸிங்யூ மட்டும் ஏன் ராணுவத்தில் சேர்ந்து விட்டான்!" என்று கேட்டான்.

கிழவி பெருமூச்செறிந்தாள். "ஹூம்... அதை ஏன் கேட்கிறாய்! எங்கள் கிராமத்தில் ஒரு பண்ணைக்காரர் உண்டு. அவர் மகள் மிங் ஒரு அபூர்வமான அழகி. அவளுக்கு ஸிங்யூவுடன் சிறு வயதிலேயே நேசம். அவளைத் தன் மனைவியாக்கிக் கொள்ள ஸிங்யூ ஆசைப்பட்டான். ஏன், அவளிடம் தன் உயிரையேகூட வைத்திருக்கிறான் என்றும் சொல்லலாம். மிங்கின் தந்தைக்கும் ஸிங்யூவுக்கு அவளைக் கொடுக்கச் சம்மதமே. ஆனால் அவருக்குச் சொந்தமான சில நிலங்கள் அடகில் இருந்தன. இருநூற்றைம்பது பவுன் கொடுத்து அவற்றை யார் மீட்டுக் கொடுக்கிறார்களோ அவருக்கே மிங்கை மணஞ் செய்விப்பதாகச் சொன்னார். ஸிங்யூவுக்கு எதிராக இதில் வந்து சேர்ந்தான் சுவாங். அவனிடம் ஒரு கோழிப் பண்ணை இருந்தது. அவனுக்கும் இருநூற்றைம்பது பவுன் சம்பாதிப்பது சுலபமாக இல்லை. இருவரும் பொருளீட்டக் கிளம்பிவிட்டனர். இதில் விசித்திரம் என்ன வெனில் மிங்கின் தந்தை, ஸிங்யூவோ சுவாங்கோ ஆறு மாதத்தில் பணத்துடன் திரும்ப வேண்டுமென்றும், இருவரில் யாரேனும் ஒருவர் திரும்ப வில்லையேல் எஞ்சியிருப்பவனுக்கே அவன் முழுதும் இருநூற்றைம்பது பவுன் சம்பாதிக்கா விட்டாலும்—மிங்கைத் தருவதாகச் சொன்னார். ஸிங்யூ என்ன பணம் சேர்த்திருக்கப் போகிறான்! ஆறுமாத காலம் முடிவதற்கு இன்னும் ஆறு வாரங்களே பாக்கி. சுவாங்கும் பொருளீட்டுவதற்கெனக் கிளம்பிச் சென்றவன் இன்னும் வரவில்லை. மிங் ஸிங்யூ விடம் வைத்த நேசம் மட்டும் மாற்ற முடியாதது. ஆண்டவன் திருவுள்ளம் எப்படியோ!" என்று சொல்லி நிறுத்தினாள்.

கைதிகள் முகாமிலிருந்து மணி சத்தம் கேட்டது. மணி ஒன்பதாக இன்னும் இருபது நிமிஷங்களே உள்ளன என்பதை அறிவித்தது.

தன் ஆசனத்திலிருந்து மேஜர் பாண்டி சரேலென எழுந்தான்.



## ஒவ்வொரு குடும்பத்திலும் அன்றாடம்

# ஓரணா அதிகம்

## சேமிக்கட்டும் . . . . .

ஒவ்வொரு இந்தியக் குடும்பத்திலும் அன்றாடம் ஓரணா போன்ற சிறுதொகையை அதிகப்படியாக சேமிக்கத் தொடங்கினாலும்கூட அவை மொத்தமாக சிறு சேமிப்பு ரூபத்தில் மாதம் 1 க்கு ரூ. 13.5 கோடியாகவும், வருடம் 1 க்கு ரூ. 162 கோடியாகவும் வளர்ந்துவிடுகிறது. கோடிக் கணக்கான மக்களின் சிறு சேமிப்புகளினால் நம்நாட்டில் உத்தேசிக்கப்பட்டுள்ள அபிவிருத்தித் திட்டங்களையெல்லாம் நடத்தப்போதிய நிதி வசதி கிடைக்கும். நேஷனல் சேவிங்ஸ் சர்டிபிகேட்டுகளும், நேஷனல் பிளான் சர்டிபிகேட்டுகளும் சிறுதொகையான ரூ. 5 மதிப்பில் கூடக் கிடைக்கின்றன என்பது நினைவிலிருக்கட்டும்.

இந்திய
அரசாங்கத்தின்
**சிறு
சேமிப்பு
திட்டத்தில்**
முதலீடு
செய்யுங்கள்.

12 வருட
நேஷனல் சேவிங்ஸ்
சர்டிபிகேட்டுகள்
10 வருட
டிரெஷரி சேவிங்ஸ்
டிபாஸிட் சர்டிபிகேட்டுகள்
10 வருட
நேஷனல் பிளான்
சர்டிபிகேட்டுகள்
15 வருட
ஆன்விடி சர்டிபிகேட்டுகள்
போஸ்டாபீஸ் சேவிங்ஸ் பாங்க்
டிபாஸிட்டுகள்

DA 55/164 TM

"நான் முகாமுக்குச் செல்ல வேண்டிய வேளை வந்து விட்டது. நீங்கள் சென்று வாருங்கள். நான் உங்கள் மகனை நன்றாகப் பார்த்துக் கொள்கிறேன். அது என் பொறுப்பு, கடமை..." என்றான், கைக்கடிகாரத்தை மணிக்கட்டில் பதித்தபடி. கிழவி எழுந்தவள் தயங்கி நின்றாள். அவனிடம் ஏதோ உதவியை எதிர்பார்க்கிறாள் என்பது தெரிந்து விட்டது. பாண்டி உடனே கனிவுடன், "ஏன், உங்களுக்கு இன்னும் என்ன தேவையோ!" என்று கேட்டான்.

கிழவி ஆவலுடன், "அப்பா! நீதான் உதவ வேண்டும்!......நான் என் ஆசை மகனைக் கண்டு ரொம்ப நாட்களாகி விட்டன. யுத்தப் பேச்சு வார்த்தைகள் நடக்கும் லட்சணத்தைப் பார்த்தால் அவன் இன்னும் எத்தனை காலம் கைதியாகவே வாழ நேரிடும் என்று சொல்ல முடியவில்லை. நீ மட்டும் பெரிய மனசு பண்ணி அவனை இந்தக் கூடாரத்துக்கு அழைத்து வந்து ஒரு நாள் வைத்திருந்தால் என் ஆசை தீர அவனைக் காணும் சந்தர்ப்பம் கிடைக்கும்!" என்று கூறிவிட்டு அவனை ஆவலுடன் பார்த்தாள்.

'கடகட'வென உரக்கச் சிரித்தான் பாண்டி. பிறகு, "பாட்டி! நிறைவேற்ற முடியாத ஆசையைக் கொண்ட உங்களைக் கண்டு நான் அனுதாபப்படுகிறேன். என்னை மன்னிக்க வேண்டும். உங்கள் ஆசையை என்னால் கண்டிப்பாக நிறைவேற்றவே முடியாது" என்றான் தீர்மானமான குரலில்.

கிழவியின் முகத்தில் ஏமாற்றத்தின் சாயை நன்கு படிந்தது. "நீ இப்படிச் சொல்லலாமா, அப்பா! இந்தியர்கள் கருணையின் பிறப்பிடம் என்று சொல்வார்களே!" என்றாள்.

பாண்டி பெருமிதமுடன் அவளை ஏறிட்டு நோக்கினான். திடமான குரலில், "ஆம்! அது உண்மையே! ஆனால் கருணைக்கு இருப்பிடமான அதே இந்தியர்கள் கடமையிலிருந்து வழுவாதவர்கள்!" என்று கூறி விட்டுக் கூடாரத்துக்குள் நடைபோட்டான்.



கிழவி தன் மடியில் கையை விட்டுத் துழாவினாள். அவள் மடியில் ஒரு பொட்டலம் இருந்தது. அதைப் பிரித்துக் காட்டினாள்; உள்ளே ஒரு டஜன் பிஸ்கோத்துகள்—கையால் செய்த நாட்டு பிஸ்கோத்துகள் — இருந்தன. கெஞ்சும் குரலில், "அப்பா, இந்தப் பிஸ்கோத்துக்களையாவது சிங்யூவிடம் அவன் தாய் கொடுத்ததாகச் சொல்லிக் கொடுத்து விடு! இந்தா...மறுக்காதே!" என்று கையை நீட்டினாள்.

பாண்டியின் நெஞ்சம் துணுக்குற்றது; சற்று நேரம் தயங்கினான்.

வெம்மை படர்ந்த கண்களைக் கொட்டியபடி, பாண்டி மௌனமாகத் தன் கைகளை நீட்டி அந்தப் பிஸ்கோத்துப் பொட்டலத்தை வாங்கிக் கொண்டான்.

"அம்மா, என்னை மன்னியுங்கள். இனி உங்கள் மனத்தைப் புண்படுத்தவே மாட்டேன். இதைக் கண்டிப்பாக சிங்யூவிடம் சேர்ப்பித்து விடுகிறேன். எனக்கு நேரமாகிறது. நான் வருகிறேன்" என்று கூறிக் கிளம்பினான். கிழவியின் முகமும் மலர்ந்தது.

அன்று முதல் அந்தக் கிழவி அடிக்கடி அவன் கூடாரத்துக்கு வருவாள். வரும்போது தன் பிள்ளைக்கென ஏதாவது பழங்கள் அல்லது ஆகாரப் பதார்த்தங்கள் கொண்டு வந்து தருவாள். பாண்டியும் இரவு காவலுக்குச் செல்லும் பொழுது சிங்யூவைத் தனியே சந்தித்து அவற்றை அவனிடம் சேர்ப்பித்து விடுவான். இதிலும் எத்தனையோ தொந்தரவு.

அன்றொரு நாள் கிழவியுடன் ஒரு அழகிய இளம் பெண்ணும் வந்தாள். குறுகிய அவள் கண்களில் கனிவு நிரந்தரமாகத் தங்கி யிருந்தது. அவள் முகத்தில் மிளிர்ந்த குறுகுறுப்பைக் கண்டதும் பாண்டிக்கு மதுரைக் கடைத்தெருவில் விற்கும் சீனக் கண்ணாடிச் சாமான்களில் விதவிதமான வர்ணங்களில் பொறிக்கப் பெற்ற வண்ணத்துப் பூச்சியின் நினைவு வந்தது. கிழவி, "இவள் தானப்பா மிங்! இவளுக்குத்தான் என் மகன் இத்தனை பாடுபடுகிறான்" என்று கூறிச் சிரித்தாள்.

அன்று பிஸ்கோத்துக்களை சிங்யூவிடம் பாண்டி தந்து, "இன்று உன் காதலி மிங்கைப் பார்த்தேன். அசாதாரணமான அழகி அவள். அவளை அடையப் போகும் நீ ஒரு அதிர்ஷ்டசாலியே!" என்றான் பாண்டி. சிங்யூவின் கண்களில் பெருமை தெரிந்தது.

**78-ம் பக்கம் படத்துக்குச் சரியான விடை**

விடைகள் :— 1. பூவட்டக்குடி. 2. வலையப்பட்டி. 3. வால்பாறை. 4. பரங்கிப்பேட்டை. 5. ஈரோடு. 6. ஊஞ்சலூர். 7. சங்கரன்பந்தல். 8. கிருஷ்ணகிரி. 9. கொடுமுடி. 10. நாமக்கல். 11. லப்பைகுடிக்காடு. 12. கீழசேவல்பட்டி.

இன்னொரு நாள் கிழவி, "அப்பா, நாளை வரும்போது என் இரண்டாவது மகனையும் அழைத்து வரட்டுமா ! அவன் உன்னைக் காண மிகவும் ஆசைப்படுகிறான்" என்றாள்.

பாண்டி, "ஆஹா ! தாராளமாக!" என்றான.

அப்பொழுது கூடாரத்துக்கு வெளியே இருட்டில் ஒரு ஆசாமி விரைவாக நகர்ந்து செல்லும் அரவம் கேட்டது. பாண்டி அவசரத்துடன் 'டார்ச்சை' எடுத்து வந்து பார்த்தான். கண்ணுக்கெட்டிய வரை யாருமே புலப்படவில்லை. "வெறும் பிரமையே !" என்று முணுமுணுத்துக் கொண்டு கூடாரத்துக்குள் வந்தான். அது பிரமையல்ல, சிங்யூவின் எதிரி சுவாங் என்று மட்டும் பாண்டிக்குத் தெரிந்திருந்தால் !......

மறு நாள் கிழவி மட்டும் தான் வந்தாள். "இன்று என் மகனைத் தேடி வாடிக்கைக்காரர்கள் நிறைய வந்து விட்டார்கள். நாளை அழைத்து வருகிறேன் !" என்று கூறி இரண்டொரு பழங்களைத் தந்து விட்டுப் போனாள்.

மறு நாள் இரவு. கிழவி வருவதற்கு அரை மணி முன்பே யாரோ வாயிற்புறம் நின்றிருப்பது பாண்டிக்குத் தெரிந்தது. 'யாரது!' என வினவ, அந்த ஆள் உள்ளே வந்தான்.

"நான் சிங்யூவின் தம்பி, இன்று என் அம்மா வரம் வர முடியவில்லை" என்று நிணறினான்.

பாண்டியின் புலனுக்கு அவன் முகத்தில் சிங்யூவின் சாயலோ, அவன் அம்மாவின் சாயலோ, இல்லை. சந்தேகத்தை வெளிக்காட்டிக் கொள்ளாது பாண்டி, "உன் முகத்தில் ஏன் சிங்யூவின் சாயலோ அல்லது அவன் தாயின் சாயலோ இல்லை!" என்று கேட்டான்.

அந்த யுவன் ஒரு கணம் திகைத்தான். பிறகு சமாளித்துக் கொண்டு, "சிங்யூ அம்மாவின் சாயலாகத்தான் இருப்பான். நான் என்னவோ என் தந்தையைக் கொண்டே பிறந்து விட்டேன் !" என்றான். பிறகு பிஸ்கோத்துப் பொட்டலத்தையும் நீட்டினான்.

பாண்டி அதை வாங்கிக் கொண்டு, "சரி, நீ போ !" என்றான். பாண்டி கைதிகள் முகாமுக்குச் சீக்கிரமே கிளம்பி விட்டான். கிழவியும் வரமாட்டாள். இனிக் கூடாரத்தில் என்ன வேலை!...... வழக்கம் போல் அதிஜாக்கிரதையாகச் சென்று கைதிகள் முகாமில் சிங்யூ இருந்த இடத்துக்குச் சென்றான். சிங்யூவின் தோள்களைப் பற்றி, பிஸ்கோத்துப் பொட்டலத்தை மௌனமாக நீட்டினான். அந்த க்ஷணமே இருட்டிலிருந்து "ஹோய் ! ஹாய் !" என்று இரண்டு மூன்று அதட்டும் குரல்கள் வந்தன. அதைத் தொடர்ந்து யாரோ அவர்களை நோக்கி ஓடிவரும் சப்தமும் கேட்டது. யாரோ பார்த்து விட்டார்கள் போலிருக்கிறது. இருளில் வேகமாகச் சிங்யூ ஒரு பக்கமும் பாண்டி ஒரு பக்கமும் ஓடி மறைந்தனர்.

பாண்டி வாயிலுக்கு வந்தான் நிணறியபடி. நல்லவேளையாக அவன் ஓடி வந்ததை யாரும் பார்க்கவில்லை. 'மணி என்ன இருக்கும் !' என்று எண்ணிக் கையைப் பார்த்தான் ; கடிகாரம் கையில் இல்லை. கூடாரத்திலேயே அவசரத்தில் வைத்துவிட்டு வந்து விட்டான். இரவு முழுவதும் காவல் புரியப் பாண்டிக்குக் கைக் கடியாரம் இன்றியமையாதது. 'சற்று நேரம் ஆனாலும் ஆகிறது. போய் எடுத்து வந்துவிடுவதே நலம் !' என்று எண்ணித் தன் சிப்பாய்களில் இருவரைத் தன் இடத்தில் இருத்திவிட்டுக் கிளம்பினான்.

அவனுடைய கூடாரத்தை நெருங்கியதும் ஆச்சரியத்தினால் ஸ்தம்பித்து நின்றுவிட்டான். ஏனெனில், வாசலில் சிங்யூவின் தாய் கையில் பிஸ்கோத்துப் பொட்டலத்துடன் நின்று கொண்டிருந்தாள் !

பாண்டி அவளைக் கண்டதும் அவசரமாக, "அது சரி ! உன் மகன்தான் வந்து பொட்டலம் கொடுத்து விட்டுப் போனானே. நீயும் எதற்கு வந்திருக்கிறாய் !" என்றான்.

"என் மகனா !...நான் அவனை இன்னும் அனுப்பவே இல்லையே !" என்றாள் கிழவி.

பாண்டிக்குத் 'திக்'கென்றது. அவன் எடுத்துக் கையில் அணிந்து கொண்ட கடியாரத்தின் 'டிக் டிக்' என்ற ஓசையைத் தவிர வேறு எதுவும் கூடாரத்தில் கேட்கவில்லை.

அவன் வெறிக்கப் பார்த்தான் கிழவியை. "அப்படியானால் என்னிடம் ஒரு பிஸ்கோத்துப் பொட்டலத்தைக் கொடுத்துச் சென்றானே, அவன் யார் !" என்று கேட்டான்.

கிழவி விழித்தாள் : "நான் யாரையுமே அனுப்பவில்லையே, தம்பி !" என்றாள்.

ஒரு நிமிஷம் மௌனம். கிழவி திடீரென, "தம்பி ! வந்தவன் நெற்றியில் பெரிய கருப்பு மச்சம் இருந்ததா ! கவனித்தாயா !" என்றாள்.

பாண்டி "ஆமாம் ! அவன் யார்!" என்றான்.

தலைமயிரைப் பிய்த்துக் கொண்டே கிழவி கத்தினாள். "ஐயோ ! பாவி மோசம் புரிந்து விட்டானே ! தம்பி, அவன் வேறு யாரும் இல்லை. என் மகனை ஒழித்துக் கட்ட வேண்டுமென்று எண்ணங் கொண்ட சுவாங் ! நான் என்ன செய்வேன் !" என்று அலறினாள்.

இந்த உலகமே சுழல்வது போன்ற பிரமை பாண்டிக்கு உண்டாயிற்று.

அப்பொழுது கைதிகள் முகாமிலிருந்து "ஹோ ! ஹோ !" என்ற கோரமான கூக்குரல் எழுந்தது. கைதிகள் மீண்டும் கலகம் செய்ய ஆரம்பித்து விட்டனர். துப்பாக்கியைத் தோளில் எடுத்துப் போட்டுக்கொண்டு பாண்டி ஓடினான்.

பாண்டி தன் ஊதலை எடுத்து ஊதினான். ஓய்வு பெறச் சென்றிருந்த இருநூறு இந்தியச் சிப்பாய்களும் கண நேரத்தில் வந்து கூடி விட்டனர். கைதிகளை அடக்கும் வேலை ஆரம்பமாகியது. பற்பல வருஷங்கள் பற்பல இடங்களில் போர் புரிந்த புலிகளாயிற்றே ! நிலைமை இருபது நிமிஷங்களுக்குள் கட்டுக் கடங்கியது. வெறிகொண்டு மூண்டெழுந்த

அத்தனை கொரியர்களும் கைகளைத் தூக்கிச் சரணடைந்தனர். வெளிச்சத்தை உண்டு பண்ணத் தீவர்த்திகள் கொளுத்தப்பட்டன.

பாண்டியும் இன்னும் இருபது வீரர்களும் ஒரு விசாலமான மேடை மீதேறினர். கீழே நூற்றுக்கணக்கில் திரண்டிருந்தனர் கொரியர்கள். அவர்கள் எல்லோருடைய முகத்திலும் ரௌத்திரம் தாண்டவமாடியது.

மௌனத்தைக் கலைத்தபடி பாண்டிதான் பேசினான்: "கொரிய நாட்டுச் சகோதரர்களே! நாங்கள் உங்கள் ஆசியச் சகோதரர்களே! உங்களைப் பாதுகாக்க, உங்கள் நலனைக் கோரி வந்த எங்களுக்கு இதுதான் பரிசா?" என்று கம்பீரத்துடன் கேட்டான்.

"அநியாயம்" "அநீதி" "நியாயம் வேண்டும்" என்றபடி பற்பல குரல்கள் எழுந்தன.

பாண்டி கையமர்த்தி, "கூச்சல் வேண்டாம்! உங்களுக்கு என்ன அநீதி நடந்து விட்டது! சொல்லுங்கள்" என்று கூறினான்.

ஒரு கொரியன் தன் தோளில் ஒரு உடலைத் தூக்கியபடி மேடைக்கு வந்தான். உயிரற்ற அந்த உடலை மேடையில் கிடத்திவிட்டு, "இது தான் நீதி புரிந்ததா?" என்றான்.

அந்தப் பிணத்தின் முகம் துணியால் மூடப்பட்டிருந்தது. பாண்டி "இது என்ன?" என்றான்.

அந்தக் கொரியன், "இவன் எங்களைச் சேர்ந்தவன். இவனை ஒரு இந்தியச் சிப்பாய் விஷமிட்டுக் கொன்று விட்டான். பழிக்குப் பழி வாங்க வேண்டும்" என்று உரக்கக் கூவினான். பாண்டி, "உடனே இவனை ஒரு இந்தியன் விஷமிட்டுக் கொன்றான் என்பதற்கு என்ன அத்தாட்சி!" என்றான்.

கூட்டத்திலிருந்து பதில்கள் வந்து காதைத் துளைத்தன. அந்தக் கொரியனே அவர்களை அடக்கி விட்டு, பாண்டியை நோக்கி, "இன்று, சற்று நேரம் முந்தி எவனோ ஒரு சிப்பாய் இவனிடம் ஒரு பொட்டலத்தைக் கொடுத்தான். நாங்கள் அவனைத் தொடர்ந்து சென்று பிடிப்பதற்குள் ஓடிவிட்டான். அந்தப் பொட்டலத்துக்குள்ளிருந்த பிஸ்கோத்தைத் தின்றவுடன் இவன் இறந்து விட்டான். இதுவே நடந்தது. இது எங்கள் தாய்நாட்டின் மேல் ஆணையாக உண்மை!" என்று கூறிவிட்டுப் பிணத்தின் முகத்தை மூடியிருந்த துணியை விலக்கிவிட்டுப் பாண்டியிடம் காட்டினான்.

பாண்டியின் கண்கள் நீரைச் சொரிந்தன. தன் அருமை நண்பனின் மஞ்சள் நிறக் கன்னத்தை வருடினான். மெல்லிய குரலில் "சிங்பூ! என்னை மன்னித்து விடு! நான் உனக்கு மனதார ஒரு துரோகமும் நினைக்கவில்லை! என்னை ஆளும் மீனாட்சி அம்மைமேல் ஆணையாகச் சொல்லுகிறேன், நான் உனக்கு ஒரு துரோகமும் நினைக்கவில்லை!" என்று அரற்றினான்.

சட்டென அவன் கண்களில் புதுமை பாய்ந்தது. கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டபடி, சரேலென்று எழுந்து நின்றான்.

"கொரிய நண்பர்களே! சிங்பூ ஒரு இந்தியன் கையால் மரணமடைந்ததை ஒப்புக் கொள்கிறேன். அவனுக்கு என்ன தண்டனை விதிக்க வேண்டும்!" என்றான்.

கைதிகளுள் முக்கியஸ்தர்களான ஐந்து பேர்கள் உடனே கூடி ஆலோசித்தனர். பிறகு அவனிடம் வந்து, "அந்த இந்தியன் தானாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டால், சிங்பூவிடம் விஷம் கலந்த பிஸ்கோத்துகளை வழங்கிய அந்தக் கை துண்டிக்கப்பட வேண்டும். அவனாக வெளிவராது, நாங்கள் கண்டு பிடித்தால், அவன் உயிரையே மாய்த்து விடுவோம்!" என்றனர்.

பாண்டி உடனே கூட்டத்தை நோக்கி, "கொரியச் சகோதரர்களே! இந்த முடிவு உங்களுக்குச் சம்மதமா?" என்று கத்தினான்.

'சம்மதம்'— அந்தப் பிராந்தியமே இதை எதிரொலித்தது.

பாண்டி முறுவலுடன் நின்றான். தன்னுடைய கைத் துப்பாக்கியை எடுத்தான். கூட்டத்தை நோக்கி, "என் அருமை நண்பர்களே!...... உங்கள் தீர்ப்பை நாங்களும் ஏற்கிறோம். நாங்கள் கோழைகளல்ல. உலகில் சமாதானம் எழுப்பிய சாந்தி வீரர்கள். உங்கள் எதிரிலேயே அந்த இந்தியக் குற்றவாளி தன்னை வெளிப்படுத்திக் கொள்ள, அவன் கையும் துண்டிக்கப்படும்" என்றான்.

பிறகு அவசரமாகத் துப்பாக்கியைத் திருப்பித் தன் இடது கையில் தாங்கித் தன் வலது கையைக் குறி வைத்துச் சுட்டான்....டமால்!

பாண்டியின் வலது கை தெறித்து விழுந்தது.

கூட்டமே சலசலத்தது.

"மேஜர் பாண்டியா குற்றவாளி!" 'அவரா சிங்பூவைக் கொன்றிருப்பார்!' என்றெல்லாம் குரல்கள் எழுந்தன.

பாண்டி ரொம்ப நேரம் கழித்துக் கண் விழித்தான். அவனைச் சுற்றிலும் ஒரே கும்பல். கொரியரும், இந்தியரும் விரோதம் இன்றி அந்த தீரனின் முகத்தையே நோக்கி நின்றனர்.

பாண்டி மெல்லிய குரலில் பேசினான்: "என் சகோதரர்களே! சிங்பூவின் கையில் பிஸ்கோத்துக்களை அளித்தது நானே: இன்று நேற்றல்ல, வெகு நாட்களாக. அவன் பிரிவு தாளாத அவன் தாய் என்னைக் கெஞ்சி அந்த பிஸ்கோத்துக்களைத் தன் மகனிடம் சேர்ப்பிக்கச் சொன்னாள். தாய் அன்பு குலைந்து விடுமே என்ற தாபத்தால் நானும் என் கடமையை மீறியே அவள் இச்சையைப் பூர்த்தி செய்து வந்தேன். சிங்பூவுக்குக் காதல் — விரோதி ஒருவன், இன்று கிழவி — சிங்பூவின் தாய் வருவதற்கு முன்பே வந்து தன்னைச் சிங்பூவின் தம்பி என்று சொல்லிக் கொண்டான். என் கையில் பிஸ்கோத்துக்களையும் அளித்தான். நானும் அதை நம்பி அவற்றைச் சிங்பூவிடம் சேர்ப்பித்து விட்டேன். நான் மனமறியாது செய்த இந்தப் பாப கிருத்தியத்தை மன்னித்து விடுங்கள்......"

பாண்டிக்கு நினைவு தவறி விட்டது. வைத்தியர்கள் கவலைக்குறியுடன் அவனை 'ஸ்ட்ரெச்சரி'ல் வைத்து எடுத்துச் சென்றார்கள்.

அங்கிருந்த கைதிகளும் இந்தியர்களும் ஒருங்கே கண்ணீர் வடித்தனர்.

பொற்கைப் பாண்டியனின் வரலாறு யாருக்கும் தெரியாதது அல்ல.

மேஜர் பாண்டியனுக்கும், பொற்கைப் பாண்டியனுக்கும் என்ன வித்தியாசம்! பொற்கைப் பாண்டியன் அரசன். மேஜர் பாண்டியன் சிப்பாய்கள் தலைவன். அவ்வளவுதான். அந்த அரசன் மனத்தில் தோன்றிய நீதி உணர்ச்சியே மேஜரின் உள்ளத்தில் தோன்றியது. இருவர் உடலிலும் ஓடி வந்தது ஒரே தமிழ் இரத்தம்தான்; பண்பாடுதான்.

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram

# நான் முன்பு துவைக்க பயப்பட்ட துணிகளை – இப்பொழுது பயமின்றி லக்ஸினால் துவைக்கிறேன்



உதாரணமாக கம்பளித் துணிகள்!
சரியான வழியில் எளிதான முறை
யில், சுருங்குமோ, கிழியுமோ அல்லது
பின்னிக் கொள்ளுமோ என்ற பய
மின்றி வெளுக்க அவைகளை லக்ஸ்
தூள்களினால் சுத்தம் செய்வதுதான்.
லக்ஸ் தூள்கள் மிகவும் தூய்மையா
னவை, மென்மை வாய்ந்தவை;
ஆகிய நேர்த்தியான கம்பளி
ஆடைகளுக்கு எப்போதும்
பாதுகாப்புத் தருபவை.

நேர்த்தியான துணிகளுக்கு நெடுங்காலம்
புதுமைத் தோற்றம் அளிப்பது லக்ஸ்




L.X. 132-60 TM.

இந்தியாவில் தயாரித்தது

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# விம் உங்கள் வீட்டிற்கு அவசியம்

## —சீக்கிரமாக, பிரகாசமாக சுத்தம் செய்ய






பிசுக்கு அழுக்கையும், எண்ணெய்ப் பசையையும் வெகு சீக்கிரமாக நீக்க, விஞ்ஞான முறையில் சுத்தம் செய்யும் விம்மை ஒரு ஈரத்துணியில் தூவி, தேய்த்து, அலம்பி, உலரவிட வேண்டியதுதான். என்ன பள பளப்பு பாருங்கள். சமையல் பாத்திரங்கள், எவர்ஸில்வர் பாத்திரங்கள், சாதாரண பீங்கான் சாமான்கள், கண்ணாடிப் பாத்திரங்கள், கைகள், பாத்திரங்கள் துலக்கும் பேஸின்கள், பளிங்குத் தரைகள் முதலியன சுத்தம் செய்ய விம் உபயோகியுங்கள். சிக்கனமானதா? சந்தேகமில்லாமல்! ஒரு துளி விம் வெகுவாக சுத்தம் செய்கிறது!

| தரை | கண்ணாடிச் சாமான்கள் | சமையல் பாத்திரங்கள் |
|---|---|---|
|  |  |  |

**விஞ்ஞான முறையில் சுத்தம் செய்யும் பவுடர் விம்**

V. 96A-50 TM